# அறவியல் நோக்கில் சங்க இலக்கியங்கள்

பெரியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக (Ph.D.)
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

கு. கௌரி

நெறியாளர்

முனைவர் மோ.தமிழ்மாறன், எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்., பிஎச்.டி.,

பேராசிரியர்






தமிழ்த்துறை

பெரியார் பல்கலைக்கழகம்

பெரியார் பல்கலை நகர்

சேலம்–636 011


ஜூலை – 2014




முனைவர் மோ.தமிழ்மாறன்
பேராசிரியர்
தமிழ்த்துறை
பெரியார் பல்கலைக்கழகம்
பெரியார் பல்கலைநகர்
சேலம்–636 011.
மின்னஞ்சல் : marantamil1960@gmail.com
அலைபேசி – 9486741793, 9791841958

நாள் : 31.07.2014.

## நெறியாளர் சான்றிதழ்

திருமதி கு.கெளரி அவர்களால் **அறவியல் நோக்கில் சங்க இலக்கியங்கள்** எனும் தலைப்பில் அளிக்கப் பெற்றுள்ள இந்த ஆய்வேடு, பெரியார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டப் பேற்றிற்காக, பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில், என் நெறிகாட்டலின் கீழ் ஆய்வு நிகழ்த்தி எழுதப் பெற்றதாகும். இந்த ஆய்வேடு இவரால் தன்னியலாக உருவாக்கப் பெற்றதென்றும், இது இதற்கு முன் எந்தப் பட்டப்பேற்றிற்காகவும் எந்தப் பல்கலைக்கழகத்திற்கும் வழங்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கப் பெறுகிறது.

31.7.2014

துறைத்தலைவர்

**முனைவர் தி.பெரியசாமி**
பேராசிரியர் - தலைவர், தமிழ்த்துறை,
பெரியார் பல்கலைக்கழகம்,
பெரியார் பல்கலை நகர்,
சேலம்-636 011.

31/07/2014

ஆய்வு நெறியாளர்

Dr. M. TAMILMARAN, Ph.D.,
Professor
Dept. of Tamil
Periyar University, Salem-636 011.
Tamil Nadu, India.



**கு.கௌரி, எம்.ஏ., எம்.ஃபில்.,**
முழுநேர முனைவர்பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
பெரியார் பல்கலைக்கழகம்
பெரியார் பல்கலை நகர்
சேலம்–636 011.

நாள் : 31.07.2014.

# ஆய்வாளர் உறுதிமொழி

பெரியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக **அறவியல் நோக்கில் சங்க இலக்கியங்கள்** எனும் தலைப்பில் பெரியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில், பேராசிரியர் முனைவர் மோ.தமிழ்மாறன் அவர்களின் நெறிகாட்டுதலின்கீழ் ஆய்வு நிகழ்த்தி எழுதப் பெற்ற இந்த ஆய்வேடு, என் முயற்சியால் உருவானது என்றும், இதற்கு முன்வேறு எந்தப் பட்டப்பேற்றிற்காகவும் எந்தப் பல்கலைக்கழகத்திற்கும் இந்த ஆய்வுரை அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

கு.கௌரி
**ஆய்வாளர்**

## நன்றியுரை

முனைவர்பட்டப் பேற்றிற்காக இவ்வாய்வை மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த பெரியார் பல்கலைக்கழகத்திற்கு எனது முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்கு உதவிய தமிழ்த்துறைத்தலைவர் பேராசிரியர் **முனைவர் தி.பெரியசாமி** அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த ஆய்வேடு செம்மையான முறையில் உருவாவதற்கு என்னை நெறிப்படுத்தி ஆய்வுக்கு வேண்டிய பல நூல்களைக் கொடுத்தும், ஆய்வுத் தொடர்பான பல கருத்துக்களை வழங்கியும் ஊக்கமளித்தும் எனது ஆய்வு நிறைவுபெற பல்லாற்றானும் உதவிய என் நெறியாளர் பேராசிரியர் **முனைவர் மோ.தமிழ்மாறன்** அவர்களுக்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

உதவிப் பேராசிரியர்கள் **முனைவர் வை.இராமராஜபாண்டியன், முனைவர் சு.வேலாயுதன், முனைவர் இரா.வசந்தமாலை, முனைவர் க.மைதிலி** ஆகிய அனைவருக்கும் எனது நன்றியை உரித்தாக்குகின்றேன்.

மேலும் எனது படிப்பிற்கு உதவிய எனது பெற்றோர் ப.குருநாதன், கு.தனபாக்கியம், எனது சகோதரர்களான கு.நாகராஜன், கு.ராஜராஜன், கு.ராஜேந்திரராஜன் அவர்களுக்கும், எனது கணவர் திரு இரா.சுரேஷ் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குப் பல வகையிலும் உதவிபுரிந்த நண்பர்களுக்கு நன்றி. ஆய்வேட்டைக் கணினியில் தட்டச்சு, கட்டமைப்பு ஆகிய பணிகளை செய்து தந்த சி.கௌதமன் அவர்களுக்கு நெஞ்சம் நிறைந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**கு. கௌரி**

# சுருக்கக்குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| இனி. | – | இனியவை நாற்பது |
| இன்னா. | – | இன்னா நாற்பது |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| ஐங்கு. | – | ஐங்குறுநூறு |
| கலித். | – | கலித்தொகை |
| குறள். | – | திருக்குறள் |
| குறிஞ்சி. | – | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | – | குறுந்தொகை |
| சிறுபாண். | – | சிறுபாணாற்றுப்படை |
| தொல்.பொருள்.அகத். | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையில் |
| தொல்.பொருள்.களவு. | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் களவியல் |
| தொல்.பொருள்.கற்பு. | – | தொல்காப்பியப் பொருளதிகாரம் கற்பியல் |
| நாலடி. | – | நாலடியாாா |
| நான். | – | நாண்மணிக்கடிகை |
| ப. | – | பக்க. |
| பக். | – | பக்கங்கள் |
| பதி. | – | பதிப்பாசிரியர் |
| பட்டின. | – | பட்டினப்பபாலை |
| பதிற்று. | – | பதிற்றுப்பத்து |
| பரி. | – | பரிபாடல் |

| | | |
|---|---|---|
| பழ. | – | பழமொழி நானூறு |
| புறம். | – | புறநானூறு |
| பெரும். | – | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர். | – | பொருநராற்றுப்படை |
| மதுரைக். | – | மதுரைக்காஞ்சி |

# பொருளடக்கம்

# முன்னுரை

உலகத்தில் பேசப்பட்டும் எழுதப்பட்டும் வருகின்ற எண்ணற்ற மொழிகளுள் இலக்கணச் செம்மையும் இலக்கிய வளமும் கொண்ட தொன்மையான மொழியாகத் தமிழ்மொழி விளங்கி வருகின்றது. மூவாயிரம் ஆண்டுகாலத் தொன்மையான, தொடர்ச்சியான இலக்கிய வரலாறு தமிழ்மொழிக்கு உண்டு. இலக்கிய வரலாற்று ஆசிரியர்களும், மொழியியலாளர்களும் தமிழ் இலக்கிய வரலாற்றை சங்ககால இலக்கியங்கள் (கி.மு.300 முதல் கி.பி.300வரை), சங்கம் மருவியகால இலக்கியங்கள் (கி.பி.300 முதல் – கி.பி.700 வரை), பக்தி இலக்கியகாலத்தில் தோன்றிய இலக்கியங்கள் (கி.பி.700 முதல் கி.பி.1200 வரை), இடைக்கால இலக்கியங்கள் (கி.பி.1200 முதல் கி.பி.1800 வரை), இக்கால இலக்கியங்கள் (கி.பி.1800 முதல் இன்றுவரை) என ஐந்துகாலகட்ட இலக்கியங்களாக வகைப்படுத்தியுள்ளனர். அவற்றுள் முதல் வகையைச் சார்ந்தன சங்கஇலக்கியங்கள்.

உலக இலக்கிய வரிசையில் சிறப்பிடம் பெற்ற அறிவுக் கருவூலங்களாக விளங்குகின்ற சங்க இலக்கியங்கள் தொல்பழந்தமிழரின் வாழ்வியலைக் காட்டி நிற்கும் கலைக்களஞ்சியங்களாவும் விளங்குகின்றன. அரசன், ஆட்சிநெறிகள், சமுதாயநிலை, மக்களின் பொருளியல்நிலை போன்றனவற்றையும் புலப்படுத்தி நிற்கும் ஆவணங்களாகவும் அவை திகழ்கின்றன. தமிழ்மண்ணின் மணம் கமழும் இயற்கை இலக்கியங்களாகவும் தமிழ்ப்பண்பாட்டின் அடையாளங்களை உலகுக்குக் காட்டி நிற்கும் கருவிகளாகவும் விளங்குகின்ற சங்கஇலக்கியங்களைக் காலந்தோறும் பல ஆய்வாளர்கள் ஆராய்ந்துள்ளனர். பல்துறைச் சிந்தனைகளை உள்ளடக்கி

நிற்கும் சங்க இலக்கியங்களை அறவியல் நோக்கில் ஆராய முற்படுகிறது. இந்த ஆய்வு,

**ஆய்வுத் தலைப்பு**

**அறவியல் நோக்கில் சங்க இலக்கியங்கள்** என்பது இந்த ஆய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

தமிழின் தொன்மையான இலக்கியமாகவும், பண்டைத் தமிழகத்தின் வரலாற்றை அறிந்து கொள்வதற்குரிய வரலாற்றுச் சான்றுகளாகவும் விளங்குகின்ற சங்க இலக்கியங்கள் தமிழ்ப் பண்பாட்டின் கருவூலங்களாகவும் விளங்குகின்றன. வேட்டைத் தொழிலையே முதன்மையானத் தொழிலாகக் கொண்டிருந்த இனக்குழுச் சமூகம், வேளாண்மைச் சமூகம், உடமைச்சமூகம் என வளர்ச்சி பெற்ற பழந்தமிழ்ச் சமூகம் ஒவ்வொரு நிலையிலும் சில தனித்த பண்புகளைத் தமக்குரியனவாகக் கொண்டிருந்ததை அறியமுடிகின்றது.

உள்ளடக்கப் பொருண்மை அடிப்படையில் சங்க இலக்கியங்கள் அக இலக்கியங்கள், புற இலக்கியங்கள் என பாகுபடுத்தப்பட்டுள்ளன. எனவே,

- சங்க அகஇலக்கியங்கள் அறநெறிகள் எனக் கூறுபனவற்றை இனங்காணுதல்.
- புற இலக்கியங்களில் காணலாகும் அறநெறி குறித்த கருத்தாக்கங்களைக் கண்டறிதல்

- தனிமனித அறநெறிகளாக மட்டுமன்றி, சமுதாய அறங்களாகச் சங்க இலக்கியங்களில் காணப்படும் பதிவுகளைப் புலப்படுத்துதல்.
- அறநெறி பாடியுள்ள புலவர்கள் இவர்களெனச் சுட்டி, அவர்கள் அறநெறிகளைப் புலப்படுத்தியுள்ள பாங்குகளைப் புலப்படுத்துதல்.
- அறநெறி கருத்தாக்கங்களின்வழி உருவாக்கப்பட்டுள்ள சமூக விழுமியங்களாகச் (Social values) சங்க இலக்கியங்கள் சுட்டுவனவற்றைக் காணுதல்

ஆகியன இந்த ஆய்வின் நோக்கங்களாகும்.

**ஆய்வுத் தரவுகள்**

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு முதலிய எட்டுத்தொகை நூல்களும், திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறும்பாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் முதலிய பத்துப்பாட்டு நூல்களும் இந்த ஆய்விற்கான முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வுநூல்கள், ஆய்வுக்கட்டுரைகள் இந்த ஆய்வுக்குரிய துணைமை ஆதாரங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

மு.வரதராசனாரின் **பழந்தமிழ் இலக்கியங்களில் இயற்கை,** மா.இராசமாணிக்கனாரின் **பத்துப்பாட்டு ஆராய்ச்சி,** வ.சுப.மாணிக்கத்தின்

**தமிழ்க்காதல்**, தனிநாயக அடிகளாரின் **தமிழில் இயற்கைக் கவிதைகள்**, க.கைலாசபதியின் **தமிழில் வீரயுகப் பாடல்கள்,** முத்துக்கண்ணப்பரின் **தமிழில் நெய்தல் திணை,** ந.வீ.செயராமனின் **தமிழில் பாடாண் திணை,** வெ.த.மாணிக்கத்தின் **மருதம்** முதலியன சங்க இலக்கியம் குறித்த ஆய்வுகளுள் குறிப்பிடத்தக்கனவாகும். இவர்களைப் போலவே, ஆய்வாளர் பலர் சங்க இலக்கியம் குறித்த பல்வேறு தலைப்புகளில் ஆய்வுகளை நிகழ்த்தியுள்ளனர். அந்த ஆய்வுகளை அடியொற்றி இந்த ஆய்வு நிகழ்த்தப்படுகின்றது.

**ஆய்வு அணுகுமுறை**

சங்க இலக்கியப் பரப்பினுள் காணலாகும் அறநெறி குறித்த கருத்தாக்கங்கள் அனைத்தையும் தொகுத்து, அவற்றை அகஇலக்கியம் சுட்டும் அறம், புற இலக்கியங்கள் காட்டும் அறம், சமுதாய அறம் என பகுப்பாய்வு செய்து ஆராய்வதால் **பகுப்பாய்வு அணுகுமுறையும்** (Analytical Study), அவற்றை விளக்கி உரைக்கும் **விளக்கமுறை அணுகுமுறையும்** (Descriptive Approach) இந்த ஆய்வில் பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வேட்டின் அமைப்புமுறை**

முன்னுரை, முடிவுரையைத் தவிர்த்து இந்த ஆய்வேடு,

1. தமிழ் இலக்கியங்களில் அறம்
2. அகஇலக்கியங்களில் அறம்
3. புற இலக்கியங்களில் அறம்

4. சங்க இலக்கியங்கள் சுட்டும் சமுதாய அறங்கள்

5. அறம் பாடியுள்ள புலவர்கள்

என்னும் ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது.

**முன்னுரை**யில் ஆய்வுத்தலைப்பு, ஆய்வுநோக்கங்கள், ஆய்வுத் தரவுகள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வேட்டின் அமைப்புமுறை ஆகியன விளக்கப்பட்டுள்ளன.

**தமிழ் இலக்கியங்களில் அறம்** என்னும் முதல் இயல் சங்க இலக்கியங்கள், சங்கம் மருவியகால இலக்கியங்கள், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், இக்கால இலக்கியங்கள் என தமிழ் இலக்கியப் பரப்பினுள் நெட்டோட்டமாகக் காணப்படுகின்ற அறம் குறித்த சிந்தனைகளைத் தொகுத்து ஆராய்வதாக அமைந்துள்ளது.

களவு ஒழுக்கத்தையும், கற்பு ஒழுக்கத்தையும் விரிவாகப் பேசுகின்ற அக இலக்கியங்களில் களவு ஒழுக்கத்தின் போதும், கற்பு ஒழுக்கத்தின்போதும் பின்பற்றப்பட்டனவாகக் கூறப்படுகின்ற நெறிகள், பண்புகள் ஆகியன **அக இலக்கியங்களில் அறம்** என்னும் இரண்டாமியலில் ஆராயப்பட்டுள்ளன.

**புறஇலக்கியங்களில் அறம்** என்னும் மூன்றாமியலில் ஆட்சி, போர் முதலிய அரசனின் செயற்பாடுகளிலும், ஈகை, விருந்து பேணுதல் முதலிய மக்கள் செயற்பாடுகளிலும் பின்பற்றப்பட்ட நெறிகள் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

**சங்க இலக்கியங்களில் சமுதாய அறம்** என்னும் நான்காம் இயல், சங்ககால மக்களால் வாழ்வியல் நெறிகளாகப் பின்பற்றப்பட்டு, பின்னர் சமுதாய விழுமியங்களாக (social values) உருவான அறநெறி கருத்தாக்கங்களை ஆராய்வதாக அமைந்துள்ளது.

அறக்கருத்தாக்கங்களை தம் படைப்புகளில் வலியுறுத்திப்பாடியுள்ள புலவர்களைச் சுட்டி, அவர்கள் அறம் பாடியுள்ள பாங்கை, **அறம் பாடியுள்ள புலவர்கள்** எனும் ஐந்தாமியல் ஆராய்ந்துள்ளது.

ஆய்வின் விளைவாகக் கண்டறியப்பட்டுள்ள முடிபுகள் **முடிவுரையில்** தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்களின் விவரங்கள் **துணைநூல் பட்டியலில்** கொடுக்கப்பட்டுள்ளன.

# இயல் – 1

# தமிழ் இலக்கியங்களில் அறம்

இலக்கியம் என்பது மனிதவாழ்க்கையின் வெளிப்பாடு ஆகும். ஓர் இலகிய நூல் வெவ்வேறு மனநிலைக்கு வெவ்வேறு உணர்ச்சிகளை எழுப்ப வல்லது. மனித இனத்தின் அனுபவங்களைக் கலை நயத்தோடு இலக்கியம் எடுத்துக் கூறுகிறது. அது, வாழ்க்கையில் நிகழும் பண்பு நலன்களை எடுத்துரைக்கிறது. மனிதன் இல்லையெனில் இலக்கியம் இல்லை எனலாம். பண்டைத் தமிழர் அறநெறிபோற்றி வாழ்ந்தனர். அவர்கள் அறவாழ்வின் செம்மையை விளக்குவன பண்டைத் தமிழ் இலக்கியங்கள். பழந்தமிழ் இலக்கியம் முதல் தற்காலத்தமிழ் இலக்கியம் வரை அறம் கூறப்பட்டுள்ள தன்மைகளை இவ்வியல் ஆராய முற்படுகிறது.

**அறம் விளக்கம்**

அறம் என்பது ஒழுக்கம், கடமை, நோன்பு, தருமம், கற்பு, இல்லறம், துறவறம், நல்வினை, அறநூல், அறக்கடவுள் தருமதேவதை போன்ற பல சொற்களில் வழங்கப்படுகிறது. இவ்வுலகில் நாம் நினைத்து மகிழும் இளமை, தேடிச் சேர்க்கும் செல்வம், வளர்ந்து கொண்டிருக்கும் யாக்கை யாவும் அழியும் தன்மையன. ஆனால் புகழ் ஒன்றே அழியாதது. அதுவே அறம் சார்ந்திருப்பது. மனத்தில் மாசில்லா தன்மையே அறத்தின் மாண்பாகும். அறம் மனித வரலாற்றுடன் தொடர்புடையதாகும். மனித வளர்ச்சியைப் போன்றே அற வளர்ச்சியும் தொடர்கின்றது.

"அறம் என்பது நல்வினை மாந்தர் யாவரும் நல்வினை செய்ய விரும்புதல் வேண்டும்''[1]

என அறத்திற்கு விளக்கம் கூறப்படுகிறது.

**அறத்தின் தோற்றம்**

அறவாழ்க்கையின் வரலாறும், மனித வாழ்க்கையின் வரலாறும் ஒன்றே. மனித வாழ்க்கை எவ்வாறு படிப்படியாக முன்னேறியும் காலத்தேவைக்கேற்ப மாற்றம் பெற்றும் வளர்கின்றதோ அவ்வாறே அறநெறியும் உடன் வளர்கின்றது. இந்நிலை மனித இனத்துக்குப் பொதுவானது. ஆதி மக்களுடைய வாழ்க்கையில் துல்லியமான அறப்பண்பைக் காணுதல் இயலாது. இருப்பினும் அறத்தின் கூறுகள் காணப்படுகின்றன. அவை இயற்கை விருப்பத்தின் தூண்டல்களாகவும், சமுதாயக் கட்டுப்பாட்டின் விளைவுகளாகவும் அமைந்தவை. நல்லது, கெட்டது என ஆராய்ந்து பார்க்கும் பகுத்தறிவினால் ஏற்பட்ட பண்புகளல்ல அவை. இருப்பினும் அவை மனிதனிடத்தில் தோன்றவில்லையெனில் அவன் விலங்கு நிலையிலேயே இருந்திருப்பான். எனவே மனித குலத்திற்குச் சிறப்புக் குணமாக விளங்குவது அறமாகும்.

பழங்கால மக்கள் பசி, பிணி, பகை, வறுமை ஆகிய வாழ்க்கைப் போராட்டங்களிடையே இன்பமும், பொருளும் பெறப்பல்வேறு நெறிகளையும் பின்பற்றியிருப்பர். இந்நெறிகளில் பிறருக்குத் தீங்கு பயவாத நல்ல நெறியிலேயே பெற வேண்டும் என்ற ஒழுகலாறு கட்டுப்பாடாக கடமை உணர்வாக மக்களிடையே வளர்ந்து ஏற்றுக் கொள்ளப்பட்டிருத்தல் வேண்டும். இவ்வாறு ஏற்றுக் கொள்ளப்பட்ட நெறிகளையே அறங்கள் என இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. அறநெறியில் ஈட்டாத செல்வமும், இன்பமும்

நிலையற்றவை என்று கருதும் நிலை ஏற்பட்டது. வஞ்சனையால் ஈட்டப்பெறும் செல்வமும், இன்பமும் பழியென்று கருதப்பட்டன. அறவழியில் வாழ்தலே சிறப்பு என்றும் பண்டையத் தமிழர் கருதினர்.

> "தொடக்கால மக்களிடத்தில் இன்று நாம் காணும்
>
> அறவுணர்வுகள் இல்லையாயினும் கூடி வாழும் தன்மை,
>
> இரக்கம், சார்புநிலை முதலிய அறக்கூறுகள் காணப்பட்டன''[2]

என்று வாழ்வியற் களஞ்சியம் கூறுகின்றது.

**அறத்தின் வளர்ச்சி**

ஒரு கொள்கை வெற்றி பெற வேண்டுமாயின் பின்பற்றுவோர் பெரும்பான்மையினராய் இருத்தல் வேண்டும். கூடிவாழும் சமுதாய நிலையில் ஒருவருக்கொருவர் உதவுதலும், விட்டுக்கொடுத்தலும், தவிர்க்க இயலாதவையாகி விடுகின்றன. இவற்றின் அடிப்படையிலேயே அறவளர்ச்சியும் அமைந்திருக்கின்றன. அற உணர்வு இன்றைய பக்குவ நிலையை அடைவதற்கு முன் மூன்று நிலைகளைக் கடந்து வந்துள்ளது. அவை,

1. இயல்பூக்க நிலை
2. மரபொழுக்க நிலை
3. மனச்சான்று நிலை என்பனவாகும்.

**இயல்பூக்க நிலை**

காட்டுமிராண்டியாக வாழ்ந்த மனிதன் தன் முரட்டுத்தனத்தை அடக்கி மற்றவர்களது பழக்கவழக்கங்களைப் பின்பற்றிச் சமுதாயத்திற்கேற்ப தனது வாழ்வை அமைத்துக் கொண்டான். இவ்வாறு தன் வாழ்வை

ஒழுங்குப்படுத்திக் கொண்ட நிலையே மனித முன்னேற்றத்திற்கு முதற்படியாகும். இது மனிதனுடைய அறிவையும், துணிவையும், குறிக்கோள்களையும் உயர்த்தியதோடு, அறவாழ்க்கையின் உயிர்நிலையான சமூக அமைப்பிற்கு அடிப்படையாகவும் அமைந்தது.

"இயல்பூக்க நிலையில் அறவுணர்வு, கட்டுப்பாட்டின் கீழ் அமைந்த அறக்கூறாகவே இருந்தது''[3]

என்று கலைக்களஞ்சியம் கூறுகிறது.

**மரபொழுக்க நிலை**

மரபொழுக்க நிலையில் அறநெறி முறைகள் நன்கு அமைய வழி ஏற்படுகின்றது. இதனால் சமுதாய வாழ்வில் ஒற்றுமை வளருகிறது. மரபொழுக்கங்களைக் கொள்வதால் ஒரு தனி மனிதனுக்கு மக்களோடு உறவாடுவதற்கும், நன்மை செய்ய விரும்புவதற்கும் ஏற்ற மனப்போக்குகள் வளர்ச்சியுறுகின்றன. இவை அறவளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் உறுதுணையாக அமைகின்றன.

இவ்வாறு மரபொழுக்க நிலையில் அறநெறிகள் வளர்ச்சியுற்றன என்பதை அறியமுடிகின்றது.

**மனச்சான்று நிலை**

ஒரு தனிமனிதன், தன் மனச்சான்று கூறும் நல்லது, கெட்டது என்ற முடிவுகளை ஒப்புக்கொள்வதால் ஏற்படும் நடத்தையே நன்னடத்தை எனக் கூறப்படுகிறது. அறத்தின் நிறைவை அறிந்துகொள்ள மனச்சான்றே பயன்படுகிறது. மனிதன் அமைப்பையும், அவனது நிலைமையையும் கருத்தில்

கொள்ளும் போது, மனச் சான்றுதான் அவனது இயக்கத்திற்கெல்லாம் தலைமை தாங்கி அவனையே ஆளுகிறது. எதனைச் செய்யக் கடமைப்பட்டுள்ளோம் என்பதை விட எதைச் செய்யக் கூடாது என்பதையே மனச்சான்று எளிதில் கூறுகிறது.

ஒருவன், இது சரியானசெயல், இதனால் அனைவரும் பயனடையக்கூடும் என்ற அறிவோடு முழு மனநோடும் முடிவு செய்து செயல்படும் நிலையே மனச்சான்று நிலையாகும். மனச்சான்று நிலை அறவுணர்வு வளர்ச்சியின் இறுதி நிலையாகும்.

**அறத்தின் நோக்கம்**

அறமல்லாத வழிகளில் வருவது இன்பமே என்றாலும் அதனை ஏற்றுக்கொள்ளகூடாதவை என்பது தமிழர்க் கொள்கையாகும். சமுதாயத்தை உயர்த்துதல் அறத்தின் நோக்கமாகும். தனி மனிதன் தனது கடமைகளைச் சமுதாயத்திற்காக ஆற்றவேண்டும். தனிமனிதன் குடும்பத்துக்காகச் சமுதாயத்துக்காகவும் ஆற்ற வேண்டிய கடமைகளும் அறத்தில் அடங்குவனவாகும். ஒழுக்கத்தின் வளர்ச்சி அறத்தின் நோக்கமாகும். ஒழுக்க நெறியை உள்ளத்தில் அமைத்து அறநெறி நிற்க வேண்டும் என்பதே இதன் கருத்தாகும்.

**தொல்காப்பியம் சுட்டும் அறநெறிகள்**

பொருளிலக்கணம் தமிழ்மொழிக்குத் தொல்காப்பியம் வழங்கிய தனிக்கொடையாகும். இது மக்களின் வாழ்வியல் இலக்கணத்தை வரையறுக்கும் பொருளியல் சுரங்கமாகும்.

"எழுத்தும் சொல்லும் பற்றியே உலகத்து உள்ள எல்லா மொழிகளிலும் இலக்கணம் உள்ளது. எழுத்தையும் சொல்லையும் பயன்படுத்தும் மனிதனுடைய வாழ்க்கையை வாழ்க்கையின் இலக்கணத்தை உணர்த்தும் இலக்கண நூல் உலகத்து வேறெம்மொழியிலும் இல்லை. மனிதனுடைய வாழ்க்கையை உணர்த்தும் பகுதியாக இலக்கணமாகத் தொல்காப்பியத்தின் பொருளதிகாரம் விளங்குகின்றது.''[4]

என்று தொல்காப்பியச் சிறப்பினை உணர்த்துகிறார் மா.இராசமாணிக்கனார்.

பண்டைத்தமிழர் தம் வாழ்வின் குறிக்கோள்களாக அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் கொண்டனர். அவர்கள் வாழ்க்கையில் இம்மூன்றும் சிறந்து விளங்கிய நிலையைத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. தமிழர்தம் வாழ்க்கையை அகம், புறம் என்னும் இருவகையாக பகுத்தனர். இவ்விருவகை வாழ்க்கை நெறிகளும் அறத்தின் தொடர்பு கொண்டு அறம், பொருள், இன்பம் என வளர்ச்சியுற்ற நிலையினை,

"இன்பமும், பொருளும் அறனும் என்றாங்கு

அந்நிலை மருங்கின் அறமுத லாகிய

மும்முதற் பொருட்கும் உரிய வென்ப'' (தொல்.பொருள்.அகத்.49)

என்ற நூற்பா குறிப்பிடுகின்றது. பண்டையத் தமிழர் தாம் தனித்து வாழ்ந்த அக வாழ்விலும் பிறருடன் கூடி வாழ்ந்த சமுதாய வாழ்விலும் அறநெறிகளைப் பின்பற்றி வாழ்ந்தனர். அவர்கள் பின்பற்றிய அறநெறிகளைத் தொல்காப்பியப் பொருளதிகாரம் வகுத்துக் காட்டுகின்றது.

ஒவ்வொரு திணைக்கும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவற்றை வரையறை செய்கின்றார் தொல்காப்பியர். முதற்பொருள் என்பவை நிலம் முதலியவற்றை குறிப்பதாகும். பதினான்கு வகையான கருப்பொருளைக் கூறுகின்றார். உரிப்பொருள் என்பது அந்தந்த நிலத்து மக்களின் சிறப்பான ஒழுக்கலாற்றைக் குறிக்கிறது.

| | | |
|---|---|---|
| குறிஞ்சி | – | புணர்தலும் புணர்தல் நிமித்தமும் |
| முல்லை | – | இருத்தலும் இருத்தல் நிமித்தமும் |
| மருதம் | – | ஊடலும் ஊடல் நிமித்தமும் |
| நெய்தல் | – | இரங்கலும் இரங்கல் நிமித்தமும் |
| பாலை | – | பிரிதலும் பிரிதல் நிமித்தமும் |

இவ்வொழுக்கங்கள் அனைத்தும் அறத்தை அடிப்படையாகக் கொண்டவை என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

**களவில் அறம்**

அகத்திணை களவு, கற்பு என இருவகைப்படும். ஒத்த அன்பு கொண்ட தலைவனும், தலைவியும் பிறர் அறியாமல் களவில் ஈடுபடுவர். காதலின் முதல் நிலை களவு எனப்படும். களவு வாழ்க்கை ஒத்த அன்பினால் நிகழக் கூடியதே ஆகும். புறத்தார்க்கு இத்தன்மையது என எடுத்துரைக்க முடியாததே களவு எனப்படும்.

**அறத்தொடு நிற்றல்**

அறத்தொடு நிற்றல் என்ற தனிக்கிளவி உண்டு. இதனை, "புரைதீர் கிளவி'' (தொல்.பொருள்.களவு.112) என்று தொல்காப்பியர் குறிப்பிடுவர்.

தோழி களவை கற்பாக்குவதும், கற்பறத்தை வலியுறுத்துவதும் அறத்தொடு நிற்றல் எனப்பபடும். களவொழுக்கத்தைப் பெற்றோருக்கு வெளிப்படுத்துங்கால் தலைவி ஏற்கனவே கற்பு நெறிப்பட்டுவிட்டாள். அறத்தொடு பொருந்த நடந்துள்ளாள் என்பதை வலியுறுத்துவதே தோழியின் நோக்கமாகும். தோழி, தலைவியின் காதலன் எளியவன், பெருமையுடையவன், வேட்கையுடையவன் என்றெல்லாம் தாயிடம் கூறி அறத்தொடு நிற்கும் செய்தியைத் தொல்காப்பியம் தெளிவுபடுத்துகிறது.

"காப்பு கைமிக்கு காமம் பெருகினும்

நொதுமலர் வரையும் பருவம் ஆயினும்

வரைவெதிர் கொள்ளாது தமரவன் மறுப்பினும்

அவனூ றஞ்சும் காலம் ஆயினும்

அந்நாலி லிடத்தும் மெய்ந்நாண் ஓரீஇ

அறத்தொடு நிற்றல் தோழிக்கும் உரித்தே''[5]

என்ற நூற்பாவின்வழி தோழி அறத்தொடு நிற்கவேண்டிய இடம்குறித்து இறையனார் அகப்பொருள் கூறுகின்றது.

**கற்பறம்**

கற்பின் இலக்கணம் கூறும் தொல்காப்பியர்,

"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்

கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்

கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே''

(தொல்.பொருள்.களவு.140)

என்பர். இந்நூற்பா கரணங்களுடன் மணவினை நிகழ்ந்ததைக் காட்டுகிறது.

கொடுப்போர் இன்றியும் கரணம் நிகழ்ந்ததை,

“கொடுப்போர் இன்றியும் கரணமுண்டே

புணர்ந்துடன் போகிய காலையான’’ (தொல்.பொருள்.களவு.140)

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

தலைவன், தலைவி இருவரிடையே களவில் கட்டுண்டு கிடந்த நெஞ்சத்தளை அவிழ்கிறது. மகிழ்ச்சி பெருகுகிறது. தலையிடம் தலைவன் உரிமை உடையவன் ஆகிறான். மனைவாழ்க்கையை அறம், பொருள், இன்பமாகிய நன்நெறியில் செலுத்துகின்றனர். அந்தணர், சான்றோர் ஆகியோரிடத்தில் அறமுறைப்படி நடந்து கொள்கின்றனர். இல்வாழ்க்கையின் பயனாகிய மக்கட் பேற்றைப் பெறுகின்றனர். தலைவன் பொருள் வயிற்பிரிவு மேற்கொண்டு இல்லத்துக்கு வேண்டிய பொருளீட்டி வருகிறான். விருந்தினரை அழைத்து உணவளிக்கச் செய்து விருந்தோம்பலாகிய அறத்துக்குத் துணை நிற்கிறான். தலைவன்தீய ஒழுக்கத்தில் ஈடுபட்டிருப்பினும் அதை மன்னித்து விடுமாறு தலைவிடம் வேண்டுகிறான். இல்லத்தில் இருக்கும் பெண்ணின் குணங்களாக,

“கற்பும் காமமும் நாற்பா லொழுக்கமும்

மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்

விருந்து புறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்’ (தொல்.பொருள்.களவு.150)

ஆகியவற்றைத் தொல்காப்பியர் குறிப்பிடுவர். தாயைப் போல் அரவணைத்துக் கொள்ளும் பண்புடையவள் தலைவி. தலைவனின் சோர்வினைப் போக்கி,

அவனைக் காத்தல் தலைவியின் கடமையாகும் என்று தொல்காப்பியம் மொழிகின்றது.

### தொல்காப்பியர் கூறும் புறப்பொருள் அறநெறிகள்

அகத்திணையும், புறத்திணையும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டவையாகும். அகமும், புறமும் தொடர்பு கொண்ட நிலையை இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன. வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை ஆகிய புறத்திணைகள் தமிழரின் போர் அற அடிப்படையிலான வாழ்க்கை நெறிகளைப் பற்றிக் கூறுகின்றன.

### வெட்சித்திணை

பகைவர் நாட்டு ஆநிரைகளைக் கவர்ந்து வருவது வெட்சித்திணை எனப்படும். மன்னனும் வீரரும், வெட்சி மலர்களை அணிந்து கொண்டு செல்வர்.

> "ஆவைக் காக்க வேண்டும் என்று எண்ணியது அறநோக்கு போருக்கும் காதலுக்கும் புகழ் அறநெறி வேண்டாம் என்று பிற நாட்டார் கூறினாலும், தமிழர்கள் இரண்டுக்கும் அடிப்படையாக அறத்தையே கொண்டனர். ஆநிரை கவர்தல் அறத்தின் பொருட்டே அன்றிப் பிறிதின் பொருட்டன்று''[6]

என்பது சி.இலக்குவனாரின் கருத்தாகும். வெட்சித் துறைகளுள் பாதீடு, கொடை ஆகிய துறைகள் அறம் பற்றி கூறுகின்றன.

**வஞ்சித்திணை**

மண்ணாசை கொண்ட மன்னனும், அதைத் தடுக்க நினைக்கும் மன்னனும் எதிர் கொண்டு போரிடுதல் வஞ்சித்திணை எனப்படும்.

"மண்ணாசை கொண்டு வருவான் செய்யும் போர், அவன் ஆசை கெட, அவனை வென்று தன் மண் காக்கச் செல்வான்போர் ஆகிய இரண்டும் அறத்தொடுபடா முன்னது அழிவுப் போராக, பின்னதே அறத்தொடுபட்ட ஆக்கப்போர். ஆதலின் புலவர்கள் பாராட்டைப் பெறும் உரிமையுடையது''[7]

என்று கா.கோவிந்தன் அறநெறி பற்றிக் கூறுகின்றார்.

**உழிஞைத்திணை**

பகைவரின் மதிலை முற்றுகையிடுதலும், கொள்ளுதலும் ஆகிய போர் முறைகளைக் கூறுவது உழிஞைத்திணை எனப்படும்.

"மடிந்த உள்ளத்தோனையும் மகப் பெறாதோனையும் மயிர் குலைந்தோனையும் அடிபிறக்கிட்டோனையும் பெண் பெயரோனையும் படையிழந்தோனையும் ஒத்த படையெடாதோனையும் பிறவும் இத்தன்மை உடையோரையும் கொல்லாது விடுத்தலுங்கூறிப் பொருதலும் முதலியனவாம்''[8]

என்று போரின்போது மேற்கொள்ள வேண்டிய அறங்கள் பற்றி நச்சினார்க்கினியர் கூறுகின்றார்.

**தும்பைத்திணை**

வலிமைபெற்ற இருவேந்தர்களுக்கிடையே நடைபெறும் போர் தும்பைத்திணை எனப்படும். வேந்தரும் வீரரும் தும்பைப் பூவைச் சூடிக் கொண்டு போர் மேற்கொள்வர்.

> "தனிமனிதன் நலத்துக்காக நிகழ்த்தும் போர் அறம் அல்லாத போர் என்றம், பொது மக்களின் நலனுக்காக நிகழ்த்தும் போர் அறம் என்றும், ஆன்றோர் ஆராய்ந்து முடிவு செய்தனர். அம்முடிவையே தம் முடிவாகக் கொண்ட தொல்காப்பியனார் 'மேவற்றாகும்' எனவெட்சிப்போரையும் 'அடல்குறித்தன்று' என வஞ்சிப் போரையும் 'அனைநெறிமரபு' என உழிஞைப் போரையும் 'சிறப்பிற்று என்ப' எனத்தும்பைப் போரையும் அமைவு செய்தனர்''[9]

என்பர் அ.கி.நாயுடு. இக்கருத்திலிருந்து தொல்காப்பியர் கூறும் வெட்சி, துஞ்சி, உழிஞை, தும்பை ஆகிய போர்கள் அறத்தின்பாற்பட்டன என்று அறியமுடிகின்றது.

**பாடாண்திணை**

பாடாண்திணையில் காணப்படும் வாயுரை வாழ்த்து, செவியறிவுறுஊவு போன்ற துறைகள் அரசருக்கு அறநெறிகளை எடுத்துக்கூறும் போக்கில் அமைந்துள்ளன. வாயுரை வாழ்த்து என்று வெறுஞ்சொல் இன்றி 'இதைச் செய்தால் நலம் பயக்கும்' என்று அரசருக்கு அறநெறி பற்றிக் கூறுகின்றது. இவ்வாறு அறம் கூறும் முறையில் புறப்பொருளும் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது.

**சங்க அகஇலக்கிய அறநெறிகள்**

பண்டைத்தமிழர் காதல், வீரம் ஆகியவற்றில் சிறந்து காணப்பட்டனர். எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் சங்க இலக்கியங்களாகும். பழந்தமிழர் வாழ்க்கையை அகம், புறம் என இரண்டாகப் பகுத்துக் கொண்டனர். ஒருவனும் ஒருத்தியும் தமக்குள் காதல் கொண்டு இன்புறும் ஒழுக்கத்தினை அகம் என்றனர். இவற்றிக்கு மாறானவை புறம் என்றனர்.

பண்டையத் தமிழரின் வாழ்க்கை அறத்தை அடிப்படையாகக் கொண்டதாகும்.

"அகத்துறை இலக்கியங்களில் எல்லாம் உலகிலேயே ஒப்பற்று விளங்குவது தமிழில் உள்ள அகத்துறை இலக்கியங்களே''[10]

என்று தனிநாயக அடிகளார் அகத்துறைப் பற்றி கூறுகின்றார்.

**பெண்களின் கடமை அறம்**

தலைவன் பொருள்வயிற் பிரிந்த காலத்தில் தலைவி இல்லறக் கடமைகளை மேற்கொள்கிறாள். வீடும் நாடும் நலம்பெற மன்னனை வாழ்த்தி பசி, பிணி நீங்கி வாழவேண்டுகிறாள்.

"மாரி வாய்க்க வளநனி சிறக்க

என வேட்டோளே, யாயே; யாமே

பூத்த மாஅத்து, புலால் அம் சிறுமீன்

தன்துறை ஊரன் தன்னொடு'' (ஐங்கு.10)

என்றும்,

“நெற்பல பொலிக பொன்பெரிது சிறக்க

நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்

யாணர் ஊரன் வாழ்க'' (ஐங்கு.10)

என ஐங்குறுநூற்று தலைவி நாடு வளம் பெற வேண்டும் என்று வாழ்த்துகிறாள். மேலும் உலக வாழ்வுக்கு இன்றியமையாத மழை வளத்தையும் அதன் விளைவாக உருவாகும் செல்வ செழிப்பையும் வழங்க வேண்டுமென்று இறைவனிடம் வேண்டுகிறார். நாடு வளமையுடன் காணப்பட்டால்தான் வறுமையின்றி வாழமுடியும் என்ற அறநோக்கோடு பெண்கள் வாழ்ந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

**கற்பறம்**

கற்பு என்பது இல்லத்தார் மேற்கொள்ள வேண்டிய கட்டுப்பாடாகும். இதுவே அறம் எனப்படும். கற்புடைய பெண்கள் தெய்வங்களை வணங்கும் வழக்கம் இல்லை. தன் கணவனையே தெய்வமாகப் போற்றி ஒழுகினர்.

“வறனோடின் வையத்து வான்தருங் கற்பினாள்

திறனோடிப் பசப்பூர்த லுண்டென

அறனோடி விலங்கின்றவ ராள் வினைத் திறத்தே'' (கலித்.133)

கற்பின் பெருமையைப் பற்றி இப்பாடல் விளக்குகிறது. தலைவன் வரும் வழியில் துன்பம் ஏற்படக்கூடாது என்று தலைவி மழை, கானல், காற்று முதலியவற்றை வேண்டுகிறாள். இதன் மூலம் தலைவியின் கற்பின் பெருமையை அறியமுடிகிறது.

**சங்கப் புறஇலக்கிய அறநெறிகள்**

சங்க இலக்கிய புறப்பாடல்கள் அக்கால போர்க்களநிகழ்ச்சிகள், வாழ்வியல் உண்மைகள், சமுதாயம் தொடர்பான நிகழ்ச்சிகள் ஆகியவை அறத்துடன் தொடர்பு கொண்டவை என்பதைப் புலப்படுத்துகின்றன.

> "சங்க அகப்பாடல்களில் அகவுலக அறங்களும் புறப்பாடல்களில் புறவுலக அறங்களும் பொதிந்துள்ளன. இரண்டும் ஒன்றை ஒன்று சார்ந்தன என்பதைச் சங்கச் செய்யுட்கள் தெளிவாகக் காட்டுகின்றன''[11]

என்று அகஇலக்கியங்கள் உணர்த்தும் அறங்களுக்கும் புற இலக்கியங்கள் உணர்த்தும் அறங்களுக்கும் இடையிலான தொடர்பைக் கூறுவர்.

**அரசியல் அறம்**

மூவேந்தர்கள் நாட்டின் சிறுசிறு நிலப்பகுதிகளை ஆண்டு வந்தனர். வேந்தர் சிற்றசர், வேளிர் ஆகியோரின் ஆட்சி சிறப்பையும் அரசியலறங்களையும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. சங்ககாலத்தில் மன்னன் மக்களுக்கு உயிராக விளங்கினான் என்பதை,

> "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
> மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'' (புறம்.186)

என புறநானூறு குறிப்பிடுகின்றது. இவ்வுலகத்துக்கு அரசனது முறையான ஆட்சியே உயிர் என்று மோசிகீரனார் பாடியுள்ளார். தான் மக்களுக்கு உயிர் என்பதை உணர்ந்து செயல்பட வேண்டியது மன்னருக்குரிய அறமாகும்.

"பண்டைய அரசு அறநெறியின் மீது அமைக்கப்பட்ட

அரசாகத் திகழ்ந்தது''[12]

என்று தமிழரின் ஆட்சிமுறை சிறப்பிக்கப்படுகிறது. தந்தைக்குப் பின் மகன் நாட்டை ஆளும் உரிமை காணப்பட்டது. பின்னர் வரும் மன்னர் மக்களை வருத்துதல் கூடாது என்ற அறநெறியைப் பின்பற்றி வாழ்ந்தனர்.

**செங்கோல்**

அரசனுடைய ஆட்சி அறவழியில் நேர்மையானது என்பதைக் குறிக்கச் செங்கோல் பயன்பட்டது. கொடுமையான ஆட்சியை வெளிப்படுத்த கொடுங்கோல் பயன்படுத்தப்பட்டது.

"அம்பு துஞ்சும் கடி அரணால்

அறம் துஞ்சும் செங்கோலையே'' (புறம்.120)

அம்புகள் தாங்கிய காவலையுடைய மதிலையும் அறம் நிலைத்த செங்கோலையும் உடையவனாக சேரமான் விளங்கினான் என்பதை மேற்சுட்டிய பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

"நான்குடன் மாண்டது ஆயினும் மாண்ட

அறநெறி முதற்றே, அரசின் கொற்றம்

அதனால் நமர் எனக் கோல் கோடாது

பிறர் எனக் குணம் கொல்லாது'' (புறம்.55)

என்னும் பாடல் மன்னன் பின்பற்ற வேண்டிய அறம் பற்றிப் பேசுகிறது. நால்வகைப் படைச்சிறப்பினைப் பெற்று இருப்பினும் அரசனின் வெற்றி

அறத்தை அடிப்படையாகக் கொண்டது. நமரென கோல் கோடாதும் பிறர் எனக் குணங்கொல்லாமலும் முறை செய்தல் வேண்டும் என மன்னருக்குக் கோலறம் அறிவுறுத்தப்படுகிறது.

**புலவர் கூறிய அறநெறிகள்**

அரசர்களும் புலவர்களும் நெருங்கிய நண்பர்களாக வாழ்ந்தனர். அதியமானின் அவைக்களப் புலவராக ஔவை விளங்கினார். பாரியின் நண்பராக கபிலர் இருந்தார். கோப்பெருஞ்சோழனின் நண்பராகப் பிசிராந்தையார் இருந்தார். புலவர்கள் அரசர்களின் புகழ் தரத்தக்க செயல்களைக் கண்டு புகழ்ந்தனர். குறைகளைக் கண்டபோது எடுத்துக்கூறி அறநெறியில் செலுத்தினர்.

"தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டி'' (புறம்.27)

வானில் வலம் வரும் திங்கள் தேய்தல், பெருகுதல், மாய்தல், பிறத்தல் ஆகிய உண்மைகளை உலகுக்கு உணர்த்துவதாக கூறிவருந்தி வந்தோருக்கு அருளவேண்டும் என்று அருட்கொடையை அறிவுறுத்துகின்றார். இவ்வாறு புலவர்கள் மன்னருக்கு அன்பின் ஆழத்தையும், அருளின் ஆற்றலையும் அறத்தின் சிறப்பையும் உணர்த்தியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**நீதி இலக்கியக் காலம்**

கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிமுதல் பல்லவர்காலம். கி.பி ஏழாம் நூற்றாண்டின் தொடக்க காலம் வரையிலான காலக் கட்டத்தினைச்

சங்கம்மருவிய காலம் என்று அழைப்பர். இக்காலத்தில் களப்பிரர் ஆட்சி ஏற்பட்டது. எனவே இவர்கள் ஆட்சிசெய்த காலத்தை இலக்கிய நோக்கிலும் அரசியல் நோக்கிலும் "இருண்டகாலம்'' என்று அழைத்தனர். இக்காலத்தில் நீதி இலக்கியங்கள் மிகுதியாகத் தோன்றியதால் நீதி நூற்காலம் எனவும் அழைக்கப்பட்டது. பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் காதலையும், வீரத்தையும் விடுத்து நீதியையும், அறத்தையும் பாடுபொருளாகக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இவற்றுள் திருக்குறள் முதலான பதினெழு நூல்கள் அறத்தை வலியுறுத்துகின்றன.

**அறமாவது மக்கள் ஒருவருக்கொருவர் இசைவாக இணங்கியும் ஒருவருக்கொருவர் இடையூறு இல்லாமல் தனித்தும் வாழ்வதற்குரிய நெறிமுறையாகும்.** பிறருக்கு நன்மை பயக்கும் சொற்களை ஆராய்ந்து தேடி இனியவாக ஒருவன் சொல்லுவானேயானால் அவனிடம் பாவங்கள் தேய அறம் மேன் மேலும் வளரும் என்பதைத் திருக்குறளில்,

"அல்லவை தேய அறம் பெருகும் நல்லவை

நாடி இனிய சொலின்'' (குறள்.96)

என்று வள்ளுவர் மொழிகிறார்.

இவ்வுலகில் பிறந்த ஒவ்வொருவரும் அறம் செய்தல் வேண்டும். பல நாட்களுக்கு அறத்தைச் செய்யவில்லை என்றாலும் சில நாட்களாவது அறத்தைச் செய்ய வேண்டும் என்கிறது பழமொழி. இதனை,

பல நாளும் ஆற்றா ரெனினும் அறத்தைச்

சில நாள் சிறந்தவற்றாற் செய்க – கலைநோக்கி

நைவது போலும் நுகப்பினாய் நல்லறம்

செய்வது செய்யாது கேள்'' (பழமொழி.367)

என்று பழமொழி எடுத்துரைக்கிறது. முடிந்த அளவுக்கு அறத்தைச் செய்தல் மிக இனிமையுடையது என்பதை,

"ஆற்றுந் துணையால் அறம் செய்கை முன் இனிதே'' (இனிய.6)

என்று இனியவை நாற்பது கூறுகின்றது. அறமென வழங்கப்படுவது பிற உயிர்களுக்கு துன்பம் அளிக்காமல் இருப்பதாகும். மேலும், வறியவர்களுக்குத் தங்களால் இயன்ற பொருள் உதவினைத் தந்து உதவ வேண்டும். வாழ்வில் தவறாமல் அறத்தைச் செய்ய வேண்டும் என நீதி நூல்கள் கூறுகின்றன.

**காப்பியங்கள் உணர்த்தும் அறநெறிகள்**

கி.பி.9–ம் நூற்றாண்டு முதல் ஏறக்குறைய பல ஆண்டுகாலம் சோழப்பேரரசு தமிழகத்தில் சிறந்து விளங்கியது. இச்சோழராட்சிக்காலம் தமிழக வரலாற்றில் கலைத்துறையிலும், இலக்கியத் துறையிலும், தமிழ்ப் பண்பாட்டிலும் ஒரு பொற்காலமாகவே கருதப்படுகின்றது. இக்காலக்கட்டத்தில் ஐம்பெருங்காப்பியங்கள் இயற்றப்பட்டன. இவ்வைந்து காப்பியங்களிலும் அறம் வலியுறுத்தப்பட்டுள்ளது.

**சிலப்பதிகாரம்**

சிலப்பதிகாரம் அரசனைத் தலைவனாகக் கொண்ட காப்பியம் அன்று. கோவலன் கண்ணகியைப் பற்றிய குடிமக்கள் காப்பியம் ஆகும். இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் பாடியதற்குக் கண்ணகியின் துன்பமே

காரணம் எனத் தோன்றும். கண்ணகியின் துன்பத்திற்குக் காரணமாக சிலம்பு அமைகிறது. எனவே,

"அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாவதூம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூம்
சூழ்வினைச் சிலம்பு காரண மாக''[13]

என்ற மூன்று உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு இந்நூல் இயற்றப்பட்டுள்ளது என்று சிலப்பதிகாரப் பதிகம் குறிப்பிடுகின்றது. கோவலன் கண்ணகியோடு சில ஆண்டுகள் இல்லறம் நடத்தி, பின்பு மாதவியிடம் தன் மனதைப் பறிகொடுத்ததனால் கண்ணகியைப் பிரிந்து மாதவியோடு வாழ்கிறான். பிறகு மாதவியிடம் ஊடல் கொண்டு கண்ணகியிடமே திரும்புகிறான். அவளை அழைத்துக் கொண்டு மதுரைக்குச் செல்கையில் கண்ணகியை அருகில் அழைத்து 'மதுரைக்குப் புறப்படு என்று சொன்னவுடனே நீ புறப்பட்டுவிட்டாய்' என்று வருந்திக் கூறினான். அதைக் கேட்ட கண்ணகி,

"அறவோர்க் களித்தலும் அந்தன ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை''[14]

என்ற இச்சொற்களால், தான் இல்லறம் இழந்த நிலையினை எடுத்துரைக்கின்றாள். இதிலிருந்து இல்லற நெறியினை அறிந்து கொள்ளலாம்.

**மணிமேகலை**

மணிமேகலையின் கதையமைப்பு சிலப்பதிகாரத்தின் தொடர்ச்சியாக உள்ளது. பௌத்த சமயக்காப்பியமான மணிமேகலையில் அறம் என்பதற்கான விளக்கத்தை,

"அறமெனப் படுவ யாதெனக் கேட்பின்
மற வா திதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்
உண்டியு முடையு முறையு மல்லது
கண்டதில்''[15]

என்று இவ்வுலகில் உள்ள உயிர்களுக்கெல்லாம் உணவு, உடை உறைவிடம் முதலியவற்றை நல்குவதே சிறந்த அறமாகும் என மணிமேகலை வலியுறுத்துகிறது.

**சீவக சிந்தாமணி**

இடைக்காலத்தில் தமிழ் இலக்கியப் போக்கையே மாற்றி ஒரு புதுத்திருப்பத்தை ஏற்படுத்தியது சீவகசிந்தாமணி. ஈடும், இணையும் இல்லாத இந்த பெருங்காப்பியம்,

"அறம் பெரிய கூறின் னலங்கணி வேலோய்
மறம் புரிகொ னெஞ்சம் வழியாப்புருந் தீண்டிச்
செறும் பெரிய தீவினைகள் சென்று கடிதோடி
யுறும் பெரிய துன்பமுயிர் கொலையும் தோடி''[16]

இவ்வாறு மெய்யுரைக் கூறினால் இம்மையில் புகழ் நிலைத்து நிற்கும். மறுமையில் மேல் உலக வாழ்வு உண்டாகும் என பொய்யாமையை ஒரு சிறந்த அறமாகத் திருத்தக்கதேவர் வலியுறுத்துகிறார்.

**வளையாபதி**

பேராசை, பொறாமை, கோபம், கடுஞ்சொல் என்னும் மனக்குற்றம், சொற்குற்றங்களை நீக்கி வாழ்வதே அறமாகும் என்ற கருத்துக்கேற்ப வளையாபதியில் அறக்கருத்துக்கள் நிறைந்து காணப்படுகின்றன. காலமறிந்து விருந்தினரை அன்போடு பேணுகின்றவரை நோக்கி வானுலகமே கீழ்இறங்கி வந்து விருந்தினராக அழைத்துச் சென்று பேணும் என்பது வளையாபதி கூறும் செய்தியாகும்.

“துற்றுள வாகத் தொகுத்து விரல்வைத்த
தொற்றுக்கு அஃதுன்னின் இது அதன் காணம்
அற்றம் இல்தானம் எனைப் பல ஆயினும்
துற்றவிழ் ஒவ்வாத் துணிவு என்னுமாறே’’[17]

என்று உணவுக் கொடுத்தலின் அறத்தை வளையாபதி வலியுறுத்துகிறது.

**குண்டலகேசி**

அறமாவது, நீதியென்னும் முளைத்தோன்றிக், கடமை உணர்வென்னும் தளிர்விட்டு, ஒழுக்கமென்னும் மரமாக வளர்ந்து ஈகை, கொடை என்னும் கிளைகளுடன் தழைத்து அறமென்னும் வண்ணமலராக மலரும் தன்மையுடையது. இத்தகைய தன்மை கொண்ட அறத்தைப் பற்றி ஐம்பெருங்காப்பியங்களுள் ஒன்றான குண்டலகேசி மிகச் சிறப்பாக

எடுத்துரைக்கிறது. முக்தி இன்பத்தை அடைவதைவிட மன்னனின் ஆட்சித் தரும் இன்பத்தையே கருதி வாழ்ந்தனர் என்ற அரசியல் அறத்தை

"சீற்றம் செற்றுப் பொய் நீக்கிச் செங்கோலினால்

கூற்றம் காய்ந்து கொடுக்க எனும் துணை

மாற்றமே நவின்றான்''[18]

என்ற பாடல் மூலம் அறியலாம்.

**பக்தி இலக்கியங்களில் அறநெறிகள்**

கி.பி.7ம் நூற்றாண்டில் பிறமொழி மற்றும் பிறசமயங்கள் ஒடுக்கப்பட்டன. அப்போது சைவமும், வைணவமும் தழைத்தோங்கியன. சமய உணர்வூட்டும் பக்திப் பாடல்களைப் பாடினர். சைவம் தழைக்க மூல காரணமாய் நின்றவர்கள் சைவக்குரவர் எனப்பட்டனர். வைணவத்தைப் பின்பற்றியவர்கள் ஆழ்வார்கள் எனப்பட்டனர்.

**சைவம்**

தமிழ்நாட்டில் சைவம் தழைத்தோங்க நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பியவர் திருஞானசம்பந்தர் ஆவார். வேத வேள்விகளை நிந்தனைச் செய்துழன்ற சமணர்களை அனல், புனல் வாதங்களில் வென்றார். இவர் பாடலில் அறநெறிக் கருத்துக்கள் காணப்படுகின்றன. அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் அடியவர்கள் பெற்று வளம் பெற வேண்டும் என்பதை,

"அமிழ்ந்த சிந்தை யந்தண ாலிர்கறம் பொருளின்பம் வீடு

மொழிந்த வாயான்''[19]

என்ற அடிகளால் அறியமுடிகிறது.

**வைணவம்**

வைணவம் தழைத்தோங்க உதவியவர்கள் ஆழ்வார்கள் எனப்பட்டனர். இவர்கள் பன்னிருவர் ஆவர். திருமங்கையாழ்வார் தனது பெரிய திருமடலில்,

"முன்னம் திசைமுகனைத் தான் படைக்க மற்றவனும் முன்னம்

படைத்தனர் நான் மறைகள் அம்மறைதான் மன்னும் அறம், பொருள்

இன்ப வீடென்றுலகில் நன்னெறி மேம்பட்டன நான்கன்றே''[20]

என்கிறார். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் அடியவர்களுக்குக் கூறுகின்றார். இவ்வாறு பிற நூல்களும் அறத்தை வலியுறுத்துகின்றன.

**கம்பராமாயணத்தில் அறம்**

தமிழில் இலக்கியங்கள், காப்பியங்கள் போலவே இதிகாசங்களும் முக்கிய இடம் பெறுகின்றன. பாரத நாட்டின் பழம் பெரும் கதைகளை இதிகாசங்கள் விளக்கிக் காட்டுகின்றன. கம்பராமாயணம் ஒரு மனிதன் வாழ வேண்டிய முறைபற்றியும், அரசாட்சி செயல்பட வேண்டிய முறைபற்றியும் இல்லநெறி பற்றியும் விளக்கிக் காட்டுகின்றது.

உலக அரங்கில் யுத்த தர்மம் என்பது இன்றும் கடைப்பிடிக்கப்படும் ஒன்றாகும். அறப்போர் நெறியில் பகைவன் நிராயுதபாணியாக நிற்கும் பொழுதில் அவனைக் கொல்லக்கூடாது என்ற கொள்கையை கம்பர் அன்றே இராமபிரான் வாயிலாக இராவணனுக்கு விளக்குகிறார். நிராயுதபாணியாக நின்றவனை நோக்கி இராமன்,

“அறத்தினால் அன்றி அமர்க்கும் அருஞ்சமம் நடத்தல்

மறத்தினால் அரிது என்பது மனத்திடை வலித்தி

புறத்தி நின்நெடும் புதி புகக்கிளையொடும் பாவி!

இறைத்தி! யான் நினைக்கிலென் தனிமை கண்டு இரங்கி’’[21]

இவ்வாறு பேசுகிறான். வீரமே வெற்றியைத் தராது. அறமும் சேர்ந்து உதவ வேண்டும் என்பதை இராமன், இராவணனுக்கு அறத்தை அறிவுறுத்துகின்றான். அறம் முடிவில்லாதது. அதற்கு அழிவே கிடையாது. அந்த அறம் ஒன்றே நிலைத்த இன்பம் தரும். எனவே கம்பராமாயணத்தில் மேலும் பிற அறக்கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன.

**பெரியபுராணம் கூறும் அறம்**

இந்நூல் அறுபத்து மூன்று அடியார்களைப் பற்றியும் ஒன்பது தொகையடியார்களைப் பற்றியும் விளம்புகின்றது. இது ஒரு சைவக் காப்பியம் ஆகும். இந்நூல் பொது அறநெறியிலும் சமய அறநெறியே சிறந்தது என்பதை வலியுறுத்துகிறது.

**திருநாவுக்கரசரின் அறச்செயல்**

மனத்தால் ஆண்டவனைத் தியானித்தும், வாயால் இறைவன் புகழ்பாடியும், கையால் உழவாரப்படைக் கொண்டும் தொண்டு செய்தார்.

“கா வளர்த்தும் குளம்தொட்டும்

கடப்பாடு வழுவாமல்

மேவினார்க்கு வேண்டுவன

மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்''[22]

என்ற பாடல் வரிகளின் மூலம் அப்பர், சோலைகளைவளர்த்தும், குளங்களைப் பெருக்கியும், கடமை தவறாமல் அனைவருக்கும் வேண்டியவற்றைக் கொடுத்தும், விருந்து படைத்தும் அறநெறிப்படி வாழ்ந்தவர் என்பதை அறியமுடிகிறது.

**சிற்றிலக்கியங்களில் அறநெறிகள்**

நாயக்கர்காலம் சிற்றிலக்கிய காலம் என அழைக்கப்படுகிறது. சிறுபிரபந்தம் என்ற வடமொழிச் சொல்லே சிற்றிலக்கியம் எனப்படுகிறது. இவற்றில் **96** வகை காணப்படுகிறது. சிற்றிலக்கியங்கள் நெடும்பாட்டு போல்வனவாகும். ஒரு சில துறைகளைப் பற்றிய செய்திகளை மட்டுமே உள்ளடக்கியதாகும். சுருங்கிய அளவினை உடையதாகவும், எளிதில் படித்து முடிக்கக் கூடியதாகும் இருக்கிறது. இச்சிற்றிலக்கியங்கள் பொதுவாக ஆண்டவன், அரசன், வள்ளல், குரு ஆகியோரின் சிறப்புகள் எடுத்துரைப்பதாக அமைந்திருக்கும். கலம்பக இலக்கியம் கி.பி.3ம் நூற்றாண்டில் தோற்றம் பெற்றது. வரலாற்று நிகழ்வுகளை அடிப்படையாகக் கொண்டு பாடப்பெறுவது வரலாற்றுக் கலம்பகம் ஆகும். அறத்தைக் காத்த ஒருவனின் பெருமையினைக் கூறும் அறமற்றவரின் இழிநிலையினையும்

"அறத்தைக் காத்தானடி என்தலை மேலன

அறம் கெடுப்பவன் ஏழ் நரகத்துக்குக்கீழ் நரகடைவான்''[23]

என்று சிற்றிலக்கியம் எடுத்துக்காட்டுகின்றது. அறத்தின் சிறப்பை உணர்ந்து நிறைமனதுடன் செய்ய வேண்டும். அறவாழ்வை பின்பற்றாதவன் நரக வாழ்க்கையினும் கீழான இழி நிலையை அடைவான் என்று வரலாற்று கலம்பகம் இயம்புகிறது.

மழைபோல கொடுக்கும் கையைஉடையவனுமாகிய நந்தி மன்னனை பற்றி நந்திக்கலம்பகம்

“சொன்ன பொருள் நல்கு வள்ளல்’’[24]

என்று போற்றுகின்றது.

வறியவர்களுக்கு அன்னமும் மடங்களையுடைய மயிலாப்பூரையும், நீர்நிறைந்த கொண்டை வள நாட்டையும் ஆள்பவனும், மதம் கொண்டயானையை உடையவனுமாகிய நந்திமன்னன் வறியோர் கேட்ட பொருளைக் கொடுக்கும் வள்ளல் என்றும், பலபேர்க்கு பசிதீர்க்கும் அன்னமிடும் மடங்கள் கட்டி உணவு வழங்கினான் என்றும் போற்றப்படுகின்றான். எனவே அவனது கொடைச் சிறப்பாகிய அறத்தை அறிந்து கொள்ள முடிகிறது.

எனவே சிற்றிலக்கியங்கள் தன்மனித வாழ்க்கைக்கும், சமுதாய வாழ்க்கைக்கும் பயன்படும் அறக்கருத்துக்களைக் கூறியுள்ளதை அறியமுடிகின்றது.

**ஔவை நூல்களில் அறம்**

வரலாற்றைப் படைக்கும் வாய்ப்பு அனைவருக்கும் அமைவதில்லை. ஆயினும் வரலாறாகப் பலருடைய வாழ்க்கை அமைந்துவிடுகிறது. அந்தத்

தகுதியைச் சமுதாயத்தில் ஒரு சிலராவது பெற வேண்டும் என்ற சிந்தனையில் சான்றோர் தங்கள் கருத்துக்களை எழுத்துச் சாசனங்களில் நமக்கு அருளிச் செய்து இம்மண்ணுலகை விட்டு மறைந்து சென்றனர். சில நூல்கள் கால வெள்ளத்தால் அழியினும் பல நூல்கள் நிலைத்து நின்று இன்பம் பயக்கின்றன. இவற்றில் ஔவையாரின் பாடல்கள் குறிக்கத்தக்கன.

**ஔவையார்**

அடுப்பூதும் பெண்களுக்குப் படிப்பெதற்கு என்று பெண்களை இழித்துப் பேசும் கொடுமை பாரதியார் காலத்திலும் இருந்தது. ஆனால் சங்ககாலத்தில் வாழ்ந்த ஔவையார் அத்தகைய தடைகளை எல்லாம் தகர்த்துவிட்டு, வீரப் பெண்மணியாக சிறந்த பெண்பாற்புலவராக விளங்கியவர். பெண்பாற்புலவர்களுள் முதன்மையானவராகவும், மிகுதியான பாடல்களை பாடியவராகவும் ஔவையார் விளங்குகிறார்.

**ஔவையார் இயற்றிய நூல்கள்**

சங்க இலக்கியத்தில் அகத்திணையில் இருப்பத்தியாறு பாடல்களும் புறத்திணையில் முப்பத்து மூன்று பாடல்களும் பாடியுள்ளார். மேலும் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, ஞானக்குறள், தனிப்பாடல்கள் போன்ற நீதி நூல்களும் இயற்றியுள்ளார்.

**கல்வி**

மனிதன் உலக வாழ்க்கையில் அடி எடுத்து வைக்கின்ற முதல் படியில் சந்திப்பது கல்வி நிலையாகும். மனிதனை அறநெறியில் வாழ்வதற்கு வழிகாட்டியாக அமைவது கல்வியறிவாகும். அத்தகைய கல்வியைப் பற்றி

“இளமையில் கல்”[25]

என ஆத்திச்சூடியில் ஔவையார், இளமையிலேயே கல்வியை கற்க வேண்டும் என்கிறார். இளம் வயதில் கற்கும் அனைத்தும் பச்சைமரத்தில் அடித்த ஆணி போல் எளிமையாகவும், ஆழமாகவும் மனதில் பதியும் என்பதால் மேற்சுட்டிய ஆத்திசூடியை ஔவை தந்தார்.

**ஈகை**

ஈகைக் குணம் என்பது ஒருவர் உயர்ந்த நிலையில் இருந்தாலும், தாழ்ந்த நிலையில் இருந்தாலும் மாறாமல் நிலைத்து நிற்க கூடியதாகும். ஒருவருக்கு ஒன்றைக் கொடுக்கும் போது, அதைப் பெறுபவர் உள்ளமும், கொடுப்பவர் உள்ளமும், மகிழ்ச்சி அடைகிறது. இதனை உணர்ந்துதான் சங்க இலக்கியம் தொட்டு இக்கால இலக்கியம் வரையும் இப்பண்பு பலநூல்களில் பேசப்படுகிறது.

ஈகைப் பற்றி ஔவையார் நல்வழி எனும் நூலில்,

“ஆற்றுப் பெருக்கற்று அடிகெடும் அந்நாளும் அவ்வாறு
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் – ஏற்றவர்க்கு
நல்லகுடிப் பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து”[26]

நீர்பெருக்குள்ள ஆறு, தன்னிடமுள்ள நீர் வற்றிப் போனாலும் தன் அடியிலே ஊறுகின்ற ஊற்று நீரால் உலக மக்களைக் காக்கும் தன்மையுடையது. அது போல ஈகை குணமுடையவர்கள் தாழ்ந்து போனாலும், பிறருக்குக்

கொடுக்கின்ற பண்பை மறக்காமல் தன்னிடமுள்ள சிறிய பொருளையாவது கொடுத்து உதவுவர் என்ற அறநெறியை கூறுகிறார்.

**இல்லறம்**

அறத்தில் முதன்மையானது இல்லறமாகும். ஒருவன் இல்லறத்தில் ஈடுபடும்போதுதான் முழுமையான நிலையை அடைகிறான். இத்தகைய இல்லறம் பற்றி ஔவையார் தனது கொன்றை வேந்தனில்,

"இல்லறம் அல்லது நல்லறம் அன்று''[27]

என்று கூறுகிறார். உள்ளத்தால் ஒன்றுபட்ட ஒருவனும், ஒருத்தியும் இணைந்து குடும்பத்திற்கும் சமுதாயத்திற்கும், பல பயன்களை விளைவிக்கும் நிலையே இல்லறமாகும். அத்தகைய இல்லறம் அல்லாத மற்றது எதும் நல்ல அறமாகாது என்கிறார்.

தனிப்பெரும் தமிழ் மகளாய் தரணியில் விளங்கிய ஔவையாரின் படைப்புகள் அனைத்திலும் முதன்மையான பாடுபொருள் 'அறமே' ஆகும் என்பதை இவற்றிலிருந்து அறியமுடிகின்றது.

**இக்கால இலக்கியங்களில் அறநெறிகள்**

தமிழகத்தில் ஐரோப்பியர் வருகைக்கு பின் தமிழ் இலக்கியத்தில் பெரிய மாற்றம் ஏற்பட்டது இலக்கியப் படைப்பைப் பொருத்த வரையில் வடிவ மாற்றம் உருவானது. கவிதையின் இடத்தை உரைநடை பிடித்துக் கொண்டது. ஏடுகளிலும் ஓலைகளிலும், கைகளால் எழுதும் முறைமாறி நினைத்த அளவில் ஆயிரக்கணக்கான பிரதிகளை அச்சிடும் நிலை உருவானது. கவிஞர்கள்

அனைவரும் தன் மனதில் எழுந்த கருத்துக்களைச் சிறுகதை, நாவல், கவிதை போன்ற வடிவங்களில் (Forms) எழுதினர்.

**பாரதியார்**

இருபதாம் நூற்றாண்டு கவிஞர்களில் சிறந்து விளங்கியவர் பாரதியார் ஆவார்.

"சோதியறிவில் விளங்கவும் – உயர்
சூழ்ச்சி மதியில் விளங்கவும் அற
நீதிமுறை வழுவாமலே''[28]

வாழவேண்டும் என்ற அறநெறியை இந்தக் கவிதைமூலம் பாரதியார் உணர்த்துகிறார்.

**பாரதிதாசன்**

கல்வி என்பது ஒவ்வொரு மனிதனுக்கும் கண் போன்றதாகும். கல்வியை கற்றால் மட்டும் போதாது கற்றக் கல்வியை மற்றவர்களுக்குப் பயன்படுமாறு எடுத்துரைப்பதே சிறந்த அறமாகும். பெண்கல்வியின் அவசியத்தைப் பற்றி பாரதிதாசன்

"கல்வி இல்லாத பெண்கள் களர்நிலம் அந்நிலத்தில்
புல்விளைந்திடலாம் நல்ல புதல்வர்கள் விளைதல் இல்லை
கல்வியை உடைய பெண்கள் திருந்திய கழனி''[29]

என்று பாடியுள்ளார்.

இவற்றிலிருந்து பாரதியார் பாரதிதாசன் போன்றோர் அறத்தின் அவசியத்தை உணத்திய விதம் புலனாகின்றது.

**தொகுப்புரை**

தமிழிலக்கியப் பரப்பினுள் சங்க இலக்கியம் தொடங்கி இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் வரை அறநெறிகள் எடுத்துரைக்கப்பட்டுள்ள பாங்கு இவ்வியலில் தொகுத்துரைக்கப்பட்டுள்ளது. அறத்திற்கும் மனித வளர்ச்சிக்கும் இடையிலான நெருங்கிய இணைப்புத் தன்மை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தில் அகம், புறம் என்ற இரு பகுப்பினால் கூறப்பட்டுள்ள அறநெறிகள், நீதி இலக்கியங்களில் வலியுறுத்தப்படும் அறச்சிந்தனைகள், சிலப்பதிகாரம் உள்ளிட்ட காப்பியங்களில் உணர்த்தப்படும் அறம் பற்றிய கோட்பாடுகள், காப்பிய பண்புகளைக் கொண்டிலங்கும் பெரியபுராணம், கம்பராமாயணம் ஆகியன அறம் வலியுறுத்தும் பாங்கு, சிற்றிலக்கியங்கள் சுட்டிக்காட்டும் அறங்கள் பற்றிய செய்திகள், இக்காலக் கவிஞர்களின் படைப்புகளில் காணலாகும் அறக்கருத்துக்கள் ஆகியனவற்றை இவ்வியல் தொகுத்து ஆராய்ந்துள்ளது.

## மேற்கோள் விளக்கம்

1. மாங்காடு வ.பாலசுப்பிரமணியமுதலியார், கருத்தும் எழுத்தும், ப.31.

2. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி இரண்டு, ப.49.

3. கலைக்களஞ்சியம் தொகுதி–1, ப.255.

4. மா.இராசமாணிக்கனார், தமிழ்மொழி இலக்கிய வரலாறு, ப.105.

5. கோவிந்தராஜன் (உ.ஆ), இறையனர் அகப்பொருள் உரை, ப.29.

6. சி.இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப.214.

7. கா.கோவிந்தன், பண்டையத்தமிழர் போர் அறநெறி, ப.131.

8. தொல்.பொருள் புறத்திணை, நச்சினார்க்கினியர் உரை, ப.175.

9. அ.கி.நாயுடு, தொல்காப்பியர் கண்ட தமிழ்ச் சமுதாயம், ப.294.

10. தனிநாயக அடிகளார், தமிழ்த்தூது, ப.44.

11. அர.சிங்காரவடிவேலன், சங்கஇலக்கிய உவமைகள், ப.215.

12. மேலது, ப.215.

13. புலியூர்கேசிகன் உரை, சிலப்பதிகாரம், ப.17.

14. மேலது, பக்.246.

15. பிரேமாநந்தகுமாமர், மணிமேகலை, ப.25.

16. நச்சினார்க்கினியர் உரை, சீவகசிந்தாமணி, ப.402.

17. புலமை வேங்கடாசலம் (உ.ஆ.), வளையாபதி, ப.49.

18. புலமை வேங்கடாசலம் (உ.ஆ.), குண்டலகேசி, ப.38.

19. பி.நடராஜன் (பதி.), தேவாரம், ப.53.

20. தேவராஜன், வைணவமும் ஆழ்வார்களும், பக்.9–12.

21. கம்பராமாயணம், இராமவதாரம், ப.1141.

22. வ.த.இராமசுப்பிரமணியம் (பதி.), பெரியபுராணம், ப.261.

23. இராஜகோபால், வரலாற்றுக் கலம்பகம் பாடல்.21.

24. மேலது, பக்.90.

25. ஔவையார், நீதிநூல்கள், ப.60.

26. மேலது, பக்.63.

27. மேலது, பக்.72.

28. வை.கோவிந்தன் (பதி.), பாரதியார் கவிதைகள், ப.383.

29. டாக்டர் தொ.பரமசிவன் (பதி.), பாரதிதாசன் பாடல்கள், ப.229.

# இயல் – 2

## அக இலக்கியங்களில் அறம்

பண்டைத் தமிழர் காதல், வீரம் ஆகிய இருநிலைகளிலும் சிறந்திருந்தனர். அவர்கள் வாழ்வின் சிறப்பை விளக்குவன சங்க இலக்கியங்கள் ஆகும். பண்டைத் தமிழர் வாழ்க்கையை அகமென்றும், புறமென்றும் இரண்டாகப் பகுத்துக் கொண்டனர். ஒருவனும், ஒருத்தியும் தமக்குள் காதல் கொண்டு இன்புறும் ஒழுக்கத்தினை அகம் என்றனர். இதற்கு மாறான பிற வாழ்வியல் கூறுகளையெல்லாம் புறம் என்றனர். பண்டைத் தமிழரின் வாழ்க்கையானது அறத்தின் அடிப்படையில் அமைந்தது. தனி மனித வாழ்விற்கு உரியதாகிய களவியல் அறம், கற்பியல் அறம், உடன்போக்கில் அறம், போன்றவற்றையும் இல்லற வாழ்வில் கைக்கொண்டெழுக வேண்டிய அறநெறிகளையும் அகஇலக்கியங்கள் எடுத்துரைத்துள்ள தன்மை குறித்து இவ்வியல் ஆராய முற்படுகின்றது.

**அகத்திணை**

அகத்திணை பாடல்களில் மாந்தரின் இயற்பெயர் கூறக் கூடாது பொதுவான முறையிலேயே கூறவேண்டும் என்ற மரபொழுக்க நிலை தொல்காப்பியரால் வலியுறுத்தப் பெற்றதை

“மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்
சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்”

(தொல்.அகத்.57)

என்ற தொல்காப்பிய நூற்பா மூலம் அறியலாம்.

அன்பின் ஐந்திணைகள் என்று கூறப்படுவன முலலை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்பன. கைக்கிளை என்பது ஒருதலைக் காமம் எனப்படும். பெருந்திணை என்பது பொருந்தாக் காமம் எனப்படும். ஐந்திணைக் காதல் அறம் சான்றது. உலகம் ஏற்க கூடியது. மக்களுக்கு இயல்வது, இலக்கியத்திற்கு இசைந்தது. அன்பின் ஐந்திணைப் போல கைக்கிளையும், பெருந்திணையும் விரித்துப் பாடும் இயல்பின அல்ல. அகத்திணைகள் பண்டைத்தமிழரின் காதல் வாழ்வை விளக்குவன. அவர்கள் வாழ்வின் மேன்மையை எடுத்தியம்புவன. அகத்திணை களவு, கற்பு என இருவகைப்படும். காதலின் தொடக்கம் களவு. களவிலே தொடங்கிய காதல் வாழ்வு திருமணத்திற்குப் பின் கற்பு நெறி நிற்கும் இல்லறமாக மலர்கிறது. அறனெனப்பட்ட இல்லவாழ்க்கை களவு, கற்பு இவற்றின் அடிப்படையில் அமைவதைச் சங்க இலக்கியங்கள் தெளிவுபடுத்துகின்றன.

**களவில் அறம்**

பண்டைத் தமிழரின் வாழ்க்கை அறத்தை அடிப்படையாகக் கொண்டது. காதலின் தொடக்கம் களவு எனப்படும். இன்பமும், பொருளும் அறமும் சேர்ந்திட்ட அன்பு சேர்ந்து களவு தொடங்குகின்றது அறவழிப்பட்டக் களவு வாழ்க்கையே அக்கால மக்களால் ஏற்கப் பெற்றிருந்தது என்பதனை,

"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு
என்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்
காமக்கூட்டம்" (தொல். அகத். 89)

என்ற தொல்காப்பியம் நூற்பாவால் அறியமுடிகின்றது.

உடல் வளமும், உள்ள வளமும் பெற்ற ஆண், பெண் இருவரும் அன்பினால் இணைவது களவு. அதுவே தமிழர் நெறியாகும். களவில் இணைந்த இரு உள்ளங்களும் ஊரார் அறிய மணம் புரிந்து இல்லறம் என்ற கற்பில் வாழ வேண்டும் என்பது பண்டைத் தமிழர் அறிநெறியாகும்.

களவொழுக்கம் பண்டைத் தமிழகத்தில் பரவியிருந்தது பெற்றோர் அறியாமல் காதலர்களைத் தேடிக் கொள்ள முயன்ற இளம்பருவத்தினராக சங்க இலக்கியங்களில் மிகப் பலர் இருந்தனர். இவர்களின் களவு வாழ்க்கையின் தன்மையினை,

> "ஒவ்வொரு கற்பியலுக்கு முன்னும் களவியல் நிகழ்ந்தாதல் வேண்டும் எனவும் திருமணங் கூட்டும் ஒரே நெறி களவுதான்"[1]

என்ற வ.சுப. மாணிக்கம் எடுத்துக்காட்டுகிறார். தலைவனும், தலைவியும் ஒருவரை ஒருவர் கண்டபோது அவர்கள் உள்ளங்கள் அன்பினால் ஒன்றுபட்டன. அவ்வுள்ள கலப்பே இயற்கை நியதியின் சிறப்பாகும். இயற்கை நியதியால் ஏற்பட்ட இத்தொடர்பு இயற்கை புணர்ச்சி எனப்படும். எனவே இருவர் நெஞ்சமும் கலந்த நிலையினை,

> "யாயும் ஞாயும் யாரா கியரோ
> எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
> யானும் நீயும் எவ்வழி யறிதும்
> செம்புலப் பெயனீர் போல
> அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே" (குறுந். 40, 4–5)

என வரும் குறுந்தொகை பாடல் எடுத்தியம்புகின்றது.

தமிழர் பண்பாட்டின் சிறப்பினை ஆரிய அரசன் பிரகதத்தனுக்கு எடுத்துரைக்கும் கபிலர்,

"இருவே மாய்ந்த மன்றல்" (குறிஞ்சி. 21)

"எளியேந் துணிந்தவே மஞ்சா லருவினை" (குறிஞ்சி. 32)

என்ற அடிகள் மூலம் களவின் வழிவந்த கற்பினையும்

"கொடுப்பினன் குடைமையுங் குடிநிர உடைமையும்

வண்ணமுந் துணையும் பொரிஇ யெண்ணாது" (குறிஞ்சி 30 –31)

என்ற அடிகளின் மூலம் களவின் வழி வராக் கற்பினையும் குறிஞ்சிப்பாட்டில் முறையே வேறுபடுத்திக் காட்டியுள்ளார்.

களவு கற்பு என்பன சமுதாயநிலை நோக்கிய சொற்கள் சமுதாயத்திற்கு மறைவு களவு எனவும், வெளிப்படை கற்பு எனவும் படும்.

களவு என்ற காதல் வலிமை பெற்று நிலைபெறுவதற்குக் கற்பு என்ற மணவாழ்க்கை துணையாகும் என்பதை கடுவன் மள்ளனார் அகநானூற்றில் விளக்கிக் காட்டுவதாக ஒரு பாடல் அமைந்துள்ளது.

" … … துறைவன்

நம்மொடு புணர்ந்த கேண்மை முன்னே

யலர்வாய் பெண்டிர் அம்ப நூற்றப்

பலரும்மாங் கறிந்தனர் மன்னே இனிய

வதுவை கூடிய பின்றைப்

... ... ... ... ...

வென் வேற் கவுரியர் தொன்முது கோபி

முழங்கிடும் பௌவ மிரங்கு முன்றுறை

வெல்போரிராமனரு மறைக் கவித்த

பல்வீ ழாலம் போல

வொலியவிந் தன்றிவ் வழுங்க லூரே''

(அகம் 70 : 4– 15)

என வரும் அடிகள் களவில் தலைவி, தலைவனுடன் உள்ளம் கலந்து உளவாடும் நிலையைக் கண்ட சமூகம் அலர் அம்பலும் தூற்றுவதை எடுத்து இயம்புகிறது.

களவொழுக்கமானது கற்பில் முடிய வேண்டும என்பதை,

''அம்பல் மூதூர் அரவம் ஆயினும்'' (நற். 85 – 3)

என்ற நற்றிணைப் பாடலடி காட்டுகிறது.

தலைவியின் வருத்தத்தால் உடல் மாறுபாடு கண்டு அலர் ஏற்படாமல் செய்தலே தலைவனுக்கு தக்கது என்று தலைவனிடம் தோழி உரைக்கிறாள். மேலும் தலைவியின் கண்ணீர் வடிதல், தோள் நெகிழ்தல், மேனி மாறுபாடுகள் போன்றவை தலையின் களவொழுக்கத்தை பிறருக்கு உணர்த்தும், எனவே இக்களவானது விரைவில் கற்பாகுமாறு தலைவனிடம் தோழி வரைவு உணர்த்துகிறாள்.

பிறர் பெண் கேட்க வந்த ஒரு சமயத்தில் தலைமகள் பட்டினி கிடந்தாள் என்றும், இன்ன தலைவன் உணவு கொடுத்தாலல்லது இவள் இப்பட்டினி நோன்பைவிட மாட்டாள் என்பதையும்,

"தண்ணந் துறைவன் நல்கின்

ஒண்ணுதல் அரிவை பாலாகும்மே" (ஐங்கு. 168. 3–4)

எனத் தோழி, செவிலிக்குத் தலைவியின் களவினை அறிவிக்கிறாள். நாணத்தை விட்டாவது கற்பினை காக்க வேண்டும் எனவும் காலமறிந்து களவு வெளிப்பட்டால்தான் அது கற்பாக மாறும் என்பதனை இப்பாடல் மூலம் அறியலாம்.

தலைவியின் களவு வாழ்க்கையைக் கற்பாக மாற்றுவதற்கு துணை புரிபவள் தோழியாவாள் இதனை,

"குன்றக் குறவன் காதல் மடமகள்

அணிமயில் அன்ன அசை நடைக் கொடிச்சியைக்

பெருவரை நாடன் வரையு மாயின்

கொடுத்தனெ மாயினோ நன்றே

இன்னும் ஆனாது நன்னுதல் துயரே" (ஐங்கு. 258)

என்ற பாடல் விளக்குகிறது.

தலைவன் நெடுநாட்களாகவே களவொழுக்கம் ஒழுகி வரவை நீட்டித்தான். இது தலைவிக்கு துயரைத் தந்ததால் பலமுறை தோழித் தலைவனை இடித்துரைத்தப் பின்பு வரைவு பேச சுற்றத்தாரை

அனுப்பியுள்ளான். இந்த நிலை தெறியாமல் தலைவியின் பெற்றோர் மறுக்கின்றனர். இது தலைவிக்குத் துயரை ஏற்படுத்துகிறது. எனவே தலைவியின் களவொழுக்கத்தைக் கற்பாக மாற்ற தோழி தலைவியின் பெற்றோர்க்கு அறிவுறுத்தக் காண்கின்றோம்.

தலைவன் தன்னுடைய களவு வாழ்வை தோழியும், தலைவியும் ஒருங்கே இருக்கும் போது சென்று வெளிப்படையாகவோ, குறிப்பாகவோ, நயமாகப் புலப்படுத்துதல் தலைவன் மேற்கொள்ளும் அறநெறியாகும். இதனை.

"ஒன்று இரப்பான்போல் எளிவந்தும் செல்லும் உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையின்
வல்லாரை வழிபட் டொன்றறிந் தான்போல்
நல்லார்கட் தோன்றும் அடக்கமும் உடையன்
இல்லோன் புன்கண் ஈகையில் நனிக்க
வல்லான் போல்வதோர் வன்மையும் உடையன்
அன்னான் ஒருவன் தன் ஆண்டகை விட்டெனச்
சொல்லுஞ் சொற்கேட்பீ சுடரிழாய்"

(கலித். 47, 1–8)

என்ற கலித்தொகை பாடல்வரிகளின் மூலம் தலைவன் தன் களவு அறத்தை உணர்த்திய முறையை அறியலாம்.

எனவே களவாகிய காதல் வலிமை பெற்றுப் பண்பாட்டின் கூறாகத் திகழ ஆண் பெண் இருவரும் காதலினால் ஒன்றானவர் மணந்து வாழ்வது

கற்பு. களவு, கற்பு என்பன சமுதாய நிலை நோக்கிய சொற்கள். களவின் முடிவானது கற்பு என்பது அகத்திணை வலியுறுத்தும் அறங்களுள் தலையானது.

எனவே தமிழர் கற்பில் முடியும் களவினையே பெரிதும் போற்றினர் என்பது இதன் மூலம் தெளிவாகின்றது.

**வரைவு கடாவுதலில் அறமுரைத்தல்**

அகத்திணை இலக்கிய கொள்கைகளுள் வரைவுகடாவுதல் என்பது குறிப்பிடத்தக்க ஒரு துறையாகும். களவு வாழ்க்கையிலிருந்து தலைவனை கற்பு வாழ்க்கையில் ஈடுபடத் தூண்டுதல் இந்த துறையின் நோக்கமாகும். தலைவன் தலைவியை பகலிலும், இரவிலும் தோழி குறிப்பிடும் குறியிடங்களில் சந்தித்து வருகிறான். இந்நிலையில் ஊரில் அலர் ஏற்படுகின்றது. இதனால் இருவர் செய்கையையும் தோழி அறநிலையில் நின்று எண்ணிப் பார்க்கின்றாள். களவு நீட்டிப்பதற்குப் பின் அதனால் நேரும் கேடுகளை நினைத்துப் பார்க்கிறாள். இளையவளாக இருந்தாலும், பொறுப்பு உணர்ந்து தலைவியைத் திருமணம் செய்து கொள்ளத் தலைவனை வற்புறுத்துகிறாள். இது தோழிக்கே உரிய சிறப்பாகும். வரைவு கொள்வதே களவில் ஈடுபட்டோர்க்கு நீதி என்பதை உணர்த்துகிறாள்.

பொய் சொல்லியாவது, மெய்சொல்லியாவது, தோழி தலைவனை இடித்துரைத்தாவது, இரவுக்குறி, பகற்குறிகளை மறுத்தும், தலைவியின் ஆற்றாமையைக் கூறியும், வெறியை முன் நிறுத்தியும் ஆகிய பல நிலைகளிலும் தோழியானவள் வரைவு வேண்டுகிறாள். வரைவு கடாவுதலே அவளது குறிக்கோள் என்பதனை அவளது கூற்றுகளே புலப்படுத்தும்.

வரைவு கடாவுதல் துறையில் தோழி தலைவனுக்கு அறிவுறுத்துவதாக அமைந்த கலித்தொகை பாடல் ஒன்றில் உயர்ந்த பண்புகளின் வரைவிலக்கணங்கள் சுட்டப்படுகின்றன. அது,

"ஆற்றுதல் என்பது ஒன்று அலர்ந்தவர்க்கு உதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பு எனப்படுவது பாடு அறிந்து ஒழுகுதல்
அன்பு எனப்படுவது தன்கிளை செறாஅமை
அறிவு எனப்படுவது பேதையார் சொல் நோன்றல்
செறிவு எனப்படுவது கூறியது மறாஅமை
நிறை எனப்படுவது மறைபிறர் அறியாமை
முறை எனப்படுவது கண்ணோடாது உயிர்வெளவல்
பொறை எனப்படுவது போற்றாரை பொறுத்தல்"

(கலி. 47, 1–8)

என்ற பாடலாகும். வாழ்க்கையில் அனைவரும் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளாகத் தோழி தலைவனுக்கு எடுத்துக்கூறி வரைவு கடாவுதல் வேண்டியதை அறிய முடிகிறது.

தலைவியின் துன்பங்களுக்கெல்லாம் காரணம் தலைவன் வரைவு மேற்கொள்ளாமல் இருப்பதே என்பதைக் தோழி, தலைவனுக்கு அறிவுறுத்தி, தலைவியின் துன்பத்தைக் களைய வேண்டும் என்கிறாள். தலைவியின்

காமமிகுதியை எடுத்துக்கூறி வரைவு மேற்கொள்ளும்படி தோழி தலைவனிடம் வேண்டுவதை,

“வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட! செவ்வியை ஆகுமதி
யார் அஃது அறிந்திசி னோரே – சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு இவள்
உயிர் தவச்சிறிது காமமோ பெரிது” (குறுந். 18)

என்ற குறுந்தொகைப் பாடல் உணர்த்துகின்றது.

திருமணம் செய்து கொள்ளாமல், களவொழுக்கம் விரும்பியவனாகத் தலைவன் தலைவியைக் காணப் பகற்குறியிடம் பலமுறை வந்து செல்கிறான். இதனை அறிந்த தோழி தலைவனிடம்,

“ஊதை ஈட்டிய உயர் மணல் அடைகரை
கோதை ஆயமொடு வண்டல் தைஇ
லுரை ஆடினும் உயங்கும் நின்ஒளி எனக்
கொன்னும் சிவப்போள் காணின் வென்வேற்
கொற்றாச் சோழர் குடந்தை வைத்த
நாடுதரு நிதியினும் செறிய
அருங்கடிப் படுக்குவள் அறனில் யாயே”

(அகம். 60, 9–15)

தோழி தலைவனிடம் திருமணத்தைப் பற்றி அறிவுறுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

எனவே வரைவு கடாவுதல் என்னும் இத்துறை தோழியானவள், தலைவன் தலைவியின் களவு வாழ்க்கை கற்பாக மாற்றுவதற்காக அமைக்கப்பட்டுள்ளது என்பதனை அறியமுடிகின்றது.

**அறத்தொடுநிற்றல்**

பெற்றோருக்கு அறத்தொடு நிற்கலாம் என்று தலைவி அனுமதி கொடுத்த பிறகே தோழி அறத்தொடு நிற்பாள்.

"அறத்தொடு நிற்குங் காலத் தன்றி

அறத்தியல் மரபிலள் தோழி என்ப" **(தொல்.பொருள்.களவு.11)**

எனத் தொல்காப்பியர் அறம் வகுக்கிறார்.

"அறத்தொடு நிற்குங் காலமாவது தலைவியை அயலார் மணம் பேச எண்ணி வருதலும் தலைவியின் மெலிவறிந்த செவிலி அம்மெலிவு நீங்க வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துதலும் முதலியன நிகழும் நிலையினும் உயிரினும் சிறந்த தலைவனொடு தனக்குளதாகிய நட்பினைப் பெற்றோருக்குப் புலப்படுத்துதல் வேண்டும் என்னும் எண்ணம் தலைவின் உள்ளத்தே தோன்றி அதனைத் தோழிக்குப் புலப்படுத்துங்காலம். அக்காலத்தன்றி தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றலை மேற்கொள்ளுதல் இலள். எனவே

தலைவியின் குறிப்புணர்ந்த பின்னரே தோழி அறத்தோடு நிற்றதற்குரியள்"[2]

என்பர்.

களவை வெளிப்படுத்தியாக வேண்டும் எனும் இக்கட்டான சூழலில் தலைவி, தோழிக்கு உணர்த்தி அறத்தொடு நிற்குமாறு கூறுவாள். களவுக் காலத்தில் பல்வேறு உரிமைகளையும் பெற்றவளாகத் திகழும் தோழி, அறத்தொடு நிற்கும் உரிமையை மட்டும் தலைவி அனுமதி கொடுத்த பின்னரே செய்கிறாள்.

**தலைவி அறத்தொடு நிற்றல்**

களவு வாழ்க்கை சில வேளைகளில் தோழிக்குத் தெரியாமல் நிகழலாம். அதனால் தலைவி அனுமதி கொடுத்த பிறகு தோழி, செவிலி போன்றோருக்கும் அறத்தொடுநிற்பாள்.

"அறத்தொடு நிற்பதனால் நாணத்துக்கு இழுக்கு வரும். இந்நாண் இழுக்குக்கு உரியவள் தலைவி. கற்பின் பொருட்டு நாணக் குறைவு வரினும் வருக என்று துணிய வேண்டியவள் அவள். அத்துணிவை அறிந்த பின்னரே தோழி அறத்தொடு நிற்றல் வேண்டும்"[3] என்பர்.

தலைவன் தன் துயர் களைந்ததையும் வாழ்க்கைக்கு உறுதுணையாக அமைபவன் என்பதையும் தோழிக்குத் தலைவி உணர்த்துவாள். ஏனெனில் தலைவன் மீது தோழிக்கு 'நல்லவன்' எனும் எண்ணத்தை உருவாக்க வேண்டும். தலைவனும் நானும் பிரிக்க முடியாத உறவுடையவர்கள் என்று தலைவன் மீது தலைவி தான் கொண்ட காதலைத் தோழிக்கு உணர்த்துகிறாள். இதனை,

அல்லல் களைந்தனன்; தோழி நம்நகர்

அருங்கடி நீவாமை கூறின் நன்று என

நின்னொடு சூழ்வல் தோழி! நயம்புரிந்து

இன்னாது செய்தான் இவள் என

மன்னா உலகத்து மன்னுவது புரைமே'' (கலித்.54:16–20)

(கலித் 54, 16– 20)

என்ற கலித்தொகைப்பாடல் குறிப்பிடுகிறது. என்னுடைய நிலை கூறி பெற்றோரிடம் அறத்தொடுநின்றால் நிலையற்ற உலகில் நிலைத்த புகழுக்கு உரியவளாய் என்று தோழியை வேண்டுகிறாள் தலைவி.

களவு வாழ்க்கையில் தலைவி பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகிறாள். மெய்வேறுபாடு, அலர், இற்செறிப்பு, குறியிடம் பிழைத்தல், தலைவன் இரவுக்குறி வரும்போது ஏற்படும் இடையூறுகள், சூள் பொய்ப்பானோ என்ற ஐயம், பெற்றோரும் மற்றொரும் தன் களவு வாழ்க்கையை ஏற்பார்களா என்பது போன்ற சிந்தனை ஓட்டங்கள், மனப்போராட்டங்கள் அவளுக்குள் நிகழும். இத்துன்பங்களையெல்லாம் அனுபவித்த பிறகே தலைவி இறுதியாகவே அறத்தொடுநிற்கும் முடிவிற்கு வருவாள், தலைவி தானாகச் சென்று களவு வாழ்க்கையைப் பெற்றோருக்குப் புலப்படுத்துதல் இயலாது. எனவே தோழியை அணுகுகிறாள்.

மனத்தில் ஒருவனை நினைத்துப் பிறகு வேறொருவனை மணப்பது ஆயர் குடும்பத்துப் பெண்களுக்கு வழக்கமல்ல என்பதை,

“இருமணங் கூடுதல் இல் இயல்பன்று” (கலித் 114, 21)

என ஆயர் மகளிர் இயல்புரைக்கிறாள்.

இவ்வியல்பை எடுத்துக் கூறவேண்டும் என்பதே தலைவியின் வற்புறுத்தல். அப்போதுதான் பெற்றோர் எவ்வித மறுப்பும் இல்லாமல் உடனே தலைவனோடு வரைவிற்கு இசைவர் எனவும் எண்ணித் தோழியிடம் பேசுகிறாள்.

பெண்மையின் இயல்புகளில் கற்பு முதன்மை பெறுகிறது. ஒரு ஆணுக்குத் தன் மனத்தில் இடமளித்த பிறகு வேறுயாரையும் ஏற்காத தன்மையும், மனத்தூய்மையும் இன்றியமையாததாகும். எனவே மனத்தில் நினைத்த தலைவனே வாழ்க்கைத் துணைவனாக இருக்க வேண்டும் என்பதற்காகத் தோழியை அறத்தொடு நிற்குமாறு வேண்டுகிறாள்.

“வள்ளிகீழ் விழா வரைமிசைத் தேன் தொடா

... ... ... ...

அல்ல புரிந்து ஒழுகலான்” (கலித். 39, 12–14)

என்கிறது கலித்தொகை. தலைவின் நிலை கூறி அறத்தொடு நின்றபிறகு வேற்றவர்க்கு மணம் முடித்தால் இயற்கையாகவே நடைபெறும் விளைச்சல்கூட ஏற்படாது எனும் அறத்தினை கலித்தொகை விளக்குகிறது. மக்கள் அறத்தினை பின்பற்றவில்லை என்றால் இயற்கை அவர்களை தண்டிக்கும். வாழ்க்கைக்கு ஏற்ற நன்மைகளைச் செய்யாது. களவு வாழ்க்கை மேற்கொண்ட பிறகு கற்பு வாழ்க்கைக்கு மறுப்புக் கூற இயலாது. இத்தகைய நெறி சங்க காலத்தில் பின்பற்றப்பட்டது.

சங்க இலக்கியத்தினுடைய மருதத்திணைப் பாடல்கள் ஆணின் ஒழுக்கமின்மையை எடுத்துக்காட்டுகின்றன. அதற்கு மாறாகப் பெண்ணுக்குக் கற்புநெறி வலியுறுத்தப்பட்டது என்பதின் பதிவேடுகளாக இலக்கியங்கள் திகழ்கின்றன.

**தோழி அறத்தொடுநிற்றல்**

தலைவியைக் காட்டிலும் தோழியே சொல்லாற்றலில் வல்லவளாகச் சங்க இலக்கியத்தில் காட்டப்படுகிறாள். அவளால்தான் பெற்றோர் மனங்கொள்ளும் வகையில் பேசமுடியும். எனவே, தோழியே அதற்கு உகந்தவள் என்பதால் அவளை அறத்தொடு நிற்குமாறு வேண்டுகிறாள் தலைவி.

தலைவியின் மாறுபாடுகளுக்குக் களவு வாழ்க்கையே காரணம் என்பதை அறியாத பெற்றோர் வேலனை அழைத்து வெறியாட்டு நிகழ்த்துவர். வெறியாட்டு நிகழ்த்தலாம் என்ற முடிவிற்குப் பெற்றோர் வந்தவுடன் காலந்தாழ்த்தாமல் தலைவியின் களவு வாழ்க்கையை வெளிப்படுத்துவது தோழியின் இயல்பு.

> சங்க இலக்கியத்தில் தோழி மிக இன்றியமையாதவள் ஆகிறாள். “1458 பெண்பாத்திரக் கூற்றுகளில் 785 செய்யுட்கள் தோழி கூற்றுகளாய் அமைகின்றன. களவில் தொடங்கி கற்புவரை தலைவிக்குத் துணை நிற்பவள் தோழியவாள்.”[4]

என்ற கூற்று இதனை உறுதி செய்யும்.

அறத்தொடு நிற்றலுக்குரிய வாய்ப்பு எப்போது வரும் என்று எதிர்பார்க்கிறாள் தோழி. வெறியாட்டு, வேற்றுவரைவு, கட்டுவிச்சி கட்டுப்பார்த்தல் எனப் பல்வேறு வகையான சூழலை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறாள் தோழி.

'அறத்தொடுநிற்றல் துறை' ஒன்றை மட்டும் பாடுபொருளாக வைத்துக் கொண்டு குறிஞ்சிப்பாட்டை அமைந்துள்ளார் கபிலர். இது முழுவதும் தோழியின் கூற்றாக அமைகிறது. தலைவியின் நோய் நீக்கும் பொருட்டுப் பல்வேறு முயற்சிகளை மேற்கொண்ட செவிலி தாயின் மனநிலையை நன்கு அறிந்தவளாய்த் தோழி கருத்துக்களை எடுத்து வைக்கிறாள்.

"எய்யா மையலை நீயும் வருந்துதி" (குறிஞ்சி. 8)

என அவள் வருத்தத்தைக் குறிப்பிட்டு 'உன் வருத்தம் போக்கும் வழி சொல்கிறேன்' என்பது போலப் பேசுகிறாள், தினைப்புனம் காக்கும் இடத்திற்கு யானை வந்ததையும், யானையைக் கொன்று தலைவியை தலைவன் காப்பாற்றிய செய்திகளையும் குறிப்பிடுகிறாள்.

"அடும்கரை வாழையின் நடுங்க பெருந்தழை

அம்சில் ஓதி அசையல் யாவதும்" (குறிஞ்சி. 179 – 180)

தோழி அறத்தொடுநிற்கும் சூழலைக் கீழ்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

1. குன்றுகூறி அறத்தொடு நிற்றல்
2. உடல் மெலிவு கூறி அறத்தொடு நிற்றல்
3. நொதுமலர் வரைவின்போது அறத்தொடு நிற்றல்

**1. குன்று கூறி அறத்தொடு நிற்றல்**

குன்றத்தைப் பாட்டில் வைத்துப் பாடவேண்டும் என்ற நோக்கோடு பாடல்கள் அமைந்துள்ளன.

"குன்றம் பாடான் ஆயின்
என்பயஞ் செய்யுமோ வேலற்கு வெறியே" (ஐங். 244)

வெறியாட்டு நிகழ்த்த வேண்டும் என்ற பெற்றோர் கூறும்போதேல்லாம் குன்றத்தைக் கண்டால் இவளுடைய நோய் தணியும் என்றுரைக்கிறாள் தோழி.

தோழியும், தலைவியும் ஒத்த வயதுடையவர்கள். அவளுக்கும் பருவ வயதிற்கேற்ற பெண்மைக் குணங்கள் உண்டு. எனவே பெற்றோரிடம் வெறியாட்டு தேவையில்லை. தலைவி களவு வாழ்க்கை மேற்கொண்டுள்ளாள் என ஒரிரு சொற்களில் கூற இயலாது. அது மட்டுமின்றிப் பெற்றோர் மனங்கொள்ளும் வகையில் கூற வேண்டும். எனவே தோழி அறத்தொடு நிற்பதற்கென சில உத்திகளை கையாளுகின்றாள். எதிர்வரும் வாய்ப்புகளை பயன்படுத்திக் கொள்கிறாள்.

"இன்னும் பாடுகபாட்டே அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே" (குறுந். 23)

என்று கட்டுவிச்சியின் வாயிலாக அறத்தொடு நிற்கிறாள் தோழி.

**உடல் மெலிவுகூறி அறத்தொடுநிற்றல்**

களவு வாழ்க்கையில் ஏற்படுகின்ற மன அலைக்கழிப்புகளினால் தலைவி வருத்துகிறாள். உணவும், உறக்கமும் குறைகிறது. இதனை,

"பொன்னினும் சிவந்தன்று கண்டிசின் நுதலே" (ஐங்கு. 105)

என்று ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

**நொதுமலர் வரைவின்போது அறத்தொடு நிற்றல்**

வேற்றவர்கள் தலைவியை வரைவின் பொருட்டுப் பெண்கேட்டு வருகின்றபோது தோழி பெற்றோரிடம் அறத்தொடு நிற்கிறாள். தலைவியின் உண்மையான நிலையினைப் பெற்றோர்கள் தோழியின் சொற்கள் வாயிலாக புரிந்து கொள்ளும்போது அறத்தொடு நிற்றல் வெற்றிபெறுகிறது.

"வந்தன னெதிர்ந்தனர் கொடையே" (ஐங்கு. 300)

என்று தலைவன் இல்லத்தார் வரைவின் பொருட்டுத் தலைவியின் இல்லத்திற்கு வந்ததை மகிழ்ச்சியோடு அறிவிக்கிறாள் தோழி.

> "களவு வாழ்க்கையில் தோழியின் துணையோடு அமையும் கூட்டத்தில் வருகின்ற 'அறத்தொடுநிற்றல்' என்னும் துறைக்குறியீடு, அறம் நோக்கியே களவு நடைபெற வேண்டியுள்ளது என்பதை உணர்த்துகின்றது. அந்த 'அறம்' தலைமகனின் உறவுகளோடு சேரும்போது கொடுப்போர் கூடிய மணமாகிறது. அல்லாதபோது உடன்போக்கில் 'கொடுப்போர் இன்றி அமையும் மணமாகிறது. இருவகை மணங்களும் இல்லறம் என்னும் நல்லறம் பணிக்கும் நுழைவாயில் ஆகின்றன"[5]

என்ற கருத்து இதற்குச் சான்றாக அமைகின்றது. இத்துறையானது பண்டைத் தமிழரின் அறத்தொடு சார்ந்த காதல் வாழ்வினைப் புலப்படுத்துகின்றதை அறியலாம்.

**உடன்போக்கில் அறம்**

தலைவனும் தலைவியும் களவு வாழ்க்கையின் பல்வேறு இடர்களை எதிர் கொண்ட பிறகு உடன்போக்கு நிகழ்த்த வேண்டும் என்ற முடிவிற்கு வருகின்றனர். களவு வாழ்க்கையைப் பெற்றோர்கள் ஏற்கமாட்டார்கள்; இக்களவு கற்பில் முடியாது என்று எண்ணும் போது தோழியும், தலையும், தலைவனும் இத்தகைய முடிவிற்கு வருகின்றனர்.

“கொடுப்போர் இன்றியுங் கரண முண்டே

புணர்ந்துடன் போகிய காலை யானே” (தொல்.பொருள்.கற். 2)

என உடன்போய் திருமணம் செய்வதைத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

களவைக் கற்பாக்கிக் கொள்ள முயற்சிக்கும் உத்திகளில் ஒன்றுதான் உடன்போக்கு. இங்கு, தோழியே முதன்மையாக நிற்கிறாள். அன்னையைக் குறித்த அச்சமும், அலர் குறித்த நாணமும் இந்த உடன்போக்கிற்கு காரணங்களாகும். தலைவனின் தயக்கங்களுக்கு காரணம் தலைவியின் மென்மையும், வழியில் ஏற்படும் துன்பங்களுமே ஆகும். தலைவியின் தயக்கத்திற்கு காரணம் ஊராரின் பழித்தூற்றலே ஆகும். இருவரது உள்ளப் போராட்டங்களையும் ஒரு நிலைப்படுத்தி உடன்போக்கு தோழியால் நடத்தப்படுகின்றது.

பெற்றோரது அனுமதி கிடைக்காதபோது திருமண சடங்கு இன்றியமையாதெனச் சமூகம் கருதியதால் தலைவனும், தலைவியும் உடன்போய்த் திருமணம் செய்து கொள்கின்றனர். உடன்போக்கு களவினைக் கற்பாக்கும் அறநெறியாகும். இதனை,

> ''அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்
>
> பிறை நுதற் குறுமகள்'' (ஐங்கு. 371, 4–5)

என்ற செவிலியின் கூற்று வலியுறுத்தும்.

அயலவர் திருமணம் பேச வந்த காலத்தில் தலைவியும், தோழியும் அதனை விலக்கத் தவறிவிட்டனர். இந்நிலை கைமிகுந்து சென்றதை அறிந்தாள் தோழி. எனவே தோழி தலைவனுக்கு அறிவிக்கிறாள். ஊரை விட்டு போய் திருமணம் செய்யும் வழியினை தலைவன் தோழியிடம் கூறுகிறான். அவன் சொல்லிய துணிச்சலான கருத்து தோழிக்கு சரியெனப்பட்டது, இதனை,

> ''நனைவினை நறவின் தேறல் மாந்திப்
>
> புனைவினை நல்லில் திருமணம் குவைஇப்
>
> வதுவை அயர்ந்தனர் நமரென அதனால்
>
> புதுவது புனைந்து செயலை வெள்வேல்
>
> மதியுடன் பட்ட மையனற் காளை
>
> அருஞ்சுரம் சேறல் அயர்ந்தனென் யானே'' (அகம். 221, 1–7)

என்று தோழி, தலைவிக்கு உடன்போய் திருமணம் செய்து கொள்வதை வலியுறுத்துவாள்.

> "களவு இருவழிகளில் கற்பு மணம் எய்தும். ஒன்று அறத்தொடு நிலை. பிறிதொன்று உடன்போக்கு முன்னது மென்முறை பின்னது வன்முறை எனினும் அன்றைய சமூகத்தில் உடன்போக்கை மறுத்தலும் இல்லை. மறு என ஒறுத்தலும் இல்லை"[6]

என க.ப. அறவாணன் உடன்போக்கினால் நிகழ்ந்த திருணமத்திற்கு விளக்கமளிக்கிறார்.

தாயின் வீட்டில் இருக்கும் போது நல்ல நீரும் நல்ல காய்கனிகளும் கிடைத்தாலும் அவற்றைத் தவிர்த்துவிட்டு, காதலனோடு மலைவழிச் சென்று நெல்லிக்காயைத் தின்று கலங்கிய நீரைக் குடித்து வாழ்வதே தனக்கு இன்பமாகத் தலைவி கருதுகிறாள். இதனை,

"ஊஉர் அலரெழச் சேரி கல்லென
ஆனா தலைக்கும் அறனில் அன்னை
தானே இருக்க தன்மனை யானே
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க
உணலாய்ந் திசினால் அவரொடு சேய் நாட்டு
விண்தொட நிவந்த விலங்கு மலைக்கவாஅன்
கரும்பு நடுபாத்தி யன்ன
பெருங்களிற் றடிவிழி நிலைஇய நீரே" **(குறுந். 262)**

என்ற பாடல்வரிகள் மூலம் அறியமுடிகின்றது. எனவே உடன்போய் திருமணம் செய்வது அறத்தின்பாற்பட்டது என்றும் கருத்து வலியுறுத்தப் பெறுகின்றது.

**செலவழுங்குத்தல்**

பொருள்வயிற் பிரிவு என்னும் தலைவனின் செலவை தடுக்கும் முயற்சியே இத்துறையின் நோக்கம். பொருள் தேடப் புறப்படும் தலைவன் உடனே சென்று தலைவியின் மனநிலையறிந்து ஆறுதல் கூறிப் பிறகுதான் புறப்படுவான். சில சமயங்களில் அவன் தன் நெஞ்சிற்குச் சொல்லி செலவழுங்குவான். அதாவது 'மனமே இவள் நாம் பிரிந்தாள் உயிர்வாழ மாட்டாள் போல இருக்கிறது. ஆகவே பிரிவைத் தவிப்போம்' என்று தன்னுடைய மனத்துக்கு கூறிக்கொள்வான். இல்லையெனில் பிரியமாட்டான் என்று கூறி தோழியிடமோ தலைவியிடமோ கூறி ஆறுதல் கூறுவான். அதற்காக அவன் பிரிவைத் தவிர்த்து விட்டான் என்றோ, பொருள் தேடும் முயற்சியைக் கைவிட்டான் எனவும் பொருள் கொள்வதில்லை. தலைவியை ஆற்றியிருக்குமாறு தேற்றுவதற்கே இச்செலவழுங்குவித்தல் அமையும்.

தலைவனைப் பொருளுக்காகப் பிரியாமல் தடுத்து, இளமை, இன்பம், வாழ்நாள் ஆகியவற்றின் நிலையை எடுத்துக்கூறி, உரிய காலத்தில் தலைவியோடு இன்பம் துய்த்தல் வேண்டும என்ற அறநெறியினைப் புலவர்கள் இத்துறையின் மூலம் வலியுறுத்தியுள்ளனர்.

வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்கணை நிழலின்கழியும் இவ்வுலகத்து
காணீர் என்றலோ அரிதே அது நனி

வேணீர் ஆகுவீர் ஐய என்தோழி

பூண்அணி ஆகம் புலம்ப பாணர்

அயிர்ப்புக் கொண்டன்ன கொன்றை அம்தீம் கனி

வெவ்வளி வழங்கும் வேய்பயில் அழுவத்தி

நன்வாய் அல்லா வாழ்க்கை

மன்னாப் பொருட்பிணிப் பிரிதும் யாம் எனவே'' (நற். 46)

என்ற பாடலின் மூலம் நாளும் இளமையும், இன்பமும் கழிகின்றன. இந்நிலையில்லாத பொருளை எண்ணாமல் தலைவியின் கூடவே இருக்க வேண்டும் என்று கூறுவதை அறியலாம்.

இளமை என்பது ஒரு குறிப்பிட்ட பருவகாலம். அது முடிந்துவிட்டால் திரும்ப வராது. ஆனால் செல்வத்தை சேர்ப்பதற்கு குறிப்பிட்டதொரு காலம் இல்லை. அது மாறி, மாறி வரக்கூடியது. எனவே இளமை இருக்கும்போது இன்பம் நுகர வேண்டும் என்பதனை,

''வளமையோ வைகலும் செயலாகும் மற்றிவள்

முனை நிரைமுறுவலார் ஆயத்துள் எடுத்தாய்ந்த

இளமையும் தருவதோ இறந்த பின்னே'' (கலித்.15, 24–26)

எனத் தோழி, தலைவனுக்கு அறிவுறுத்துகிறான்.

''செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே

வன்புறை குறித்த கவிர்ச்சி யாகும்'' (தொல். பொருள்.கற்பு.183)

என்ற தொல்காப்பிய நூற்பா இதற்கு சிறந்த சான்றாக அமையும். எனவே இவ்வுலகத்தில் இளமையும், இன்பமும் வாழ்நாளும் வேகமாக போய்க் கொண்டிருக்கின்றன. அதனால் இளமை இருக்கும் போது இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்ற அறநெறியினை சங்க இலக்கியத்தின் வாயிலாக அறிய முடிகின்றது.

**பொருளீட்டும் வழியில் அறம்**

இல்லறம் நடத்துவதற்கு பொருள் மிகவும் இன்றியமையாததாகும். அன்போடு கூடிய அப்பொருளையும் அறவழியில் ஈட்டுதல் வேண்டும். என்பதனையும் சங்க அகப்பாடல்கள் வலியுறுத்துகின்றன. பொருளீட்டும் போது ஒழுக்கத்திற்கு மாறான செயல்களை செய்யாமல் நேர்மையுடன் பொருளீட்டுதல் வேண்டும் என்ற கருத்து தொல்காப்பியத்தில்,

"உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத்தான

இழைத்த ஒண் பொருள்" (தொல்.பொருள்.அகத்.36)

என்று கூறப்படுகிறது.

அருளும் பொருளும் மனித வாழ்க்கைக்குத் தேவைப்படுவனவாகும். ஆனால் முதலில் வரும் அருளை பற்றிச் சிந்திப்பதைவிட பின்னால் வரும பொருளைப் பற்றியே அனைவரும் சிந்திக்கின்றனர். பொருளின்றி இவ்வுலகில் வாழ்தல் அரிது என்பதனால் பொருளின் முக்கியத்துவத்தை

"அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள் இல்லார்க்கு

இவ்வுலகம் இல்லாகி யாங்கு" (குறள். 247)

என்ற வள்ளுவரின் குறள்வழி எடுத்துக்காட்டுகிறது.

## பொருளின் தேவை

இல்வாழ்க்கை நடத்துபவர்களுக்குத் தமக்கும், தன்னைச் சார்ந்த மனைவி, குழந்தைகள், பெற்றோர், உறவினர்கள், விருந்தினர் எல்லோருக்கும் தேவையான உணவு, உடை, இருப்பிடம் போன்றவைகளை நிறைவேற்றித்தர வேண்டிய தேவை உள்ளது. அதற்குப் பொருள் தேவையாகின்றது. தன்னுடைய பொருளால் வாழ்க்கை நடத்துதல் வேண்டும். முன்னோர்கள் தேடி வைத்த பொருள் இருந்தாலும், தனக்கென ஒரு நிலை வகுத்துக் கொள்ளப் பொருள் தேடும் முயற்சி ஏற்படுகிறது. அப்படிப்பட்ட பொருளை முறையான வழியில் தேட வேண்டும். தேடிய பொருளை எந்த வழியில் செலவிட வேண்டும் என்பதைச் சங்க இலக்கியம் புலப்படுத்துகிறது.

## பொருளீட்டுதல்

இல்வாழ்க்கையில் கடமைகளை நிறைவேற்ற ஆண்மகனே அக்காலத்தில் வினையே மேற்கொண்டான்.

> ''வினையே ஆடவர்க்கு உயிரே வானுதல்
>
> மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரே'' (குறுந்.135, 1–2)

என்ற குறுந்தொகைப் பாடலானது வாழ்க்கைக்கு வேண்டிய பொருளை ஈட்டும் கடமை ஆண்களுக்கு உயிர் என்று கூறுகின்றது. எனவே பொருள் தேடாமல் இருக்கும் ஆண்களை குறுந்தொகை உயிரற்றவன் என்று உரைப்பதாக கொள்ளலாம்.

தன்னுடைய வாழ்க்கைக்குத் தாமே பொருளீட்ட வேண்டும் என்ற கருத்தில்லாமல் ஆண்களில் சிலர் தன்னுடைய முன்னோர் சேர்த்து வைத்தப்

பொருளே போதும் என்று எண்ணி எந்தவிதப் பணியிலும் ஈடுபடாமல் இருப்பதைக் குறுந்தொகை கண்டிக்கின்றது. ஆண்மையும், ஆற்றலும் உடைய ஒரு ஆண்மகனுக்கு அடையாளம் அவன், தான் ஈட்டிய பொருளில் இல்லறம் நடத்துவதே ஆகும், என்றும் சுட்டிக்காட்டுகின்றது. இதனை,

"உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்

இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவெனச்

சொல்லிய வன்மை தெளியக் காட்டி" (குறுந். 283, 1–3)

என்னும் அடிகள் விளக்குகின்றன.

கடமைகளைச் செய்து குடும்பம் நடத்த வேண்டும் என்பதற்காக வேற்றூர் சென்று, வேற்று நாடு சென்று பொருள் ஈட்ட தலைவியைப் பிரிவான் தலைவன்.

"பெருமையும் உரனும் ஆடூஉமன" (தொல். பொருள்.கள.95)

பெருமையும், நோக்கமும், மனத்திட்டமும, ஆண்பாலுக்கு உரிய பண்புகள் என்று தொல்காப்பியர் சுட்டுகிறார்.

பொருளானது கடமைகளை எளிமைப்படுத்தும் கருவி. இக்கருவியை ஈட்டுவதற்கு ஆண்கள், பெண்களை விட்டுப் பிரிவர். இன்பமும், கடமையும் போராடும் இடமாகவும் நல்ல உணர்ச்சிகள் மோதிக் கொள்ளும் இடமாகவும் இத்துறை அமைந்திருப்பதை அறியலாம்.

**நடுவுநிலையில் பொருளீட்டல்**

பொருள் ஈட்டும்போது நேர்வழியில் பிறருக்குத் துன்பம் ஏற்படாமல் பொருள் ஈட்ட வேண்டும். அதைவிட்டு தீய வழியில் சென்று பொருள் தேடுபவர்களுக்கு அந்தப் பொருளே இம்மையிலும், மறுமையிலும் பகையாக விளங்கும் என்பதை,

செம்மையினீகந் தொரிஇப் பொருள் செய்வார்க்குப் பொருள்

இம்மையும் மறுமையும் பகையாவ தறியாயோ" (கலித்.14, 14–15)

என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

வாழ்க்கையில் அறம் பல புரிவதற்கும், பிறரிடம் இரந்து செல்லாமல் வாழ்வதற்கும் பொருள் தேவை என்பதை சங்க இலக்கியம் சுட்டுகின்றது. உலக மக்களோடு ஒன்றி வாழ்வதற்கு மிகவும் இன்றியமையாதது பொருட் செல்வம் ஆகும். ஒவ்வொருவரும் ஒவ்வொரு பொருளைச் சிறந்த செல்வமாகக் கருதுகின்றனர்.

பொருள் இல்லாதவன் அறங்களைப் புரிய முடியாது. தம் சுற்றத்தார்கள் துயர் நீக்கிப் பேணுதல் இயலாது. அறத்தோடு வாழ்வதற்கு பொருள் தேவை இல்லத்தில் சோம்பிக் கிடப்பவரால் இவற்றைப் புரிதல் இயலாது. எனவே இத்தகைய குறிக்கோளை அடைவதற்கு பொருளீட்டுதல் அவசியமாகிறது இதனை,

"அறந்தலைப் பிரியாது ஒழுகுதலும் சிறந்த

கேளிர் கேடுபல ஊன்றலும் நாளும்

வருந்தா உள்ளமொடு இருந்தோர்க் கில்லெனச்

செய்வினை புரிந்து நெஞ்சினர் நறுநுதல்

மையீர் ஓதி அரும்படர் வழத்தல்

சின்னாள் தாங்கல் வேண்டும் என்று நின்

நன்மாண் எல்வளை திருத்தின ராயின்'' (அகம்.173, 1–7)

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் மூலம் அறியலாம்.

களவு காலத்தில் திருமணத்திற்கு வேண்டிய பொருளை ஈட்ட தலைவன் பிரிந்து சென்றதை 'வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிவு என்றனர். கற்புகாலத்தில் இல்லறக் கடமைகளை செய்வதற்கு காரணமாகத் தலைவன் 'பொருள் வயிற் பிரிவினை' மேற்கொண்டான் என்பதைச் சங்க இலக்கியம் உணர்த்துகிறது.

மனித வாழ்க்கையில் பொருள் இரண்டறக் கலந்துவிட்டது. சுற்றத்தாரைப் பேணிக்காப்பதற்கும், இல்லையென்று வந்தோர்க்குக் கொடுப்பதற்கும் பொருள் இன்றியமையாதது என்பதால் பொருளீட்டுதலில் அறத்தைக் கடைப்பிடித்தல் இன்றியமையாதது என்பதை இதன் வழி அறியலாம்.

**கற்பறம்**

அகத்திணை ஓர் கற்பிலக்கியம். பெண்களுக்கு உரிய பண்புகளுள் முதன்மையானது கற்பு நெறியாகும். கற்பு நெறி என்பது இல்லறத்திற்குரிய கட்டுப்பாடாகும். ஒழுக்கமுடைய வாழ்வே உயர்ந்த வாழ்வாகும். ஒழுக்கம் உடைய உயர்ந்தோரை எடுத்துக்காட்டாகக் கொண்டு அவர் கூறும் மெய்நெறி

வழியே வாழ்தல் வேண்டும் என்பது. தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை நெறியாகும்.

"கற்புங் காமமும் நாற்பா லொழுக்கமும்

மெல்லியற் பொறையும் வல்லிதின்

விருந்து புறந்தருதலுந் சுற்றம் ஓம்பலும்

பறவு மன்ன கிழவோன் மாண்புகள்

முகம்புகல் முறையிற் கிழவோற் குரைத்தல்

அகம்புகல் மரபின் வாயில்கட் குரிய" **(தொல்.பொருள்.150)**

என்ற நூற்பாவழி அறியலாம். கற்பு, காமம், நாற்பாலொழுக்கமும, பொறை, நிறை, விருந்து, புறந்தருதல், சுற்றம் ஓம்பல் ஆகிய பண்புகளை மகளிர்க்குரிய மாண்புகளாகத் தொல்காப்பியர் கூறுவர். இவற்றுள் முதன்மையாக இடம் பெறுவது கற்பெனும் பண்பே.

**கற்பும் பெண்மையும்**

சங்க இலக்கியத்தில் கற்பு பெண்ணுக்கு உயிரினும் மேலாக வலியுறுத்தப்பட்டுள்ளது. கற்புடைய பெண்கள் போற்றப்பட்டனர். 'கற்பு' பெண்ணுக்கு உயர்வு கொடுப்பதாகவும் பொருளீட்டுதல் ஆணுக்கு உயர்வு கொடுப்பதாகவும் அமைகிறது. ஆண் வீரத்தின் விளைநிலமாக இருக்கவேண்டும். பெண் ஒழுக்கத்தின் பிறப்பிடமாக இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு சங்க காலச் சமூகத்திற்கு இருந்தது. கற்பு பெண்ணிற்கு எந்த அளவிற்கு வலியுறுத்தப்பட்டதோ, அதற்கு இணையாக ஆணுக்கு ஒழுக்கவிதிகள் வலியுறுத்தப்படவில்லை.

“பகைவர் புகழ்ந்த ஆண்மை” (அகம்.339)

“எறிபடைக்கு ஓடா ஆண்மை” (அகம். 12)

“வணங்கிய சாயல் வணங்கா ஆண்மை” (அகம்.12)

இவ்வாறு ஆண் வீரமிக்கவனாக இருக்க வேண்டும் என்று கூறும் அக இலக்கியங்கள், அவனது இல்லற ஒழுக்கம் குறித்து ஏதும் சொல்லவில்லை. இத்தகைய வீரமிக்க ஆணும் பெண்ணின் கற்பினால் சிறப்பு பெறுவதாக சங்க இலக்கியங்கள் கூறுகின்றன.

இவ்வுலகமே பரிசாகக் கிடைத்தாலும் சிறந்த ஒழுக்கத்தை அடைய ஆயர்குலப் பெண்கள் தன் கணவனை விட்டு வேறு ஆடவனை மனதால் கூட நினைத்து, திருமணம் புரிந்து கொள்ளுதல் இல்லை, இதனை,

“விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்லியல் பன்றே” (கலித்.114)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

கற்புடைய பெண்கள் பிற தெய்வங்களை வணங்காமல், தன் கணவனையே தெய்வமாக மதித்து வணங்கினர். சங்ககால பெண்கள் கற்பு நெறியை உயர்ந்த அறமாக போற்றி வாழ்ந்தனர். கற்புடைய பெண்களை சங்க இலக்கியத்தில்

“சிறுமீன் புரையுங் கற்பி னறுநுதல்” (பெரும். 303)

“கற்பிறை கொண்ட கமழுஞ் சுடர்நுதல்” (பதிற். 70, 17)

எனப் பலவாறாகப் போற்றப்பட்டுள்ளனர் என அறியமுடிகிறது.

**பெண்கற்பினால் ஆண் சிறப்படைதல்**

ஆட்சி பொறுப்பிலும், போர்நிகழ்த்தும் வீரத்திலும் சிறந்திருந்தாலும் மனைவியின் கற்பினால் ஆண் மிகுதியான சிறப்புப் பெறுகிறான்.

"ஆன்றோள் கணவ" (பதிற்.6)

என்று கற்பிற்குரிய மாண்புகள் அமைந்த நங்கைக்குக் கணவன் எனப் பெண்ணினால் ஆண் சிறப்புறுவதை பதிற்றுப்பத்துக் குறிப்பிடுகிறது.

நாட்டை ஆளும் ஆண் சமூகத்தில் மதிப்போடு இருப்பதற்கு வீட்டை ஆளும் பெண் ஒழுக்கமுடையவளாக இருக்க வேண்டும், என்ற கருத்து சங்க இலக்கியம் காட்டும் சமூகத்தில் வலியுறுத்தப்பட்டதை அறியமுடிகின்றது.

மனைவியை அன்றி பிறரை மனதால் கூட நினைக்காத ஆண்களும் இருந்தனர் என்பதை,

"கால்பொருது இடிப்பினும் கதழுறை கடுகினும்
உம்முடன் எறியினும் ஊறு பல தோன்றினும்
பெருநலங் கிளிரினுந் திருநல உருவின்
மாயா வியற்கைப் பாவையின்
போதல் ஒல்ல ளென் நெஞ்சத் தானே" (நற்.201, 8–12)

என்ற பாடல் உணர்த்துகின்றது.

எத்தகைய துன்பங்கள் தோன்றினாலும், இவ்வுலகமே சினங்கொண்டு எதிர்த்தாலும் மனைவியை மட்டும் மனதில் நினைத்திருந்த ஆண்களும் இருந்தனர் என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

ஆண்களின் சமூக மதிப்புகள் கூட பெண்ணின் கற்புத்திறம் கொண்டே பார்க்கப்பட்டது. ஒருவன் சிறப்பானவனாக இருந்தால் அதற்கு அவனுடைய மனைவியின் கற்புத்திறனே காரணமென சங்க சமூகம் கருதியது. ஒரு ஆண் பல வெண்களுடன் தொடர்பு கொண்டவனாக இருந்தாலும் எந்த நிலையில் சமூகம் அவனை ஒதுக்கி வைக்கவில்லை. கணவன் மட்டும் இன்றி தந்தை, சகோதரன், புதல்வன் என அவளுடன் தொடர்பு கொண்டுள்ள பிற ஆண்களுடைய பெருமைக்கும் பெண்களின் கற்புத்திறமே காரணம் என்பதை இவற்றின் மூலம் அறியலாம்.

**இல்லற மாண்பு**

இல்லறம் என்ற சொல்லுக்கு வீட்டிலிருந்து அறவாழ்க்கையை மேற்கொள்வதாகும் என்று பொருள். திரு.வி.க. இல்லறம் என்ற சொல்லுக்கு

> “அறம் என்பது ஒரு மரம் போன்றது. திருமணம், பிள்ளைப்பேறு, அன்பு, விருந்தோம்பல், ஒழுக்கம், பொறை, ஒப்புரவு, ஈகை, அருள் தவம், வாய்மை, துறவு,. மெய்யுணர்வு முதலான அம்மரத்தின் உறுப்புகளாகிய வேர், பட்டை, கவடு, கோடு, விளார், தளிர், இலை, மலர், காய், கனி போன்றன. இவ்வறக் கூறுகள் யாவரும் பிறந்து வளர்ந்து பயனளிக்க வேண்டிய தாயகம் இல்லறமாகும்”[7]

என்று இல்லறத்திற்கு விளக்கமளிக்கிறார். பண்டைத்தமிழர் அறத்தொடு பொருந்திய வாழ்வினை மேற்கொண்டனர். திருமண வாழ்வை இல்லறம் என்றனர். கணவனும், மனைவியும் இணைந்து இன்பம் துய்க்கும் அளவில்

நில்லாமல் இல்லத்திலிருந்து அறங்களும் புரிய வேண்டும் என்ற கருத்தை இது வலியுறுத்தும்.

**இல்லற மாண்பு**

மனிதன் இல்லறத்தில் ஈடுபடும்போதுதான் முழுமையான நிலையை அடைகின்றான். சங்க இலக்கியத்தில் ஆணும், பெண்ணும் இணைந்து இல்லறம் நடத்தும் பண்பினைக் குறுந்தொகை காட்டுகிறது. திருமணமான புதிதில் தலைவி, தலைவனுக்கு உணவு சமைத்துப் பரிமாறுகிறாள். அனுபவக்குறைவால் சமைத்த மனைவியின் சமையலை கணவன் இனிது, இனிது என உண்ண அவனின் பேரன்பினை எண்ணி மனைவி புன்னகை பூக்கிறாள். தலைவியின் இல்லற மாண்பினைக் கண்டு செவிலித்ததாய்,

"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅது இக்
குவளை உண்கண் குய்புகை கமழத்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒன்னுதல் முகனே" (குறுந். 167)

என்று மகிழ்ச்சி கொள்கிறாள் என்பதை அறியலாம்.

தமிழ் மக்கள் பண்பாட்டிலும், பழக்க வழக்கங்களிலும் சிறந்த வாழ்வியல் அறங்களைப் பின்பற்றி வாழ்ந்தனர். ஆண், பெண் இருவரும் தம் ஒத்த அன்பினால் வாழ்வதே இல்லறம் என்பதனை நிலையான அறமாக கொண்டனர்.

“ஒரோ ஒகை தம்முள் தழீஇ ஒரோ ஒகை

ஒன்றன் கூறாடை உடுப்பவரே யாயினும்

ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை” (கலித். 18. 10–12)

என்று சான்றோர்கள் இல்லறத்தின் மேன்மையைப் பாராட்டியுள்ளனர் என்பதை கலித்தொகை குறிப்பிடுகிறது.

இல்லறம் சிறப்பாக நடைபெற ஆண், பெண் இருவரும் கருத்து ஒத்தவர்களாக வாழ வேண்டும் என்பதையும் அறிந்திருந்தனர்.

“மனையுறை வாழ்க்கை வல்லியாங்கு

மருவினி னியவு முளவே” (குறுந்.322)

என்று குறுந்தொகை சுட்டுகின்றது. இல்லறத்தோடு கூடிய வாழ்க்கையை விட வளமையானது, இனிமையானது வேறு பொருள்கள் இல்லை என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

இவ்வுலக வாழ்விற்கு இல்லறமே இனிய வழியாகும். இல்லறத்தில் இணைவோர்க்கு அன்பே அடிப்படை அன்பினில் கலந்தோரிடையே நட்பும் நம்பிக்கையும் வேண்டும். இல்லற இன்பத்திற்கு பொருளே துணையாகும். என்பதனைச் சங்க இலக்கியம் வாயிலாக எறிந்துகொள்ள முடிகின்றது.

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் பண்பு தமிழர் பண்பாட்டில் மிகவும் இன்றியமையாத ஒன்றாக கருதப்படுகிறது. விருந்தே புதுமை என்று தொல்காப்பியர் கூறுவார். எனவே புதியவர்களை வரவேற்று உணவிட்டு மகிழ்வதே விருந்து என்று

கொள்ளப்பட்டமை புலனாகும். விருந்தோம்பல் என்பது பெண்களின் சிறந்த பண்புகளுள் ஒன்று என்பதைத் தொல்காப்பியர் கீழ்க்கண்டவாறு கூறுகிறார்.

"கற்பும் காமமும் நாற்பால் ஒழுக்கமும்

மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்

விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்

பிறவும் அன்ன கிழவோன் மாண்புகள்" **(தொல்.பொருள்.களவு.3)**

தலைவியானவள் இல்லறத்தில் ஈடுபட்டு விருந்தோம்பலையும் பேணுகிறாள். சமுதாயத்தில் பழக்க வழக்கங்களில் இல்லறத்திற்குரியதான விருந்தினரை உபசரித்து இல்லறத்தின் கடமையாக மட்டும் இல்லாமல் இன்பமாகவும் அமைகின்றது. உயிர்களின் பசியைப் போக்கிப் பேருதவி செய்கின்ற ஒரு தலைசிறந்த பண்பாடு விருந்தோம்பலாகும்.

**வறுமையிலும் விருந்தோம்பல்**

கொடிய வறுமை இருந்தாலும் தனக்கெனச் சேமித்து வைக்காமல் இருப்பதைப் பிறருக்குக் கொடுத்து மகிழ்கின்ற பண்பு கொண்டோரைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.

குமணனிடம் தன் புலமையால் பெற்றுவந்த பரிசுப் பொருளை எல்லோருக்கும் கொடுக்குமாறு பெருஞ்சித்திரனார் தன் மனைவிக்கு அறிவுறுத்துவது இதற்குச் சிறந்த சான்றாகும்.

நின்னயந் துறைநர்க்கும் நீநயந் துறைநர்க்கும்

பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்

கடும்பின் கடும்பசிதீ யாழ நின்

நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்

இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது

வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்

எல்லோர்க்கும் கெடுமதி மனைகிழ வோயே

பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்

திருந்துவேற் குமண னல்கிய வளனே'' (புறம். 163)

என்று பெருஞ்சித்தரனார் தன்னுடைய மனைவிக்கு அறிவுறுத்துகிறார். நீண்ட நாட்களுக்குச் செல்வத்தை வைத்து வாழ்வோம் என எண்ணாது எத்தகைய வேறுபாட்டையும் பாராட்டாது எல்லோருக்கும் கொடுக்குமாறு கணவன் தன்னுடைய மனைவிக்கு வலியுறுத்தும் தன்மையை இப்பாடலில் காணமுடிகிறது.

**விருந்து போற்றும் பெண்மை**

விருந்து போற்றுவது பெண்மையின் இயல்பாகச் சங்க இலக்கியத்தில் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

''அல்லியாயினும் விருந்து வரினும் உவக்கும்

முல்லை சான்ற கற்பின்

மெல்லியல் குறுமகள் உறைவின் ஊரே'' (நற். 142)

இரவு நேரத்தில் விருந்தினர் வந்தாலும் முகமலர்ச்சியோடு உபசரிக்கும் மனைவியின் பண்பு போற்றப்படுகிறது.

தவச்சிறது ஆயினும் மிகப்பலர் என்னாள்

நீள்நெடும் பந்தர் ஊன்முளை ஊட்டும்

இல்பொலி மகடூஉப் போலச் சிற்சில

வரிசையின் அளிக்கவும் வல்லன்'' (புறம். 331)

என்று உள்ளது சிறிதே என்றாலும் விருந்தினர் மிகப் பலராக உள்ளனரே என்று கலங்காமல், பெரிய பந்தலின் கீழ் இருக்கச் செய்து, கணவனும் மனைவியுமாக இணைந்து விருந்து போற்றியதைப் புறநானூறு குறிப்பிடுகிறது.

விருந்து போற்றுதல் பெண்ணின் இல்லறக்கடமைகளுள் ஒன்றாக வலியுறுத்தப்பட்டாலும் கணவனின் பங்கும் அதில் இருந்தது. இருவரும் இணைந்து விருந்து போற்றியதைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. இதனை,

''வேட்டச் சிறாஅர் சேட்புலம் படாது

படமடைக் கொண்ட குறுந்தாள் உடும்பன்

விழுக் கிணம் பெய்த தயிர்க்கண் மிதவை

யாணர் நில்லவை பாணரொடு ஓராங்கு

வருவிருந்து அயரும் விரும்பினள்'' (புறம். 326)

மறக்குடித் தலைவன் கொடுப்பதில் சிறந்தவனாக இருக்கிறான். அதுபோல மனைவியும் ஊனோடு கூடிய விருந்திணைப் பாணர்களுக்கு அளிப்பதில் விருப்புடையவளாகத் திகழ்கிறாள்.

இவற்றிலிருந்து சங்க காலத்தில் விருந்தோம்பல் என்பது உயர் பண்பாகக் கருதப்பட்டு வந்ததை அறிய முடிகின்றது.

**தொகுப்புரை**

அகஇலக்கியங்கள், புற இலக்கியங்கள் என இருவகையாகப் பாகுபடுத்தப்பட்டுள்ள சங்க இலக்கியங்களுள் அகத்திணை தொடர்பான உள்ளடக்கங்களைப் பாடுபொருளாகக் கொண்டிருக்கும் அகஇலக்கியங்களில் கூறப்பட்டிருந்த அறக்கருத்துக்களை இவ்வியல் தொகுத்தாராய்ந்துள்ளது. களவியல் வாழ்க்கை மேற்கொண்டெழுகும்போதும், திருமணத்திற்குப் பின்னர் மேற்கொண்டெழுகும் வாழ்க்கையின் போதும் தலைவன், தலைவி, தோழி ஆகியோரும், ஏனைய பிற அகத்தினை மாந்தர்களும் பின்பற்ற வேண்டிய அறநெறிகள் குறித்து அகஇலக்கியங்கள் உணர்த்தும் செய்திகளை இவ்வியல் தெளிவுபடுத்தியுள்ளது.

## மேற்கோள் விளக்கம்


1. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல், ப.107
2. க. வெள்ளைவாரணர், தொல்காப்பியப் பொருளியல், ப. 38
3. வ.சுப. மாணிக்கம், தமிழ்க்காதல் ப.84
4. ஈ.கோ. பாஸ்கரதாஸ், அகப்பொருள் பாடல்களில் தோழி, ப.1
5. கு. மோகனராசு, தொல்காப்பியர் ஓர் அறவாணர், ப.40
6. க.ப. அறவாணன், அற்றை நாட்காதலும் வீரமும், ப.131
7. திரு.வி. கல்யாணசுந்தரம், பெண்ணின் பெருமை, ப.203

# இயல் – 3

## புறஇலக்கியங்களில் அறம்

கண்ணால் கண்டு வாயால் விளக்கிச் சொல்லக்கூடிய செய்திகள் அனைத்தும் புறப்பொருளிலே அடங்கும். பண்டைத் தமிழரின் வாழ்விலக்கணத்தை வரையறை செய்யும் நூல் தொல்காப்பியம். தொல்காப்பியர் கூறிய அகவாழ்வு, புற வாழ்வுகளின் இலக்கணங்களோடு இலக்கியச் சான்றுளைத் தருவது சங்க இலக்கியம். சங்க பாடல்களில் அகவுலக அறங்களும், புறவுலக அறங்களும் பொதிந்துள்ளன. இரண்டும் ஒன்றை ஒன்றுச் சார்ந்தன என்பதைச் சங்க செய்யுட்கள் தெளிவாகக் காட்டுகின்றன. புறப்பொருளைப் பாடும் இலக்கியங்களும் காணலாகும் அரசியல், போர், வீரர், கொடை, புகழ், வரலாறு ஆகிய பாடுபொருள்களைக் குறிப்பிடும்போது அறநெறிகளைப் புறஇலக்கியங்கள் எடுத்துரைக்கும் தன்மைகுறித்து இவ்வியல் ஆராயமுற்படுகிறது.

**அரசு**

மக்கள் கூட்டமாகக் கூடி வாழ்கிறபோது ‘அரசு’ என்ற நிறுவனம் அமைவது மனித வரலாற்றில் தவிர்க்க இயலாத ஒன்றாகிறது. வடவேங்கடம் முதல் தென்குமரி வரை தமிழகம் என்றழைக்கப்பட்டது. இருப்பினும் ஒரே அரசு சங்க காலத்தில் அமையவில்லை. சேரர், சோழர், பாண்டியர் என்று மூன்று அரசு மரபுகள் தமிழகத்தை ஆண்டனர். சேர, சோழ, பாண்டியர்கள் எத்தனையோ, சிற்றரசர்களை வென்று அடக்கியுள்ளனர் என்றாலும் இவர்கள் மூவரில் ஒருவர் மட்டும் தலைமைத் தாங்கும் நிலை உருவாகவில்லை. எனவே தமிழகத்தைச் சங்க காலத்தில் மூவேந்தர்களும் ஆண்டனர். அவர்களைச்

சார்ந்து குறுநில மன்னர் பலரும் ஆண்டுள்ளனர். சங்க கால மக்கள் முடியரசை மட்டுமே அறிந்திருந்தனர். அரசுக்கு தலைமை தாங்கியவன் அரசன். மக்கள் விரும்பிய மன்னனைத் தேர்ந்தெடுத்தல் இயலாது. தந்தைக்குப் பிறகு மகன் தலைமையேற்றலே அக்கால மரபு. அரசன் இறந்த பிறகே மகன் அரியணை ஏற்றல் வேண்டும் என்ற நிலை நிலவியிருந்தது. அரசு எவ்வாறு இயங்க வேண்டும் என்பது பற்றிச் சங்க காலத்தில் மக்கள் தெளிவோடு இருந்தனர்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்படாதனே மன்னன் என்றாலும் தன்னுடைய பெரும் பொறுப்பை அவன் சரியாக உணர்ந்திருந்தான். பிறருக்கு பணியாத பெருவீரமும் மக்களைக் காக்கும் மாண்பும் வரி வழங்கும் வள்ளன்மையும் சங்க காலத்தில் அரசனிடம் எதிர்பார்க்கப்பட்டன. சங்க காலத்தில் மன்னர் ஆட்சி மக்களை முதன்மைப் படுத்தியே இருந்தது. மன்னரும் நல்லாட்சி வழங்குவதையே உயரிய கடமையாக உணர்ந்திருந்தனர்.

தனி ஒருவனே தலைமை தாங்கும் அரசுதான் சங்க கால ஆட்சிமுறை. ஆனால் அமைச்சர் முதலான ஆட்சிச் சுற்றமும் இருந்தது. ஐம்பெருங்குழு, நாற்பெருங்குழு என அரசனுக்கு உதவிய குழுவினர் பற்றியும் அறியமுடிகிறது.

> “அறம் அகத்தையும் அரசு புறத்தையும் துப்புரவு செய்ய எழுந்த இரு நெறிகளாகும். அரசுச் சட்டத்தால் ஒறுத்து அறத்தை நிலைநாட்ட முயல்கிறது. அரசுச் சட்டங்கள் செயல்பட இயலாத நிலையில் அறக்கருத்துக்கள் மனித மனங்களைச் செம்மைப்படுத்துகின்றன”[1]

என்கிறார் அர. சிங்காரவடிவேலன்.

**அரசுரிமை**

மன்னனுக்கு நாட்டினை ஆளும் உரிமை வழிவழியாக வந்துள்ளது. தந்தைக்குப் பின்னர் மகன் பட்டத்துக்கு வருவதே முறையாக நிலவியிருந்திருக்கிறது. அக்கால மன்னர் தாம் அரசியலறிவு உடையவராய் இருந்தாலன்றி அரசியலை இனிது நடத்த இயலாது என்பதை உணர்ந்திருந்தனர். அரசியலறிவு இல்லையெனில் பகைத்துன்பம் பெருகி அரசியல் வாழ்வைச் சீரழிக்கும் என்றும் கருதினர். இதனை,

“கழி உப்பு முகந்து கல்நாடு மடுக்கும்

ஆரைச் சாகாட்டு ஆழ்ச்சி போக்கும்

உரனுடை நோன் பகட்டு அன்ன எங்கோன்” (புறம். 60; 7–9)

எனும் புறநானூற்றுப் பாடல் காட்டுகின்றது. உப்பங்கழியில் விளைந்த உப்பை மலைநாட்டுக்கு எடுத்துச் செல்லும் சகடத்தினை இழுத்துச் செல்லும் எருதுகள் தம் வலிமையைத் திரட்டி முன்னேறுகின்றன. அதுபோல அரசியலாகிற சகடம் தன்னை அழுத்தி முன்னேறிவிடாது நசுங்கினாலும், அஞ்சாமல் முழு ஆற்றலுடனும் முன்னேறும் தன்மை உடையவன் மன்னன் என்று மன்னனுக்குரிய இயல்புகளைச் சுட்டப்படுகின்றன.

**மன்னனுக்குரிய அரசியலறம்**

நல்ல அரசியல் இல்லாவிட்டால் எந்த நாடும் நாசமடையும். நல்ல அரசியல் அமைப்புள்ள நாட்டில்தான் மக்கள் ஒன்றுபட்டு வாழ்வார்கள். மக்களுடைய வாழ்க்கைத்தரமும் உயர்ந்திருக்கும். இந்நாடே செல்வங் கொழிக்கும் சிறந்த நாடாக விளங்கும். இன்ப வாழ்வுக்கு உதவும் எல்லாப் பண்டங்களும் விளையும்

இணையற்ற நாடாகத் திகழும். மக்கள் சாதி, மத, இன வெறிகளினால் மாறுபட்டு போராட மாட்டார்கள். மனிதத் தன்மையுடன் ஒன்றுபட்டு வாழ்வார்கள். இவ்வுண்மையைச் சங்க கால மக்கள் தெளிவாகத் தெரிந்திருந்தனர்.

அரசன் தன்னுடைய நன்மைக்காக இன்பத்திற்காக ஆள்பவனல்ல. நாட்டின் நன்மைக்காக வாழ்பவன். குடிமக்களின் குறைகளைப் போக்குவதற்கு வாழ்பவன் என்ற கொள்கையை ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னேயே தமிழர்கள் வலியுறுத்தி வந்தனர். குடி மக்களுக்காகத்தான் அரசு. குடி மக்களின் ஊழியன்தான் மன்னவன் என்ற கருத்து நிலைத்திருந்தது. இதனால்தான் பண்டைத் தமிழ் மன்னர்கள் அநீதிக்கு அஞ்சினர். குடிமக்களின் எண்ணப்படி கோலோச்சினர். நீதிக்கும் நேர்மைக்கும் எடுத்துக்காட்டாக வாழ்ந்தனர். உலகத்துக்கு உயிர் அரசுதான் என்பதைச் சங்ககால மக்கள் உணர்ந்திருந்தனர்.

நீதி நெறியுடன் ஆட்சிப்புரியும் மன்னனைக் கடவுளுக்கு நிகராகக் கூறுவர். உலகிற்குத் தானே உயிரென்பதை மன்னன் அறிதல் வேண்டும். மழையில்லாமல் நீரில்லை. மன்னன் இல்லாமல் மக்கள் இல்லை. மண்ணாகிய உலகத்தில் நீரும், நெல்லுமே உணவாகிய உயிர்களைக் காப்பவனாகும். இதை மன்னன் அறிந்து செயல்பட்டதை,

“நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யானுயிர் என்பதை அறிகை
வேல்மிகு தானை வேந்தர்க்குக் கடனே” (புறம்.186)

என்ற புறநானூற்று வரிகள் புலப்படுத்துகின்றன. இவற்றிலிருந்து அரசியலின் முதன்மையையும், அரசனுடைய கடமையையும் அறியமுடிகின்றது.

சிறந்த மன்னனைப் பற்றி பதிற்றுப்பத்தில்,

"சினனே காமம் கழி கண்ணோட்டம்
அச்சம் பொய்ச்சொல் அன்புமிக உடைமை
தெறல் கடுமையொடு பிறவு மிவ்வுலகத்து
அறந்தெரி திகிரிக்கு வழியடையாகும்" (பதிற்று. 22)

என்று குறிப்பிடப்படுகின்றது. பொருளற்ற கோபம், காமவெறி, அளவுக்கு மீறிப் பகைவர்களுக்கு பயப்படுதல், பொய்கூறுதல், பொருளின்மேல் பேராசை, நன்மைகளை நாசம் செய்தல், கடுஞ்சொற் கூறல், இவைகளும், இவைகளைப் போன்ற குணங்களும் இவ்வுலகிலே அறநெறியிலே செல்லும் வண்டிக்கு அது செல்லுகின்ற வழியிலே போடப்படும் முட்டுக் கட்டைகளாகும். இத்தகைய முட்டுக் கட்டைகள் ஏற்படாமல் சிறப்பாக நாட்டைக் காப்பதில் மன்னர்கள் செயல்பட்டதை பதிற்றுப்பத்தின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

தன்னுயிர்ப் போலவே உலகத்தில் உள்ள எல்லா உயிர்களையும் எண்ணிப் பாதுகாக்கின்றவன் மன்னன் என்பதனை,

"தன்னுயிர் போலத் தழிஇ உலகத்து
மன்னுயிர் காக்கும் மன்னன்" (கலித். 143; 1–2)

என்று கலித்தொகை எடுத்துரைக்கின்றது.

ஒரு மன்னனுடைய முதற்கடமை இன்னதென்று கலித்தொகையில் கூறப்பட்டுள்ளது. தனது நாட்டில் வாழும் உயிர்களையெல்லாம் தன்னுயிரைப் போலவே எண்ணிப் பாதுகாப்பவனே மக்களால் மதிக்கப்படுவான் என்பதை இவற்றின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**அரசியல் சுற்றம்**

அறத்தை நிலைநாட்ட மன்னர்கள் மட்டும் தனியே செயல்படவில்லை. அவர்கள் கலந்து ஆலோசிக்க சங்கப் புலவர்களும், அமைச்சர்களும் செயல்பட்டனர். அரசனுடன் இருந்து நீதியெனக் கண்டவற்றை எடுத்துக்கூறி மன்னனுக்கு உறுதுணையாக இருந்தனர். நெடுஞ்செழியனின் அரசவையில் அவனுக்கிருந்த சுற்றம் குறித்து,

"முந்நீர் நாப்பண் ஞாயிறு போலவும்

பன்மீ னடுவட் டிங்கள் போலவும்

பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கு" (மதுரை.768–770)

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது.

பால் தன்னுடைய இயல்பிலிருந்து குன்றி புளித்தாலும், சூரியன் தன்னுடைய ஒளி குன்றி இருட்டினாலும், நான்கு வேத நெறிகளும் திரியினும் மாறாத அரசியல் சுற்றத்தோடு அரசன் செயல்பட வேண்டும் என்பதை,

"பால் புளிப்பினும் பகல் இருளினும்

நால் வேத நெறி திரியினும்

திரியாச் சுற்றமொடு முதுசேண் விளங்கி

நடுக்கமின்றி நிலியரோ அத்தை'' (புறம். 2 ; 17–20)

என்ற பாடலின்வழிப் புலவர் அறிவுறுத்துகிறார். இவற்றிலிருந்து மன்னன் அறநெறியோடு ஆட்சிபுரிய அரசியல் சுற்றம் இருந்து செயல்பட்டதை அறிந்து கொள்ளமுடிகின்றது.

**மன்னரின் கோல் அறம்**

மன்னனின் கோலானது நீதியைக் குறிப்பதாக அமைந்திருந்தது. மன்னன், மக்கள் காண்பதற்கு எளியவனாக காட்சிதந்து ஆராய்ந்து நீதியை நடுநிலையோடு வழங்க வேண்டும் என்பதை,

"அறம்புரிந்தன்ன செங்கோல் நாட்டத்து

முறை வேண்டு பொழுதின் பதன் எளியோர் ஈண்டு

உறை வேண்டு பொழுதில் பெயல் பெற்றோரே'' (புறம். 35; 14–16)

என்ற பாடல்வரி உணர்த்தும்.

நாட்டை ஆளுகின்ற மன்னன் சரியான முறையில் நீதி வழங்கவேண்டும் என்பதை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

"கோல் என்பது அரசன் அதிகார முறையில் வீற்றிருக்கும் போதும், செல்லும்போதும், கையிற் பிடித்திருக்கும் தண்டு. அது மணியிழைத்து ஓவிய வேலைபாடமைத்து அமைக்கப் பெற்றிருக்கும். கோலானது ஆட்சிக்குறி என்பதால் அரசனுடைய ஆட்சி நேர்மையானதாயிருக்க

வேண்டுமென்பதைக் குறிப்பதற்கு அது நேரானதாகச் செய்யப்பட்டிருக்கும். அதனால் அதற்குச் செங்கோல் என்று பெயர். செம்மை நேர்மை. கொடுமையான ஆட்சி கொடுங்கோல் என்றும் குறிக்கப்படும். கொடுமை – வளைவு. ஆட்சியின் நேர்மையாவது அறநெறி வழி நேரே செல்லுதல்''[2]

என்பது செங்கோல் குறித்து தேவநேயப்பாவாணர் தரும் விளக்கமாகும்.

நாட்டில் மன்னனின் ஆட்சி சிறப்பாக இருப்பதே அறம். ஒரு நாட்டில் சிறந்த ஆட்சி நடைபெற்றால் அங்கு அறமும் நிலைத்திருக்கும் என்பதை அறியமுடிகின்றது.

தொல்காப்பியர் அரசர்க்குரிய சின்னங்களாகப் படை, கொடி, குடை, முரசு, புரவி, களிறு, தேர், தார் முடி போன்றவற்றைக் கூறியுள்ளார். இதனை,

''படையும் கொடியும் குடையும் முரசும்
நடை நவில் புரவியும் களிறும் தேரும்
தாரும் முடியும் நேர்வன பிறவும்
தெரிவு கொள் செங்கோல் அரசர்க்கு உரிய'' **(தொல்.பொருள்.மரபு.616)**

என்ற நூற்பாவழி அறியலாம். இவற்றுள் குடையானது காவல் தொழில் செய்வதையும், முடியானது தலைமையையும் கோலானது நீதியையும் குறியீடாக உணர்த்துவனவாகும்.

**மன்னனின் குடையறம்**

உலகிற்குக் காவலாக விளங்குவது மன்னரின் வெண்கொற்றக் குடையாகும். இதனை,

**"காவல் வெண்குடை கால்பரிந்து உலறவும்" (புறம். 229; 28)**

என்ற பாடல்வரி மூலம் அறியலாம்.

மன்னனின் வெண்கொற்றக்குடை வெயிலை மறைப்பதற்காக எடுக்கப்பட்டதன்று. தன் கீழ் வாழ்கின்ற குடி மக்களின் துன்பத்தைத் தீர்ப்பதைக் கடமையாகக் கொண்டது என்பதை,

"கண்பொர விளங்கும் நின் விண்பொரு வியன்குடை
வெயில் மறைக் கொண்டன்றோ அன்றே; வருந்திய
குடி மறைப்பதுவே கூர்வேல் வளவ" (புறம்.35)

என்று வெள்ளைக்குடி நாகனார் பாடல் குறிப்பிடுகிறது.

மன்னனின் வெண்கொற்றக்குடை அவன் பெற்ற வெற்றிக்கு அடையாளமாகவும், மக்களைத் துன்பமாகிய வெயிலினின்றும் காத்து அருள் செய்வதைக் கடமையாகவும் கொண்டது. எனவே காவல் தொழிலை உணர்த்தும் அடையாளமாகக் குடை இருந்ததை அறியலாம்.

**ஆட்சியின் அடிப்படை**

ஆட்சி அலங்கோலமாகாமல் நிலைத்திருப்பதற்கான அடிப்படையை ஆளுவோர் அறிந்திருக்க வேண்டும். அந்த அடிப்படை ஆட்டமில்லாமல்

நடந்துகொள்வோருடைய ஆட்சிதான். அழியாமல் நிலைத்திருக்கும் அவ்வாட்சியைத் தான் மக்கள் மதிப்பார்கள். ஆதரிப்பார்கள்.

அனைவரையும் ஒன்றாகக் கருதி – விருப்பு வெறுப்பின்றி சமநீதி வழங்கும் அறநெறியைப் பின்பற்றுவதே ஆட்சியின் அடிப்படை. இந்த அடிப்படையை மறந்துவிட்டு அதிகாரச் செருக்கால் படை பலத்தால் மக்களை அடக்கி ஆண்டுவிடலாம் என்று நினைப்பவர்கள் அரசின் அடிப்படையை அறியாதவர்கள். இவ்வுண்மையை,

“கடுஞ்சினத்த கொல்களிறும்

கதழ்பரிய கலிமாவும்

நெடும்கொடிய நிமிர்தேரும்

நெஞ்சுடைய புகல்மறவரும் என

நான்குடன் மாண்டது ஆயினும், மாண்ட

அறநெறி முதற்றே அரசின் கொற்றம்” (புறம். 55)

என்ற புறநானூற்றுப் பாடல், அரசாட்சியின் வெற்றி சிறந்த அறநெறியைத்தான் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது என்பதை உணர்த்துகிறது.

**சிறந்த ஆட்சியே அறம்**

பண்டைத் தமிழ் மன்னர்கள் தங்களுடைய நாட்டைக் கண்ணும் கருத்துமாகக் காப்பாற்றி வந்தனர். அவர்கள் தமக்காக வாழவில்லை. குடிமக்களின் குறை போக்கவே வாழ்ந்தனர். குடிமக்களும் மன்னனைத்

தங்களைக் காக்கும் கடவுளாகவே மதித்தனர். மக்களின் அன்பையும் ஆதரவையும் பெற்ற மன்னர்களே பகைவர்களைப் போரிலே வென்றனர்.

> "பண்டைத் தமிழ் மன்னர்களின் ஆட்சி தனியதிகார ஆட்சிதான். ஆயினும் அது குடிமக்களால் கொண்டாடப்படும் ஆட்சியாக இருந்தது. அவர்கள் விரும்பும் ஆட்சியாக இருந்தது"[3]

என்கிறார் சாமி சிதம்பரனார்.

உயர்ந்த நாடென்றால் அந்த நாட்டிலே வாழ்வோர் அனைவரும் கல்வி கற்றிருக்க வேண்டும். தொழிலாளி, முதலாளி சச்சரவுகள் தோன்றுவதற்கு இடமில்லாமல் இருக்க வேண்டும். அறிஞர்களின் ஆதரவைக் கொண்டு அநீதிக்கும் அரசாட்சி இடந்தரக் கூடாது. நாட்டைப் பட்டினியும் நோயும் சூழ்ந்து பயமுறுத்தாமல் பாதுகாக்க வேண்டும். இத்தகைய நாட்டில் உள்ளவர்கள்தான் கவலை இன்றி உடல் உரமுடனும், நரைதிரையின்றி நீண்ட நாள் உயிர் வாழ்வார்கள் என்பதைப் பிசிராந்தையார் தெளிவுபடுத்துகிறார்.

> "யாண்டு பலவாக நரையில ஆகுதல்
> யாங்கு ஆகியர் என வினவுதிர் ஆயின்
> மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
> யான்கண் மனையர் என் இளைஞரும் வேந்தனும்
> அல்லவை செய்யான் காக்கும் அதன் தலை

ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்

சான்றோர் பலர் யான் வாழும் ஊரே'' (புறம். 191)

என்னும் பாடலில் மேற்சுட்டிய கருத்து விளக்கப்படுகின்றது. நாடாளும் மன்னனின் ஆட்சி சிறப்பாக இருப்பதே அறமாகும் என்பதைப் பல பாடல்கள் தெரிவிக்கின்றன.

**மன்னர்க்குரிய அரசியல் கடமைகள்**

தன்னுடைய நாட்டில் வாழும் குடிமக்களைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்ட மன்னரின் கடமைகள் பல. அவை,

1. நாட்டினைக் காவல் செய்தல்
2. குடியோம்புதல்
3. பகைதெறுதல்
4. முறைசெய்தல்
5. நீதி வழங்கல்

என்பனவாகும். வேற்று மன்னரோடு பகை நேர்ந்த காலங்களிலும் முன்னணியில் நின்றுபோர் செய்தனர். மற்ற காலங்களில் அமைதியாக நாட்டில் இருந்து அறநெறி தவறாது அரசாண்டனர். மன்னர் முறையாக நாட்டை ஆளுவதற்கு அவர்களின் கல்வியறிவு, அரசியலறிவு உறுதுணையாக இருந்தன. புலமையில் சிறந்த புலவர் பெருமக்களின் அறிவுரைகளை ஏற்றியும் போற்றியும் அரசு புரிந்தனர்.

**நாடு காத்தல்**

காத்தல் செயல் அறங்களுள் ஒன்றாகக் கருதப்படும். மக்களைப் பகைவரிடமிருந்து காத்தலும், இயற்கைச் சீற்றங்களிலிருந்து காத்தலும், தன்னுடைய நாட்டில் தீயோரிடம் இருந்து நாட்டைக் காத்தலும் இதிலே அடங்கும். எனவே நாடு காவல் என்பது மக்களைக் காத்தல், களவை ஒடுக்குதல், கொலைச் செய்வதைத் தடுத்தல் வரி மிகுதியாக வாங்காமல் மக்களுக்கு நல்லவை செய்தல் போன்றவைகளை உள்ளடக்கியதாகும்.

பண்டைத் தமிழ் வேந்தர் தமது நாட்டில் வாழும் மக்கள் நலமுடன் வாழ்வதையும் அமைதியாக வாழ்வதையும் நோக்கமாகக் கொண்டு அரசியலை நடத்திச்சென்றனர். அவர்கள் குடிமக்களைக் காத்த திறத்தினைச் சங்க இலக்கியங்கள் சிறப்பித்துக் கூறுகின்றன.

பாண்டியன் தன்னுடைய நாட்டைக் காத்த திறத்தினை,

"மறப்போர் பாண்டிய ரறத்தில் காக்கும்

கொன்றையம் பெருந்துறை" (அகம். 27; 8–9)

என்று அகநானூறு கூறுகிறது. தொண்டைமான் இளந்திரையனின் ஆட்சி அறத்துடன் கூடிய ஆட்சிக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது. அவன் அமைத்திருந்த காவலர் படைத்திறத்தால் அவன் நாட்டில் வழிச் செல்வோரைத் துன்புறுத்திக் களவு செய்யும் கள்வர்கள் இல்லை. இடியும், பாம்பும், காட்டு விலங்குகளும் ஆகியவற்றினால் ஏற்படும் துன்பமும் அங்கு இல்லை என்பதைப் பெரும்பாணாற்றுப்படை மூலம் அறியலாம்.

மேலும் அம்மன்னன் மலையில் விளையும் பொருளும், கடலில் விளையும் பொருளையும் காப்பதற்கு காவல் படை அமைத்துக் காத்து வந்தான். மிளகுப் பொதிகளைத் தாங்கி செல்லும் வழிகளில் காவல் இருந்ததை,

"புணர்ப்பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறத்

தணர்ச் செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்

உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்" (பெரும். 79–81)

என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது. இவ்வாறு மன்னர்தம் நாட்டையும், நாட்டு மக்களையும் காத்த திறத்தினைச் சங்க இலக்கியம் புலப்படுத்துகிறது.

**குடிமக்களைப் பாதுகாத்தல்**

குடிமக்களைப் பாதுகாத்தல் மன்னர்க்குரிய கடமையாகும். கொடையும், அன்பும், செங்கோலும், குடிமக்களைக் காத்தலும் ஆகிய இந்நான்கு செயல்களையும் உடையவன் அரசர்களுக்கெல்லாம் விளக்கு போன்றவனாவான். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வணிகரின் குடிகளையும், உணவுப் பொருளை விளைவித்துக் கொடுக்கும் வேளாளர் குடிகளையும் காத்தலைத் தன்னுடைய கடமையாகக் கொண்டான். நோயும், பசியும் நீங்க தன் நாட்டைக் காத்தான். இதனை,

"மழை வேண்டு புலத்து மாரி நிற்ப

நோயொடு பசி இகந்து ஒரிஇ" (பதிற்று. 13; 23–24)

என்று பதிற்றுப்பத்து பாடல் சிறப்பிக்கின்றது.

வறுமையால் வாடிய குடிமக்களை நாட்டைவிட்டுச் செல்லவிடாமல் தடுத்து குடிமக்களைக் காத்து கரிகாலன் போற்றிய விதத்தை,

“செல்குடி நிறுத்த பெரும்பெயர்க்கரிகால்
வெல்போர்ச் சோழன் இடையாற்று அன்ன
நல்இசை வெறுக்கை தருமார்” (அகம். 141; 22–23)

என்று கரிகாலன் குடிமக்களைக் காத்த விதத்தை அகநானூறு பாடல்வரி புலப்படுத்தும்.

எனவே நாட்டில் முதன்மைத் தொழில்களாக உழவுத் தொழிலும், வணிகமும் சிறந்து விளங்கின. அத்தொழில்களில் ஈடுபட்டோர் நாட்டு நலனுக்கு காரணமாயினர். எனவே உழவர்குடிகளையும், வணிகர் குடிகளையும் காக்க வேண்டியது மன்னரின் கடமையாக இருந்திருக்கிறது. பண்டைத் தமிழ் மன்னர் தம் குடிமக்களைக் காத்தலை அறநெறியாகக் கொண்டதை இவற்றால் அறியப்படுகிறது.

**நீர்வளத்தைப் பெருக்குதல்**

ஒருநாடு நல்ல நாடாக விளங்குவதற்கு உணவுப் பொருள்கள் இன்றியமையாதவை ஆகும். உணவுப் பொருள் பெருக்கத்திற்கு நிலவளமும், நீர்வளமும் தேவையாகும். சோழநாடு நிலவளமும், நீர்வளமும் நிறைந்து விளங்குகிறது. அனைத்து வளங்களும் பெற்ற நாடாக சோழநாடு விளங்குகிறது. நீர் வளத்தை உண்டாக்குதலும் சிறந்த அறமாகும் என்பதை,

"காடு கொன்று நாடாக்கிக்

குளந்தொட்டு வளம் பெருக்கி" (பட்டின. 283)

என்று சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. நீர்வளத்தைப் பெருக்கிய காரணத்தால் சோழவேந்தன் அறங்காத்த பெருமையைப் பட்டினப்பாலை மூலம் அறிய முடிகின்றது. மக்கள் வறுமையின்றி வாழ நீர்வளமும் அத்தியாவசியமானது. ஆகையால் நீர்வளத்தைப் பெருக்குதலும் சிறந்த அறமாகக் கருதப்பட்டது.

**வரி பெறுதல்**

அரசாட்சி நன்கு நடைபெறப் பொருள் முக்கியமானது. அப்பொருளின் இன்றியமையாமையினை உணர்ந்த மன்னர் நிலவரி, சுங்கவரி போன்ற வரிகளின் வாயிலாகப் பொருள் பெற்றனர். "மக்களிடமிருந்து பெறும் பொருளானது வரி, புரவு, இறை என்ற பெயரில் வழங்கப் பெற்றது"[4] என்கிறார் வே. முத்துலட்சுமி.

மன்னர் மக்களின் நிலைமையைக் கருத்தில்கொண்டு அதற்கேற்ப வரி பெறும் வேந்தனை,

"குடி புரவிக்குங் கூரி லாண்மைச்

சிறியோன்" (புறம். 75; 4–5)

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது. குடிமக்களின் நிலையைப் புரிந்து மன்னர் வரி கொள்ளுதல் வேண்டுமென அக்காலப் புலவர்கள் மன்னர்க்கு அறிவுறுத்தினர்.

“காய் நெல் அறுத்துக் கவளம் கொளினே
மாநிறைவு இல்லதும் பன்னாட்கு ஆகும்
நூறு செறுவாயினும் தமித்துப்புக்கு உணினே
வாய்புகுவதினும் கால்பெரிது கெடுக்கும்
அறவுடைய வேந்தன் நெறியறிந்து கொளினே
கோடியாத்து நாடு பெரிது நந்தும்
மெல்லியன் கிழவனாகி வைகலும்
வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு
பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்
யானை புக்க புலம்போலத்
தானும் உண்ணான் உலகமும் கெடுமே” (புறம். 184)

பாண்டியன் அறிவுடை நம்பிக்கு மக்களை வருத்தி வரி வாங்குதல் தவறு என்பதைப் பிசிராந்தையார் மேற்சுட்டிய பாடலில் வலியுறுத்தியுள்ளார். அரசன் அறிவுடையவனாக, வரி பெறும் முறையறிந்து வரி வாங்கினால், அவன் நாடு கோடிக்கணக்கான பொருளை ஈட்டிக் கொடுத்துத் தானும் தழைக்கும். ஆனால் அரசன் அன்பின்றிப் பெறும் பொருளானது யானைப் புக்க புலம் போல அவன் நாடு கெட்டொழிவதற்கு வழிவகுக்கும் என அறம் உரைக்கிறார்.

வரிவாங்குவது மக்கள் நலம் நாடுவதாக இருக்க வேண்டும். பொருள் பெறுவதை மட்டும் நோக்கமாகக் கொள்ளாமல் மக்களிடம் அருளுடன் பொருள் பெறும் அருளாளர்களாக மன்னர் விளங்க வேண்டும் என்பதைப்

பிசிராந்தையார் பாடல் எடுத்துரைக்கின்றது. வரிபெறும் முறையில் மன்னர் அறங்காத்தனர் என்பதும், அந்நெறியில் இருந்து பிறழ்வோரைப் புலவர் அறிவுரை கூறி அறநெறிப்படுத்தினர் என்பதும் இவற்றால் அறியக் கூடியனவாகும்.

**நீதி வழங்குதல்**

பேரூர்களில் அறங்கூறவையங்கள் அறம் நிலைநாட்டும் அமைப்புகளாக இயங்கின. இவைகளே அன்றி மன்னன் இருந்து மக்கள் குறைகளைத் தீர்த்து, பாணர், புலவர் போன்றோருக்கு பரிசு வழங்கும் பணிகளையும் மேற்கொண்டனர். இவ்வவைகள் நீதி வழங்குவதற்கு உற்றதுணையாக செயல்பட்டமைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

நீதி மன்றத்திற்குச் சங்க காலத்தில் **அறங்கூர் அவையம்** என்ற பெயர் கூறுவர். பண்டைய தமிழர் நீதியாலே நேர்மைக் காட்டினர். அரசனது ஆட்சிக்குழு கூடும் இடம் அவை எனப் பெற்றது. அரசனைச் சார்ந்த சான்றோர், பெரியோர் கூடும் இடம் அரசவையாகும். இந்த அறங்கூர் அவையத்தில் இடம் பெற்றவர்கள் பயத்தையும், துன்பத்தையும், ஆசையையும் விட்டவர்கள். ஒரு பக்கத்தாரிடம் கோபமும், மற்றொரு பக்கத்தாரிடம் மகிழ்ச்சியும் காட்டாமல் தம் உள்ளத்தை நடுநிலையிலே நிறுத்திக் கொண்டவர்கள். சிறந்த ஒழுக்கமுடையவர்கள். இத்தகையவர்கள் நடுநிலையோடு நின்று நீதி வழங்கினர்.

"அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்

செற்றமும் உவகையும் செய்யாது காத்து

நிறைந்த அறத்தின் இருந்து பிறழாத சான்றோரைத் தேடி அவர்களை அறங்கூறவையத்தில் அமர்த்தும் பணியை மன்னனே மேற்கொண்டான்.

தன்னிடம் நீதி கேட்டு வந்த இரு முதியவர்களுக்குச் சோழன் கரிகாலன் முதியவர் வேடத்தில் நீதி வழங்கியதை,

"................................................................. முதியோர்

அவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவும்" **(பொருந. 187–188)**

எனப் பெருநராற்றுப்படை கூறுகின்றது. மக்களுக்கு நீதி வழங்கியதைப் போலவே மற்றை உயிர்களுக்கு ஒப்ப நீதி வழங்கிய மன்னரைச் சங்க இலக்கியங்கள் போற்றுகின்றன. தன்னிடம் அடைக்கலம் வேண்டிவந்த புறாவிற்காகத் தன்னையும் கொடுத்தவன் சிபி எனும் சோழ மன்னன். அவனது அருஞ்செயலைப் புறநானூறு போற்றுகின்றது.

**மன்னரின் கொடையறம்**

வரையறை இல்லாமல் வழங்கலும், பயன் கருதாமல் கொடுத்தலும் கொடை என்று கூறப்படும். எனவேதான் புலவர் பெருமக்கள் கொடைக்கு உவமையாக்கினர். ஒரு பொருளை விலை கூறி விற்று அதற்கு ஈடாகப் பிறிதொன்றினைப் பெறுவது வணிகமுறையாகும். ஆனால் அறஞ்செய்வதனால் புகழும் இன்பமும பெறலாம் என்று கருதியே அறச்செயல்கள் செய்துவந்தனர் பண்டைத் தமிழ் மக்கள். பாரியின் கொடை குறித்துக் கபிலர்.

"பறம்பு பாடின ரதுவே யிறம்பூண்டு

பாரியும் பரிசில ரிரப்பின்

வாரே னென்னா னவர்வரை யின்னே" **(புறம். 108; 4–6)**

என்று கூறுகிறார். பாரி கொடையறம் மேற்கொண்டு பரிசிலர்க்குத் தன்னையே பரிசிலாக அளிக்கும் திறமுடையவன் என்பதை இவ்வடிகள் உணர்த்துகின்றன. எனவே கொடை கொடுத்தல் அறச்செயல் என்பதும், கொடையளிப்பதை அறமாகக் கடனாகக் கொண்டு வாழ்ந்து வந்தவர்கள் பண்டைத் தமிழ் மன்னர்கள் என்பதும் இவற்றிலிருந்து உறுதியாகின்றன. வறுமை அடைந்தவருக்கு அவர் வேண்டும் போது கொடுப்பது ஈதல், அல்லது ஈகை எனவும், தம்மை நாடி வரும் இரவலர்க்கும், பரிசிலர்க்கும் அவரைப் புரக்க வரையறை இல்லாமல் கொடுத்தல் கொடை எனவும் கூறப்படுகிறது.

மறுமைப் பயன் கருதாமல் பிறர் வறுமையைத் தீர்க்கும் கடமையில் இன்பம் கண்டவன் பேகன். இவனது கொடைச் சிறப்பைப் பரணர் உணர்த்துகிறார். மழை வளமுடைய மலையின் பக்கத்தில் கானமயிலொன்று தன் தோகையை விரித்து ஆடிக்கொண்டிருந்தது. அதைக் கண்டவுடன் குளிர் தாங்காமல் நடுங்குகின்றது என்று எண்ணினான். உடனே தனது போர்வையை அதன் மீது போர்த்தினான்.

“வானம் வாய்த்த வளமலைக் கவா அன்

கானமஞ்சைக்குக் கலிங்கம் நல்கிய

அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்

பெருங்கல் நாடன் பேகனும்” (சிறுபாண். 84–87)

என்ற வரியால் அஃறிணை உயிர்களின் மீதும் இரக்கம் கொண்ட பேகனின் தன்மையைப் புரிந்து கொள்ள முடிகிறது.

கொல்லிமலைத் தலைவனான ஓரி தன்னை நாடி வந்த பரிசிலர்க்குத் தன்னுடைய நாட்டையே பரிசாகக் கொடுத்து உதவியவன்.

"நளிசினை
நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த
காரிக் குதிரைக் காரியொடு மலைந்த
ஓரிக்குதிரை ஓரியும்" (சிறுபாண்.107–111)

என்று சிறுபாணாற்றுப்படை ஓரியீன் கொடைத்திறம் குறித்து பேசுகின்றது.

அமுதத்தைப்போல சாவாத் தன்மைக் கொடை இனிய நெல்லிக்கனியைத் தான் உண்ணாமல் தமிழ் மூதாட்டியாகிய ஔவைக்களித்தான் அதியமான். இதனை,

"கமழப்பூஞ்சாரல் கவினிய நெல்லி
அமிழ்து விளைதீம்கனி ஔவைக்கு ஈத்த
உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்" (சிறுபாண்.99–101)

என்று சிறுபாணாற்றுப்படை எடுத்துரைக்கின்றது. தான் நெல்லிகனியை உண்டு நீண்ட நாள் உயிர் வாழ்வதைவிட, தமிழ் வாழ்வாங்கு வாழ்வதற்கு நெல்லிகனியை ஔவைக்குக் கொடுத்து கொடையறம் புரிந்தான் அதியமான் என்பதை அறிய முடிகின்றது.

ஆய்வள்ளல் புலவர், பாணர், கூத்தர் போன்றோர் தமக்கு எப்பொருளைக் கேட்டாலும் தனக்கென வைத்துக் கொள்ளாமல் அதனை

உடனே கொடுக்கும் இயல்பினை உடையவன். நச்சரவம் ஒன்று தனக்குக் கொடுத்த ஓர் அரிய ஆடையினைக் கல்லால மரத்தின் கீழ் அமர்ந்த சிவபெருமானுக்கு அளித்தான் என்பதை

"நீலநாகம் நல்கிய கலிங்கம்

ஆலமர் செல்வர்க்கு அமர்ந்தனன் கொடுத்த" (சிறுபாண்.95–96)

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

கிடைப்பதற்கரிய பொருளாக இருப்பினும் அதனைத்தான் வைத்துக் கொள்ளாமல் பிறருக்குக் கொடுக்கும் கொடையறத்தை மன்னர்கள் மேற்கொண்டனர் என்பதை அறியமுடிகிறது.

நள்ளி, வறியவர்களுக்கு அவர்கள் இல்வாழ்க்கை இனிது நடத்துவதற்கு எல்லாச் செல்வங்களையும் கொடுப்பான். இதனை,

"நட்டோர் உவப்ப நடைப்பரிகாரம்

முட்டாது கொடுத்த முனைவிளங்கு தடக்கை" (சிறுபாண்.103–104)

என்ற பாடல் வரிபுலப்படுத்துகின்றது.

மலைமான் திருமுடிக்காரி என்பவன் குதிரைகளையும், மற்ற செல்வங்களையும் இனிய மொழிகளுடன் இரவலர்க்கு இல்லையென்று கூறாமல் கொடுப்பவன்.

இந்த ஏழு வள்ளல்களும் கடையெழு வள்ளல்கள் எனப் பாராட்டப் பெற்றனர். இவ்வாறு பிறர்க்குக் கொடுத்து அவர்களை வாழவைப்பதன் மூலம்

அறச்செயலை வளர்த்த பண்டைத் தமிழ் மன்னர் மாண்பினைச் சங்க இலக்கியம் விளக்கிக் காட்டுகின்றது.

### போர் அறம்

போர் செய்தல் உலகத்தின் இயற்கையாகவே சங்க காலத்தில் கருதினர். வீரத்தை வெளிப்படுத்தும் வாயில் எனப் போரை விரும்பினர். போர்க்களத்தில் யானையை வெல்லும் புகழுக்குரிய செயல் ஆண்மகனின் கடமையாகக் கருதப்பட்டது.

பண்டைத் தமிழர் போர் மேற்கொண்டாலும் அதனையும் அறவழியிலேயே நிகழ்த்தினர். போர்க்களத்தில் பகைவரோடு போரிடும்போது அறநெறிகளையே பின்பற்றினர் என்பதைச் சங்க இலக்கியம் பகர்கின்றது.

### போருக்குரிய காரணங்கள்

சங்க காலத்தில் தமிழகம் மூன்று பேரரசர்களாலும் பல குறுநில மன்னர்களாலும் ஆளப்பட்டது. மன்னர்களுக்கிடையே போர் பல நிகழ்ந்தாலும் அவர்கள் தகுந்த காரணங்களுக்காகவே போரில் ஈடுபட்டனர். அளவு கடந்த மண்ணாசையும் தம் குடிமக்களுக்கு வாழ்விடம் நாடல், தம் படைவலிமை, தம்முடைய செங்கோல் ஆட்சி, தம் ஆணை ஆகியவற்றை அனைவரும் ஒப்புக்கொள்ளச் செய்து அரசர்க்கு அரசராக விளங்கும் ஆர்வம் உறவினரிடமிருந்து அரசுரிமை பெறும் விருப்பம், மானம் காத்தல், பிறன் மகளை மணக்கும் விருப்பம் போன்றவை போர்களுக்கு காரணமாக இருந்தன.

**உரிமையைக் காத்துக் கொள்ளுதல்**

மன்னர் தம் உரிமையைக் காத்துக் கொள்வதற்கும் நிலைநாட்டுவதற்கும், பகை மன்னருடன் போர் நிகழ்த்தினர். சோழன் கரிகால் பெருவளத்தான் பகைவர் காவலிலிருந்து தப்பிச்சென்று தனக்குரிய அரசுரிமையைப் பெறுவதற்கும் போரிட்டதைப் பட்டினப்பாலை,

"கொடுவரிக்குருளை வளர்ந்தாங்கு
பிறர் பணியகத்து இருந்து பீடுகாழ்முற்று
அருங்கரை கவியக்குத்தி குழி கொன்று
பெருங்கை யானை பிடி புக்காங்கு
நுண்ணிதின் உணர நாடி, நன்னார்
செறிவுடைத் திண்காப்பு ஏறி, வாள்கழித்து
உரு கெழு தாயம் ஊழியின் எய்தி" (பட்டினப்.220–221)

எனப்படம் பிடித்துக்காட்டுகின்றது.

தம்முடைய உரிமையை நிலைநாட்டுவதற்காகப் போரிட்டதைப் பட்டினப்பாலையின் வழி அறியமுடிகின்றது.

**புகழ் வேட்கை**

மன்னர்கள் புகழ் வேட்கையின் காரணமாகவும் பாசறையில் தங்கி போரிட்டனர்.

"நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்
பாசறை யல்லது நீயொல் லாயே" (புறம்.31)

என்று சோழன் நலங்கிள்ளியின் பேராற்றல் புலவரால் போற்றப்படுகின்றது. மன்னர் தாம் மேன்மேலும் புகழ்பெற வேண்டும் என்ற எண்ணத்தால் போர்தொடுத்தனர்.

**எல்லையை விரிவுபடுத்துதல்**

உலகை ஆளும் பிற மன்னர்களும் தம்முடைய ஆணையை ஏற்றுத் தம் அடிக்குக்கீழ் நிற்பதைப் பண்டைத் தமிழ் மன்னர்கள் பெருமையாகக் கருதினர். தாம் ஆளும் நாடு தம் குடிமக்களுக்கு வளமுடன் வாழ்வதற்குப் போதாது என்ற எண்ணம் தோன்றிட நாட்டினை விரிவுபடுத்தவும் முற்பட்டனர். இதனை,

"வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்

போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ

திடஞ்சிறி தென்னு முக்கந் துர்ப்ப" (புறம்.8)

என்ற பாடல்வரிகள் புலப்படுத்தும். நாட்டு மக்களின் நலனில் அக்கறை கொண்ட இத்தகைய போர் நிகழ்ந்தது என்பதை அறியமுடிகின்றது.

**குடிமக்களைப் பாதுகாத்தல்**

தன் நாட்டில் வாழுகின்ற குடிமக்களின் நன்மைக்காகப் பகைவரை அழித்துக் குடிமக்களைக் காத்தல் காரணமாகவும் போர் புரிந்தனர் என்பதை,

"குடிக்கடன் ஆகலிற் குறைவினை குடிமார்

செம்புறழ் புரிசைப் பாழி நூறி" (புறம்.375)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. குடிமக்களைப் பாதுகாப்பது மன்னருக்குரிய கடமையாகும். அதுவே அறமாகும். எனவே காக்கும் கடமையை மன்னர் முறையாக நிகழ்த்தினர் என்பதை அறியமுடிகின்றது.

**போரறங்கள்**

பண்டைத் தமிழர் போர் மேற்கொள்வதிலும் அதனையும் அறவழியிலேயே நிகழ்த்தினர். போர்க்களத்தில் பகைவரோடு போரிடும்போது அறநெறிகளையே பின்பற்றினர். போர் செய்யப் போவதை வெளிப்படையாக முரசறிவித்து பகைவர்களுக்குத் தெரிவிப்பதை மரபாகக் கொண்டிருந்தனர்.

**முன்னெச்சரிக்கை செய்தல்**

பகைவர் நாட்டின்மீது படையெடுப்பு நிகழ்த்துவதற்கு முன் அந்நாட்டில் உள்ள பசுக்கள், அந்தணர், பெண்கள், நோய் வாய்ப்பட்டோர், குழந்தை பேறில்லாதவர்கள், ஆகியோருக்குப் படையெடுப்பு நிகழ்வதை அறிவித்து அவர்களுக்கு வேண்டிய பாதுகாப்பைத் தேடிக்கொள்ளும் அறநெறி மேற்கொள்ளப் பெற்றது.

“ஆவும் ஆன்இயல் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அரும்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர்ப் பெறாதீரும்
எம்அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின்என
அறத்தாறு நுவலும் பூட்கை”(புறம்.9)

பகைவர் நாட்டில் உள்ள மக்கள் அனைவரையும் அழிக்க வேண்டுமென்பது போர் மேற்கொள்ளும் மன்னனின் நோக்கம் இல்லை. எனவே பிறருக்குத் தீங்கு செய்யாத பசுக்களும், அந்தணர்களும் போரினால் துன்புறுதல் தகாது என்று மன்னர் எண்ணினர். பெண்கள், பிணியுடையோர், மக்களைப் பெறாதோரையும் காத்தல் தம் கடமையாகக் கருதினர். அவர்களையும் போரினால் ஏற்படும் துன்பத்திலிருந்தும் காத்தல் அறம் ஆதலின் பகைவர் நாட்டிலுள்ள அத்தகையோரைப் பாதுகாப்பினைத் தேடிக் கொள்ளுமாறு அறிவுறுத்தி அறப்போர் ஆற்றினான் பாண்டியன் பல்யாகச்சாலை முதுகுடுமிப் பெருவழுதி. இது போர் முன் பாதுகாப்பு நடவடிக்கையாகக் கொண்டனர். இவற்றிலும் அறமே முதன்மையாகவே கருதப்பட்டது.

“அரசன் தொழிலாவது நாடு காவல். போர்வினையும் நாடு காவலுட்பட்டதே. அதனால் அக்காலத்தில் அரசர் பெரும்பாலும் தம் வினைகளிலெல்லாம் அறத்தையே கடைபிடித்தனர்”[5] என்கிறார் ஞா. தேவநேயப்பாவாணர். இவர் கருத்து ஏற்புடையதாக உள்ளது.

**புறமுதுகிடுவோருடன் போர் செய்யாமை**

போர்க்களத்தில் புறமுதுகிடாமையும், புறமுதுகிடுவோருடன் போர் செய்யாமையும் பண்டைத் தமிழரின் போரறங்களாகும். புறமுதுகிடுதலையும், புறப்புண்படுதலையும் பண்டைத் தமிழ் இழிவாகக் கருதினர்.

“ஒடுங்காத் தெவ்வ ருக்கறக் கடைஇப்

புறக்கொடை யெறியார்நின் மறப்படை கொள்ளுநர்” (பதிற்று.31)

என்ற பாடலடிகள் இதனை உணர்த்தும். படையெடுப்பிற்கு சமமாகும். எனவே புறங்கொடுத்தோடுவோர் மேல் படையெறிதல் அறமல்லாத செயலாகக் கருதி அதனை விலக்கினர். இவற்றிலிருந்து பண்டைத் தமிழ் வேந்தர் போரில் அறநெறிகளையே பின்பற்றினர் என்பதைச் சங்க இலக்கியம் தெளிவுபடுத்துகின்றது.

**வாய்மையறம்**

வாய்மை தவறாக மாண்புடையவர்களாக மன்னர் விளங்கவேண்டும் என்ற அறநெறி புலவரால் மன்னர்க்கு அறிவுறுத்தப்பெற்றது. வாய்மை மன்னர்க்கு வேண்டிய இன்றியமையாப் பண்புகளுள் ஒன்று. எப்பொழுதும், எவரிடத்திலும், வாய்மை தவறாதவராக மன்னர் விளங்க வேண்டும் என்பது அரசியலறமாகும்.

விளையாட்டிலும் வாய்மை தவறாதவனாக, பகைவர் புறத்தே கூறும் சொற்களை ஏற்றுக் கொள்ளாத குற்றமற்ற அறிவுடையவனாக சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் விளங்கினான். இதனை,

"நகையினும் பொய்யா வாய்மை, பகைவர்

புறஞ்சொல் கேளாப் புரைதீர் ஒண்மை" (பதிற்று. 70; 12–13)

என்ற பதிற்றுப்பத்து பாடல்வரிகள் உணர்த்துகின்றன. அவன் நிலம் பெயர்ந்தாலும் சொன்ன சொல் மாறாதவனாக விளங்கினான்.

பொய் கூறுவதனால் தேவருலகையே அமிழ்தமொடு பரிசாக கொடுத்தாலும், பொய் கூறாமல் வாய்மையறமுடையவனாக நெடுஞ்செழியன் விளங்கியதை,

“உயர்நிலை உலகம் அமிழ்தொரு பெறினும்

பொய் சேண் நீங்கிய வாய் நட்பினையே” (மதுரை.197–198)

என்று மதுரைக்காஞ்சி உணர்த்துகிறது. இவ்வாறு வாய்மை தவறாமல் மாண்புடையவர்களாக மன்னர் விளங்க வேண்டும் என்ற அறநெறி புலவரால் அறிவுறுத்தப் பெற்றது என்பதும், வாய்மையறம் போற்றி வாழ்ந்தவர் பண்டைத் தமிழ் மன்னர்கள் என்பதும் இவற்றால் அறியலாம்.

## தொகுப்புரை

மன்னனின் வாழ்வியல் நெறிகள் மக்கள் பின்பற்றத் தக்கனவாக அமைய வேண்டும் என்று புற இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. நீதி தவறாத செங்கோல் ஆட்சி, நாடு காத்தல், மக்களைக் துன்பமின்றிப் பாதுகாத்தல், நாட்டுவளத்தைப் பெருக்குதல் போன்ற அரசியல் கடமைகளைத் தவறாமல் செய்யும் மன்னனை அறநெறியைப் பின்பற்றுபவனாக சங்கப்புற இலக்கியங்கள் பதிவு செய்துள்ளதை இவ்வியல் எடுத்துக்காட்டியுள்ளது. தம்மை நாடிவரும் இரவலர்களுக்கு புரவலர்களாக விளங்கிய மன்னர்களின் கொடை அறங்கள், போரின்போது மன்னர்கள் பின்பற்றிய அறங்கள் முதலியன குறித்து புற இலக்கியங்களில் காணலாகும் செய்திகளை இவ்வியல் தொகுத்தாராய்ந்துள்ளது.

# மேற்கோள் விளக்கம்

1. அர. சிங்காரவடிவேலன், இலக்கிய உவமைகள், ப. 215

2. ஞா. தேவநேயன், பழந்தமிழாட்சி, ப. 65

3. சாமி சிதம்பரனார், எட்டுத்தொகையும் பண்டைத் தமிழரும், ப. 186

4. வே. முத்துலட்சுமி, பண்டைத் தமிழிலக்கியங்களில் அறநெறிகள், ப. 121

5. ஞா. தேவநேயன், பழந்தமிழட்சி, ப. 101

# இயல் – 4

# சங்க இலக்கியங்கள் சுட்டும் சமுதாய அறங்கள்

சமுதாயம் என்பது தனிமனிதர்கள் சேர்ந்த கூட்டமைப்பாகும். தனிமனிதர்கள் செய்யும் அறங்கள் சமுதாய மேம்பாட்டை உருவாக்குகின்றன. சமுதாயத்தில் மக்களால் கடைப்பிடிக்கப்படும் அறங்கள் சமுதாய அறங்களாகும். தனி மனிதன் தான் மேற்கொள்ளக்கூடிய அறவாழ்க்கையின் தன்மை, சமுதாயத்தில் அனைவருடனும் சேர்ந்தாற்றும் அறவாழ்வு அமைய வேண்டிய முறை முதயின குறித்து சங்க இலக்கியத்தில் பரவலாகக் கூறப்பட்டுள்ளன. தனிமனிதன் மேற்கொள்ளக் கூடிய அறம், அவர்களுடைய கடமைகளையும், தொழில்முறையில் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர், மருத்துவர் புரியக்கூடிய அறங்கள், சமுதாயத்தில் ஈகைப் பண்பு, நட்பினால் ஏற்படும் அறம் மற்றும் சமயத்தில் அறம் கூறப்படும் முறைகளைப் பற்றியும் சங்க இலக்கியங்கள் கூறுவனவற்றை ஆராய்வதாக இவ்வியல் அமைகின்றது.

### சமுதாயம்

தனிமனிதனின் தொகுதியே சமுதாயம் என்பதாகும். மனிதன் இயற்கையிலேயே கூடி வாழும் இயல்புடையவன். அதனால் தான் மனிதனை ஒரு சமூகப் பிராணி என்று குறிப்பிடும் அரிஸ்டாட்டில் மனிதன் தேவைகளுக்காகவும், வசதிகளுக்காகவும் மற்றவர்களைச் சார்ந்து அவர்களோடு கூடி வாழுகிறான். மனிதனுக்குச் சமூகவியல்பு இயற்கையிலேயே இருக்கிறது. இந்தச் சமூகவியல்பு காரணமாக அவன் பிறரோடு கூடிப் பழகுகிறான். அவ்வாறு பழக முற்படும்போது சமூகம் தோன்றிவிடுகிறது."[1] என்கிறார் அரிஸ்டாடில்.

**தனிமனித அறத்தில் சமுதாயம்**

தனிமனிதன் தனது கடமைகளைச் சரிவரச் செய்வது சமுதாய அறமாகிவிடுகின்றது. "தனிமனிதனின் ஈட்டமே சமுதாயமாக அமைகின்றது. எனவே தனிமனிதனிடத்தில் அறவுணர்வு இல்லையெனில் சமுதாயத்தில் அறவுணர்வு என்ற உணர்வினைப் பெற்றிருந்தனர் பண்டையத்தமிழர்"[2] என்பர். தான் தனிமனிதன் உலக நடைமுறைகளை அறிந்து அதன்படி வாழ்வதற்கு வேண்டிய நற்பண்புகளின் இலக்கணங்களை,

"ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பு எனப்படுவது பாடுஅறிந்து ஒழுகுதல்
அன்பு எனப்படுவது தன்கிளை செறாமை
அறிவு எனப்படுவது பேதையார் சொல் நோன்றல்
செறிவு எனப்படுவது கூறியது மறாஅமை
நிறை எனப்படுவது மறைபிறர் அறியாமை
முறை எனப்படுவது கண்ணோடாது உயிர்வெளவல்
பொறை எனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்" (கலி. 133, 6–14)

என்ற பாடலடிகள் மூலம் கலித்தொகை கூறுவதைக் காணலாம்.

தனிமனிதன் ஒவ்வொருவரும் செய்யும் கடமை சமுதாயத்தில் அறமாகின்றது.

ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே

சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே

வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே

நன்னடை நல்கல் வேந்தர்க் கடனே

ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்

களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே'' (புறம். 312, 1–6)

என்ற புறநானூற்றுப் பாடலடிகளின் மூலம் ஒவ்வொருவருக்கும் சமுதாயத்தில் தனித்தனியே கடைமையாற்ற வேண்டியுள்ளது என்பதை உணர முடிகின்றது. இந்த கடமையே சமுதாயத்திற்கு அறமாக அமைகின்றது. நாட்டுக்கு சேவை செய்வதற்கு வீரர்கள் தேவையாதலால் ஆண்மகனைப் பெற்றுக் கொடுப்பது பெண்ணிற்குரிய கடமையாகின்றது. அந்தப் புதல்வனை ஒரு சிறந்த சான்றோனாக ஆக்கித் தருவது ஒரு தந்தையின் கடமையாகின்றது. படைத்தொழில் சிறந்து விளங்க வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லர்க்குரிய கடமையாகின்றது. நல்வழியில் ஈடுபடச் செய்து ஒழுக்கமுடையவனாக்குதல் அந்நாட்டு மன்னர்க்குரிய கடமையாகின்றது. போர்க் களத்தில் போர் செய்து வெற்றியைப் பெறுவது ஆண்மகனது கடமையாகின்றது. இவற்றிலிருந்து சங்க சமுதாயத்தில் தனிபட்ட ஒவ்வொருவரும் தம்முடைய கடமையைச் சரிவர செய்து, சமுதாயத்தை நல்வழியில் இட்டுசென்றனர் என்பதை இதன்மூலம் அறிந்து கொள்ளலாம்.

**மானத்தை நிலைநிறுத்தும் அறம்**

சங்க இலக்கியத்தில் மானத்தைப் பெரிதாகப் போற்றினர். உயிரை விட மானமே பெரிதானது என்ற பண்பினைப் பெற்றிருந்தனர். என்பதைச் சங்க சமுதாயத்தில் காண முடிகின்றது. சேரமான் கணைக்கால் இரும்பொறை சோழனோடு போரிட்டு தோற்றுப்போய் சிறையில் அடைக்கப்பட்டான். சிறையில் காவலர், சேரமான் அருந்துவதற்காகத் தண்ணீர் கொடுக்கவே அதை அருந்தாது, உயிரைக்காட்டிலும் மானமே பெரிது என உயிர் துறந்தான் இதை,

“கேள்அல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை இன்றி வயிற்றுத்தீத் தணியத்
தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்மரோ இவ்வுலகத் தானே” (புறம். 74, 4–7)

இவ்வாறு பாடலாக்கி உயிர்துறந்தான், என்பதை புறநானூற்றின் மூலம் அறிந்து கொள்ளலாம். உயிரைக் காட்டிலும் சிறந்தது மானம் என்ற உயர்பண்பு இருந்ததையும், மானமிழந்து வாழ்வது இழிவு. மாணத்திற்கு ஊறு நேறுமாயின், உயிர் கொடுத்தாகிலும் மானத்தை நிலை நிறுத்தல் வேண்டும் என்ற அறநெறியினைக் கணைக்கால் இரும்பொறையின் பாடல் புலப்படுத்துகிறது.

**தொழில்முறையில் அறம் உணர்த்துதல்**

சங்க இலக்கியத்தில் காணப்படும் அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற நான்கு பிரிவுகளும் தொழில்வழி ஏற்பட்ட பிரிவுகள். ஆற்றல்

உள்ளவர்கள் அரசராகவும், அறிவுள்ளவர்கள் அரசனுக்கு அறிவுரை கூறும அந்தணராகவும் பொருளை எடுத்துச் சென்று வாணிகம் செய்பவர் வாணிகர்களாகவும் உணவுப் பொருளை விளைவித்துக் கொடுப்பவர் வேளாளராகவும் கருதப்பட்டனர். இந்த நான்கு பிரிவுகளும் செய்யும் தொழில் காரணமாக ஏற்பட்ட பிரிவுகள் ஆகும். இவை அந்தந்த சமுதாய அமைப்பைக் காட்டுவனவாகும். "பழந்தமிழர் சமுதாயத்திற் பிற்காலத் தெழுந்தது போலச் சாதிப் பிரிவினை இருந்தமைக்குச் சான்றுகள் இல்லை. மக்கப் பாகுபாடு நில இயற்கையும், தொழிற் பண்பையும், அடிப்படையாக கொண்டே இருந்தது"[3] என்பர் சு.வித்யானந்தன்.

தொழில்வழி அமைந்த பிரிவுகளாகிய அரசர், அந்தணர், வணிகர், வேளாண் மாந்தர் ஆகியோர் தத்தம் கடமைகளைஆற்றி சமுதாய ஆக்கத்துக்குத் துணை நின்ற நிலையினை அறியலாம்.

**அரசர் சமுதாயத்திற்கு ஆற்ற வேண்டிய அறம்**

மன்னன் நீதிநெறி தவறாமல் ஆட்சி செலுத்துதல் அரசியல் அறம் எனப்படும். நீதி நெறியுடன் ஆட்சி புரியும் மன்னனைக் கடவுளுக்கு நிகராகக் கூறுவர். உலகிற்குத் தானே உயிரென்பதை மன்னன் அறிதல் வேண்டும். மழையில்லாமல் நீரில்லை. மன்னன் இல்லாமல் மக்கள் இல்லை.

மண்ணாகிய உலகத்தில் நீரும், நெல்லுமே உணவாகி உயிர்களைக் காப்பவனாகும். இதை மன்னன் அறிந்து செயல்பட வேண்டும். மன்னனின் ஆட்சி சிறப்பை,

“நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே

மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்

அதனால் யானுயிர் என்பது அறிகை

வேல் மிகுதானை வேந்தர்க்குக் கடனே” (புறம்.186, 1–4)

என்று புறநானூற்று வரிகள் புலப்படுத்துகின்றன. அறம் தெரிந்து நடப்பவன் சிறந்த அரசனாவான். ஆறநெறி சார்ந்து ஆட்சி செய்யும் மன்னனே சிறந்த மன்னனாகப் புகழப்படுகின்றான் இதனை,

“சினனே காமம் கழிகண் ணோட்டம்

அச்சம் பொய்சொல் அன்புகு உடைமை

தெறல் கடுமையொடு பிறவு மிவ்வுலகத்து

அறந்தெரி திகிரிக்கு வழியிடையாகும்” (பதிற்.22, 1–4)

என்ற பதிற்றுப்பத்துப் பாடல் வரிகளால் அறியலாம்.

ஒரு நாட்டின் சமூகவியல் ஆட்சியில் மற்றும் பொருளியல் குறிக்கோள்களைச் செப்பமாக நடைமுறைப்படுத்துவதற்கு அந்நாட்டின் அரசையே திறன் மிகுந்த முதல் கருவியாகப் படைக்கிறார் வள்ளுவர். அப்படிப்பட்ட அரசு அமைச்சு, குடி, கூழ், நட்பு, அரண், படை ஆகிய ஆறு உடைமைகளையும் பெற்று, உயிரோட்டத்துடன் இயங்கும். ஓர் அரசனின் செங்கோன்மைதான் அறவோர் நூல்களுக்கும் அறவழிச் செயல்களுக்கும் அடிப்படையாக அமையும் என்பதை,

“அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்

நின்றது மன்னவன் கோல்” (குறள். 543)

என்ற குறட்பாவின் மூலம் வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

வேண்டியப் பொழுதில் பால் சுரந்தூட்டும் தாயைப் போல் அரசனின் செங்கோன்மைத் திறத்தால் வேண்டிய காலத்தில் மழைபொழியும் என்று மக்கள் நம்பினர்.

“குழவியைப் பார்த்து உறுஉம் தாய்போல் உலகத்து

மழை சுரந்து அளித்து ஓம்பும் நல்ஊழி யாவர்க்கும்” (கலி.99, 1–5)

இவ்வாறு கலித்தொகையில் மன்னனின் செங்கோல் அறம் கூறப்பட்டுள்ளது. மன்னன் கோல் வளையாமல் நாட்டில் ஆட்சி புரிந்தால் நீதி நிலைபெறும். மழையும் பொழியும் கோள்கள் நிலைதிரியாது. நாட்டு மக்களும் நலமுடன் வாழ்வாங்கு வாழ்வார் என்ற நம்பிக்கையானது சங்க சமுதாயத்தில் நிலவியது. இதனை,

“அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது

மழை வேண்டு புலத்து மாரி நிற்ப

நோயொடு பசி இகந்து ஒரிஇ

பூத்தன்று பெரும நீ காத்த நாடே” (பதிற்.13, 25–28)

என்கிறது பதிற்றுப்பத்து அரசன் செங்கோல் வளையாமல் ஆட்சி செய்தல் வேண்டும். மன்னனுடைய ஆணைக்குக் கட்டுப்பட்டு வாழும் மக்களும். ஆலமரத்து விழுது போல குடிமக்களைத் தழுவிக் காக்கும் அமைச்சனும்,

வேலினிடத்துக் காணப்படும் திண்ணிய பூண்போல் விளங்கும் சிறந்த காவலனும் ஆகிய இம்மூவரையும் படைவேந்தன் நீங்காமல் ஒழுகுதல் வேண்டும் என்பதனை,

"கோல் அஞ்சி வாழும் குடியும் குடிதழீஇ

ஆலம் வீழ்போலும் அமைச்சனும் வேலின்று

… … … … …

படைவேந்தன் பற்றுவிடல்" **(திரிகடுகம். 33)**

என்கிறது திரிகடுகம். மக்களைப் பகைவர்களிடமிருந்தும், இயற்கையின் சீற்றங்களிலிருந்தும் தன்னாட்டுத் தீயோரிடமிருந்தம் காத்தலும் வேந்தனின் கடமையாகும்.

பண்டியர் நாடு காத்த திறம் குறித்து,

"மறப்போர்ப் பாண்டிய ரறத்திற் காக்கும்

கொற்கையம் பெருந்துறை" **(அகம் 27, 8–9)**

என்று அகநானூறு மொழிகின்றது.

தொண்டைமான் இளந்திரையனின் ஆட்சி அறமலிந்த ஆட்சிக்கு எடுத்துக்காட்டாக விளங்கியது, அவன் அமைந்திருந்த காவலர் படைத்திறத்தால், நாட்டில் வழிச் செல்வோரைத் துன்புறுத்திக் களவு செய்யும் ஆறலைக்கள்வர் இல்லை. இடி, பாம்பு, காட்டு விலங்குகள் ஆகியவற்றால் ஏற்படும் துன்பமும் இல்லை.

அம்மன்னன் மலையில் விளையும் பொருளையும், கடல் விளை பொருளையும் நாட்டிற்குக் கொண்டு வரும் வழிகளைக் காவற்படை அமைத்துக் காத்தான். இந்தக் காவலர்கள் வழிப்போக்கர்களைக் கொள்ளையர்களிடமிருந்து காப்பதைத் தம் கடமையாகக் கொண்டனர். மிளகுப் பொதிகளைத் தாங்கிச் செல்லும் வழிகளில் காவல் இருந்தது.

இதனை,

புணர் பொறை தாங்கிய வடுவாழ் நோன்புறந்

தணர்ச் செவிச் கழுதைச் சாத்தொடு வழங்கும்

உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்'' (பெரும். 79–81)

என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகின்றது.

இவற்றிலிருந்து தன் நாட்டு மக்களைக் காத்து, நீதி தவறாமல் அறவழியில் ஆட்சி செய்த விதம் புலப்படுகிறது.

வரிக்கொள்கை மக்கள் நலனைக் காப்பதாக இருக்க வேண்டும். பொருள் மட்டும் நோக்கமாக கொள்ளாமல் மக்களிடம் அன்புடனும், அருளுடனும் மன்னர் விளங்க வேண்டும் என்பதை,

''காய் நெல் அறுத்துக் கவளம் கொளினே

மாநிறைவு இல்லதும் பன்னாட்கு ஆகும்

நூறு செறுவாயினும் உணினே

வாய்புகுவதனினும் கால்பெரிது கெடுக்கும்

அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே

கோடியாத்து நாடு பெரிது நந்தும்

மெல்லியன் கிழவனாகி வைகலும்

வரிசையறியாக் கல்லென் சுற்றமொடு

பரிவுத எடுக்கும் பிண்டம் நச்சின்

யானை புக்க புலம் போலத்

தானும் உண்ணான் உலகமும் கெடுமே'' (புறம். 184, 1–10)

என்ற பாடல் விளைந்த நெல்லைச் சேதமில்லாமல் அறுத்துக் கவளம் கவளமாக உட்கொண்டால் குறைந்த நிலத்திலே விளைந்த நெல்லும் பல நாட்களுக்கு உணவாகும். சிறு வயல்களிலே நன்றாக நெல் விளைந்திருந்தாலும், ஒரு யானை அவ்வயல்களிலே தனியாக இறங்கி அந்நெல்லை உண்ணத் தொடங்கினால் அவ்வளவும், பாழாகும். அதுபோல அறிவுடைய மன்னன் மக்களின் முறையை அறிந்து வரிவாங்க வேண்டும் என்று பிசிராந்தையார் மன்னனுக்கு அறம் உணர்த்துகின்றார்.

இவற்றிலிருந்து திறைபெறு நெறியில் மன்னர் அறங்காத்தனர் என்பதும், அந்நெறியிலிருந்து பிறழ்வோரைப் புலவர் அறிவுரை கூறி அறநெறிப்படுத்தினர் என்பதும் அறியமுடிகின்றது.

மன்னர் மக்களிடம் நடுவுநிலைமையோடு நீதி வழங்கி அறம் காத்தனர்.

''உரைமுடிவு காணான் இளமையோன் என்ற

நரைமுது மக்கள் உவப்ப நரைமுடித்துச்

சொல்லால் முறை செய்தான் சோழன் குலவிச்சை

கல்லாமற் பாகம் படும். (பழ. 6)

என்ற பழமொழிப் பாடல் கரிகாலச் சோழனின் நீதி வழங்கும் திறத்தைக் குறிப்பிடுகின்றது. முதியோர் இருவருக்குள் முரண்பாடு ஏற்பட்டது. அவர்கள் தங்கள் முரண்பாட்டைப் பேசித் தீர்த்துக் கொள்ள முடியவில்லை. கரிகாலனிடம் வழக்குரைத்து நீதி பெறலாம் என அவனிடம் அனுகினர். அங்கு கரிகாலன் மிக்க இளையவனாக இருப்பதைக் கண்டு இவனால் நம்முடைய வழக்கை ஆராய்ந்து நீதி கூறமுடியாது என நினைத்து தனது வழக்கை வேறு அறநூல் அறிந்தவரிடம் கூறுவதாகக் கூறினர். பின்னர் தானே முதியவன் வேடமணிந்து அவர்கள் வழக்கைக் கேட்டான் கரிகாலன். இருவரும் ஒப்புக் கொள்ளும்படி நீதி வழங்கினான். இதனை,

"முதியோர் அவை புகுபொழுதில் தம்

பகைமுரண் செலவும்" (பெரும். 188)

என்ற அடியினால் அறியலாம். இவ்வாறு மன்னர் மக்களைக் காத்ததன் மூலம் சமுதாயம் அறத்தினால் தழைத்திருந்தது என்பதைச் சங்க இலக்கியம் வாயிலாக அறிய முடிகின்றது.

**அறநெறியில் அந்தணர்**

சங்க காலத்திலும் அதற்கு முன்னும் வேதங்களைப் படிக்கும் அந்தணர்களும், வேள்வி செய்யும் அந்தணர்களும் தமிழ்நாட்டில் வாழ்ந்தனர். அவர்கள் தமிழர்களாகவே வாழ்ந்தனர். தந்நலந் துறந்து எல்லாவுயிர்களும் இன்புற்று வாழ்வதற்கான நற்செயல்களிலே ஈடுபட்டு வாழ்ந்தவர்களைத்

தமிழர்கள் அந்தணர்கள் என்று அழைத்தனர். அந்தணர்கள் அக்காலச் சமுதாயத்தில் அனைவராலும் மதிக்கப் பெற்றனர். அந்தணர் குறித்து,

ஓதல் வேட்ட லவைபிறர்ச் செய்தல்

ஈத லேற்ற லென் நாறுபுரிந் தொழுகும்

அறம்புரி யந்தணர்'' (பதிற்.24, 6–8)

என்று பதிற்றுப் பதிற்றுக்கூறுகின்றது.

அந்தனர் வேதத்திணைப் பொருள் விளைங்கப் பாடினர். அவற்றில் கூறப் பெற்ற ஒழுக்க நெறிகளில் நின்றனர். இவ்வுலகின்றே வீட்டின்பம் கைவரப் பெற்றவராய் அறநெறி பிழையாதவராய், உயிர்களிடத்தில் அருளும், அன்பும் நிரம்பப் பெற்றவராய் வாழ்ந்தனர் என்பதை,

''சிறந்த வேதம் விளங்கப் பாடி

விழுச்சீர் எய்திய ஒழுக்கமொடு புணர்ந்து.

நிலம் அமர் வையத்து ஒருகாம் தாஆகி

உயர்நிலை உலகம் இவன் நின்று எய்தும்

அறநெறி உரையா அன்புடை நெஞ்சம்

பெரியோர் மேஎய் இனிதின் உறையும்'' (மதுரைக்.. 32– 37)

என்று மதுரைக் காஞ்சி பாடலடிகள் காட்டுகின்றன.

மதுரையிலே வாழும் மக்கள் விடியற்காலையில் விழித்தெழுவார்கள் அவர்கள் அந்தணர்களின் வேத முழக்கத்தைக் கேட்டு விழித்தெழுவார்கள். இதனை,

நான்மறைக் கேள்வி நவின்குரல் எடுப்ப

ஏமஇன்துயில் எழுதல் அல்லதை,

வாழிய வஞ்சியும் கோழியும் போலக்

கோழியான் எழாது எம்பேரூர் துயிலே'' (பரி. 8)

என்று பரிபாடல் உணர்த்துகின்றது. சமுதாயத்தில் மக்களை ஒழுக்க நெறியில் செலுத்த வேண்டும் என்ற அறநெறியிலே அந்தணர்கள் விளங்கினர் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

அந்தணர்களை விரிநூல் அந்தணர், புரிநூல் அந்தணர் என்று இருவகையினராகப் பரிபாடல் கூறுவதை,

‘‘விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்

புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப'' (பரி11, 7–9)

விரிநூல் அந்தணர் என்போர் விரிவான வேதங்களையும் ஏனைய நூல்களையும் கற்றவர்கள். இவர்கள் அறவொழுக்க முடையவர். ஏனைய அறநூல்களையும் கற்றவர். புரிநூல் அந்தணர் என்போர் அந்தணர்க்கு அடையாளமான பூணுநூலை மட்டும் அணிந்திருப்பார். பிறரிடம் யாசகம் வாங்குவோராவர் என்பதை அறியலாம். மேலும்

அந்தணர்கள் வேதங்களை நன்கு கற்றவர். அறிவுரைகள் கூறுவதற்கு தகுதியுடையவராவர். பிரிந்தவர்களைச் சேர்த்து வைப்பவர் என்பதை,

"பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்

மருந்தும் உண்டோ" (குறுந்.156, 2–5)

என்ற குறுந்தொகைப் பாடல் கூறுகின்றது.

**வணிகர் சமுதாயத்தில் காணலாகும் அறவாழ்க்கை**

சங்க காலச் சமுதாயத்தில் வணிகர் சிறப்பு பெற்றனர். நடுவுநிலைமை போற்றுதலே வணிகரது அறநெறியாகும். தம்முடைய பொருளையும், பிறருடையப் பொருளையும் ஒப்ப மதிக்கும் தன்மையே நடுவுநிலைமையாகும்.

சங்ககாலத்து வணிகர்கள் அறநெறி தவறாமல் நன்னெறியிலே நடப்பவர்கள் வாங்குவதை அதிகமாக வாங்கிக் கொண்டு, கொடுப்பதைக் குறைத்துக் கொடுக்க மாட்டார்கள் அவர்களுடைய பரந்த உயர்ந்த சிறந்த இல்லத்திலே சிறுசிறு குன்றுகளைப்போல, பல வகையான பண்டங்கள் குவிந்து கிடக்கும். உணவுப் பண்டங்கள் நிறைந்திருக்கும்.

> "மலைகளிலிருந்தும் நிலத்திலிருந்தும், நீரிலிருந்தும் பலவகையான இரத்தினங்களையும் முத்துக்களையும், பொன்னையும் பெற்றுக் கொள்வார்கள். அவைகளுக்கு ஈடாகப் பல நாடுகளிலிருந்தும் கொண்டு வந்து குவிந்திருக்கின்ற சிறந்த பல பண்டங்களைக் கொடுப்பார்கள். இத்தகைய சிறந்த வணிகர் பலர் மதுரை நகரிலே வாழ்ந்தனர்."[4]

என்பர் சாமிசிதம்பரனார்.

வணிகர்களின் நேர்மையும், வளத்தையும்

அறவழி பிழையாது ஆற்றின் ஒழுகிக்

குறும்பல் குழுவின் குன்று கண்டன்ன

பகுந்திருந்து உவக்கும் பன்மாண் இல்லில்

பல்வேறு பண்டமோடு ஊண்மலிந்து கவினி

மலையவும் நிலத்தவும் நீரவும் பிறவும்

பல்வேறு திருமணி முத்தமொடு பொன் கொண்டு

சிறந்த தேஎத்தும பண்ணியம் பகர்க்கும்'' (மதுரைக். 500–506)

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது.

காவிரிப்பூம்பட்டினத்திலே வாழ்ந்த வணிகர்கள் மிகவும் நேர்மையுள்ளவர்கள். பிறர் பொருளைகளைப் பறிக்க வேண்டும் என்ற பேராசையில்லாதவர்கள். நடுவுநிலையிலே நின்று வியாபாரம் செய்வார்கள். “அவர்கள் விற்பனை செய்யும் பண்டங்களின் கொள்முதல் விலையும், இலாபத்தையும், வெளிப்படையாகக் கூறுவார்கள்.”[5]

இவ்வாறு காவிரிப்பூம்பட்டினத்து வணிகர்களின் பெருமையைச் சாமி. சிதம்பரனார் கூறுகிறார். மேலும் நீண்ட நுகத்தடியிலே வைத்திருக்கும் நடு ஆணி போல நடுநிலையிலே நிற்கும் நல்ல உள்ளமுடையவர்கள். பழிக்கு அஞ்சி உண்மையே பேசுவார்கள். தம்முடைய பொருளையும் பிறருடைய பொருளையும் ஒரு தன்மையாகவே நினைப்பார்கள். பொருளை வாங்குவோரிடம் அளவுக்கு மேல் அதிகமாக வாங்கிவிட மாட்டார்கள். தாங்கள் கொடுக்கும் பண்டத்தையும் குறைத்துக் கொடுக்கமாட்டார்கள். பல

பண்டங்களையும் அவற்றின் நியாயமான விலையைக் கூறி விற்பனை செய்வார்கள்.

நெடுநுகத்துப் பகல்போல
நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடு அஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகை கொளாது
கொடுப்பதூஉம் குறை கொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்'' (பட்டி. 206–211)

இவ்வடிகள் அக்கால வணிகர்களின் நேர்மையை விளக்குகின்றன.

நாட்டில் தீமைகள் நிகழாதவாறு கொலைகடிதல், களவு நீக்கல் போன்ற பணிகளைச் செய்தும் வாழ்ந்தனர். களவுத் தொழிலை நீக்கியும், தேவர்களுக்குப் பலி முதலியன தந்து வழிபட்டும், வேள்விகளை இயற்றி அவற்றின் பொருள்களை அவற்றிற்குரிய தெய்வங்கள் நுகரும்படிக் கொடுப்பதும், நல்ல பசுக்களையும், எருதுகளையும் பாதுகாத்தும், அந்தணர்களுக்கு உண்டாகும் புகழினை அவர்களிடம் நிலைபெறச் செய்தும் பெரிய புண்ணியங்களைத் தாங்கள் செய்தும், அவ்வாறு செய்ய இயலாதவர்களுக்குத் தானம் வழங்கியும், விலை நெல்லையும், பாக்கையும் உணவாகத் தந்தும் போன்ற அறச்செயல்கள் பலவற்றைத் தடையின்றிச் செய்யும் குளிர்ந்த அருள் உள்ளத்தைக் கொண்ட வணிகர்கள் வாழ்ந்து வந்தனர். இதனை,

"கொலை கடிந்தும் களவு நீக்கியும்

அமரர்ப் பேணியும் ஆவுதி அருந்தியும்

நல் ஆனொடு பகடு ஓம்பியும்

நன் மனையோர் புகழ் பரப்பியும்

பண்ணியம் அட்டியும் பசும்பதம் கொடுத்தும்

புண்ணியம் முட்டாத் தண்நிழல் வாழ்க்கை" (பட்டி.199–204)

என்று பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது. இவ்வாறு சங்க காலத்தில் வணிகர் அருள் உள்ளமும், அற நேர்மையும் உடையவராகச் சமுதாயத்தில் வாழ்ந்து வந்ததை இதன் மூலம் அறியலாம்.

**வேளாளரின் அறவாழ்க்கை**

சங்க காலத்தில் உழவுத் தொழிலே முதன்மையான தொழிலாக விளங்கியது. உழவுத் தொழில் உயர்ந்து விளங்கும் நாடே பஞ்சத்திலே வீழ்ந்து பரிதவிக்காது. அந்த நாட்டில் வாழும் மக்ள் இன்பமடைவார்கள். அந்த நாடே செல்வத்தில் சிறந்து விளங்கும். இவ்வுண்மையைப் பண்டைத் தமிழர்கள் உணர்ந்திருந்தனர். உழவுத் தொழிலே அவர்க்குரிய சிறப்புத் தொழிலாகும். மக்களுக்கு உணவை விளைவித்துக் கொடுக்கும் உழவர் உயிர் கொடுத்தவராகக் கருதப் பெற்றனர்.

மன்னரின் வெற்றிக்கு படைபலம் மட்டும் காரணமன்று. அப்படைக்கு உணவை விளைவித்துக் கொடுக்கும் உழவரே காரணம் என்பதை,

வருபடை தாங்கிப் பெயர் புறத்து ஆர்த்துப்
பொருபகை தரூஉங் கொற்றமும், உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகன் ஞாலம்'' (புறம். 35, 24–31)

என்று புறநானூறு குறிப்பிடுகின்றது. மழைப் பெய்யத் தவறினாலும், நிலத்தின் விளைச்சல் குறைந்தாலும் இயற்கை மட்டுமல்லாமல் செயற்கையான களவு முதலானவற்றால் தீமை உண்டாலும் இச்செயல்களுக்கெல்லாம் அசர்களை உலகம் பழித்துரைக்கும். எனவே, உழவர் பெருமக்களின் துன்பத்தைப் போக்கி குடிமக்களைப் பாதுகாக்க வேண்டும் என்று வெள்ளைக்குடி நாகனார் அறிவுறுத்துகிறார். இவற்றிலிருந்து உழவுத் தொழிலின் இன்றியமையாமை புலப்படுகின்றது.

நீர்ப்பாசன வசதியைப் பெருக்கினால்தான் நிலம் வளப்படும். ஊழவர்களும் ஊக்கமுடன் உழைத்து உற்பத்தியைப் பெருக்குவார்கள். நீர்ப்பாசன வசதியற்ற நாட்டில் உற்பத்தி பெருக முடியாது. ஆதலால் அரசாங்கத்தின் முதல் கடமை நாட்டிலே நல்ல நீர்பாசன வசதிகளை ஏற்படச் செய்வது.

உண்ணும் நீரின்றேல் உடம்புகள் அழியும். உடம்புகளுக்கு உணவு கொடுத்தாரே உயிர் கொடுத்தோராவர். உணவால் வாழ்வது உடம்பு. அது உணவையே முதன்மையாகக் கொண்டிருக்கிறது. உணவென்று

சொல்லப்படுவது நிலமும் நீரும்தான். எனவே நீரையும், நிலத்தையும் ஒன்று சேரும்படி இணைத்து வைப்பர்களே இவ்வுலகில் உடம்பையும் உயிரையும் படைத்தவர்களாவார்கள். இதனையே,

“நீர்இன்று அமையா யாக்கைக் கெல்லாம்

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே” (புறம்.18, 18–20)

என இலக்கியங்கள் பேசுகின்றன. உழவுத் தொழில் ஓங்கி வளர்வதற்கு நல்ல நீர்பாசன வசதிகளைச் செய்து தரவேண்டிய பொறுப்பு அரசாங்கத்திற்கு உண்டு. இவ்வுண்மையை இப்பாடல் உணர்த்தும். இவ்வாறு பாண்டியன் நெடுஞ்செழியனுக்குக் குடபுலவியனார் அறிவுறுத்துகிறார்.

இவற்றிலிருந்து உழவுத் தொழில் சங்க காலத்தில் இன்றியமையாததாக இருந்ததையும், உணவு விளைச்சலின் அறத்தையும் அறியமுடிகின்றது.

**மருத்துவரின் அறச் செயல்கள்**

சங்க இலக்கியத்தில் மருத்துவமனை பற்றிய அறவகை விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன. மருத்துவர் என்பார் உயிரைக் காக்கக் கூடியவர். எனவே மருத்துவத் தொழில் புரிபவர் அறவோர் எனப்பட்டனர். நோயுற்றோர் கேட்டதைக் மறுத்துரைக்காமல் அவர் தம் நோய் குணமடைய மருந்தை ஆராய்ந்து கொடுக்கும் அறவோராக மருத்துவர் விளக்கினர். இதனை,

அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாஅது

மருந்தாய்ந்து கொடுத்த அறவோன்” (நற். 136, 2–3)

என்று நற்றிணைப் பாடலடி வலியுறுத்தும். இவற்றிலிருந்து சமுதாயத்திற்கு மருத்துவர் செய்யும் அறத்தொண்டு இன்றியமையாதனவாக இருந்ததைச் சங்க இலக்கியத்தின் மூலம் அறியமுடிகின்றது.

**புகழுக்கு அடிப்படை அறம்**

புகழ் என்பது நன்மைகள் புரிவதற்கு கிடைக்கப்பெறும் போற்றுதலாம். தனிமனிதன். சமுதாயத்திற்காக செய்யும் ஒவ்வொரு நற்செயலின் மூலம் அவனுக்குப் புகழ் கிடைக்கின்றது. எனவே நல்லறம் செய்வதினால் புகழ் அமைகின்றது.

இதனை,

தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்

தோன்றலின் தோன்றாமை நன்று'' (குறள். 236)

என்று குறள் வலியுறுத்துகின்றது. முனிதராகப் பிறந்தால் புகழ் தோன்றுவதற்குக் காரணமாகிய குணங்களோடு பிறக்க வேண்டும். அக்குணங்களில்லாதவர் பிறவாதிருத்தல் வேண்டும் என்று வள்ளுவர் வலியுறுத்துகின்றார்.

நல்லறம் செய்ய மறந்து வாழ்ந்து, மறைந்தவர்கள் இவ்வுலகில் புகழை நிலை நிறுத்தாது வாழ்நாளை வீணாக கழித்து மறைந்தவராவார் இதனைப் புறநானூற்றில்,

''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்

தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந் தனரே'' (புறம்.165, 4–5)

என்ற பாடல் உணர்த்தும். எந்த பொருளும் நிலைபெற்று நிற்காத இந்த உலகத்தில் நிலைபெற்று இருக்க வேண்டும் என்று எண்ணுபவர் தம் புகழை நிலைநிறுத்தித் தாம் மாய்ந்தொழிந்தனர். எனவே நிலையில்லாத இவ்வுலகில் நிலைபேறுடையது புகழ் என்பதை உணர்ந்து வாழ்ந்ததை இவற்றிலிருந்து அறிய முடிகின்றது.

பண்டையத் தமிழர் புகழுடன் வாழ்தலை சிறந்த வாழ்க்கை என்று கருதினர். புகழ்தரத்தக்க செயல்களைச் செய்து வந்தனர் இதனை,

உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்

அமிழ்தம் இவை தாயினும் இனிதெனத்

தமியர் உண்டலும் இவரே முனிவு இலர்

துஞ்சலும் இலர், பிறர் அஞ்சுவது அஞ்சிப்

புகழ் எனின் உயிரும் கொடுக்குவர். பழியெனின்

உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்

அன்ன மாட்சி அனையராகித்

தமக்கென முயலா நோன்தாள்

பிறர்க்கென முயலுநர் உண்மையானே" (புறம்.182, 1–9)

என்கிறது புறநானூற்று பாடல். பண்டையத் தமிழர்கள் அமிழ்தமே என்றாலும் அதைத் தனித்து உண்ணமாட்டார்கள். யாரையும் வேற்றுமை காரணமாக வெறுக்கவும் மாட்டார்கள். அறிஞர்கள் செய்வதற்கு அஞ்சும் தகாத செயல்களைத் தாமும் செய்ய மாட்டார்கள். புகழ் தரக்கூடிய நற்செயல்களை

உயிரைக் கொடுத்தும் நிறைவேற்றுவர். இந்த உலகமே ஊதியமாகக் கிடைதாலும் பழிக்கதக்க செயல்களைச் செய்ய மாட்டார்கள். தம்முடைய நன்மைக்கென்று முயலாமல் பிறருடைய நன்மைக்காகவே முயல்வார்கள். எனவே புகழ் பெறுவதற்குப் பொருளும் பயன்பட வேண்டும் என்பதனை முதுகண்ணன் சாத்தனார்

"நகைப்புற னாகி நின் சுற்றம்

இசைப்புற னாகந் யோம்பிய பொருளே" (புறம்.29, 24–25)

என்று அறிவுரை புகன்றுள்ளார். புகழ் என்பது தனித்த ஓர் அறமன்று, நாம் செய்யும் அறச்செயல்களுக்கெல்லாம் ஈடாகக் கிடைக்கும் பாராட்டுரையாகும். நன்மையான செயல் செய்பவரை உலகம் புகழ்ந்துரைக்கும். அறம் செய்வதன் வாயிலாக பெறுவது புகழ் என்று சிறப்பிக்கப்படும் அறநெறிகளை பின்பற்றுதல் மூலம் பெறும் புகழ் நிலையானது என்பதையும், அப்புகழையும் பெற பண்டைத் தமிழர் விரும்பினர் என்பதையும் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

**அறமில்லாத செயல்கள்**

சங்க கால மக்கள் அறத்தைப் போற்றினர். அறமே புரிந்து வாழ முற்பட்டனர். அறமல்லாதவற்றைச் செய்வதற்கு அஞ்சினர் என்பதைச் சங்க இலக்கியம் கூறுகின்றது. எந்த ஒரு செயலைச் செய்தாலும் அது அறமானது என்பதை ஆராய்ந்து செய்தனர்.

கல்வி கற்பித்த ஆசிரியனுக்குப் பொருள் கொடுக்காது, அவனை வருத்திக் கற்ற கல்வியும், சுற்றத்தார் மனம் வருந்துமாறு தொகுத்து வைத்த

செல்வமும் தாமாகவே அழியும் என்று நம்பினர். செய்த நன்றி மறத்தலையும், சூள் பொய்த்தலையும் அறமற்ற செயல்களாகக் கருதினர். இதனை,

கற்பித்தான நெஞ்சு அழுங்கப்பகர்ந்து உண்ணான் விச்சைக்கண்

தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்

ஒற்றுத்துள் உதவியார்க்கு உதவாதவன் மற்று அவன்

எச்சத்துள் ஆயினும் அஃது எறியாது விடாதே காண்

கேளிர்கள் நெஞ்சு அழுங்கக் கெழுவுற்ற செல்வங்கேள்

தாள்இலான் குடியைபோல், தமயவே தேயுமால்

சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றுஅவன்

வாய்வாய் நன்றுஆயினும் அஃது எறியாதுவிடாதே காண்'' (கலித். 133, )

என்கிறது கலித்தொகைப்பாடல்.

நன்மை விளைவிக்கும் செயல்கள் அறமாகவும், நன்மை தராது தீமை பயக்கக்கூடிய செல்கள் அறமற்ற செயல்களாகவும் கருதப்பெற்றன.

அறமற்ற செயல்களைச் செய்தல் பழி உண்டாகும் என மக்கள் நம்பினர். சங்ககால மக்கள் அறத்தைப் போற்றினர். அறமே புரிந்து வாழ முற்பட்டனர். அறம் அல்லாத செயல்களைச் செய்திட அஞ்சினர் என்பதை இவற்றிலிருந்து அறிய முடிகின்றது.

**உயிரக்கம்**

எல்லா உயிர்களிடமும் இரக்கம் காட்டுவது பண்டைத் தமிழர்களின் பரம்பரைக் குணமாகும். காரணம் இல்லாமல் எவ்வுயிருக்கும் துன்பம் இழைக்க

மாட்டார்கள். சிறிய உயிர்களுக்குக் கூட துன்பம் புரியாமல் அறத்தை மேற்கொண்டனர். சங்க காலத்தில் மக்கள் பிறர்படும் துன்பத்தைக் கண்டால் பொறுக்கமாட்டார்கள். உடனே அவர்களுக்கு உதவி செய்ய முந்துவார்கள். இதுவே சிறந்த மனிதத் தன்மையாகும். மனிதன் மனிதனை மதித்துச் செலுத்தும் அன்பான மனித நேயத்திற்கு இணையானதாக உயிரிரக்கம் அமைகின்றது. மனிதநேயம் மனித உயிரிடத்தில் காட்டும் அன்பை மட்டும் கருதி எழுவதாகும். ஆனால் உயிரிரக்கம் மனித உயிர்க்கும் எல்லாவற்றிற்கும் துணை நிற்கும். விலங்குகள், தாவரங்களையும் மனித உயிருடன் ஒருங்கிணைத்துக் காண்பதால் உயிரிரக்கம் என்பதே பின்பற்றப்படுகிறது.

மனிதப் பண்போடு மிக நெருங்கிய உறவுடைய உயிரிரக்கத்திற்கு அடிப்படையாக அன்பும் அருளும் அமைகின்றன. அன்புள்ளங்களின் அருள் பெருக்கை,

“விளைக வயலே வருக இரவலர்” (ஐங்கு. 2,2)

“பால்பல ஊறுக பகடு நனிசிறக்க” (ஐங்கு, 3, 2)

“பசியில்லாகுக பிணிகள் நீங்குக” ஐங்கு 7, 2)

எனத் தனிப்பட்ட வழிபாட்டிலும் பொது நல உணர்வு வெளிப்படுவதை அறிய முடிகிறது.

இடம், காலம், பயன் போன்ற எவையும் கருதாமல் இயல்பாக எழுகின்ற மன உந்துதலின் செயல்பாடாக உயிரிரக்கம் அமைதல் வேண்டும். தம்பியால் நாடு கொள்ளப்பட்டு காட்டுக்குள் வாழ்ந்த குமணன், தன்னைப் பாடிப் பரிசில் இரந்த பெருந்தலைச் சாத்தணார்க்கு கொடுப்பதற்கு ஒன்றும் இல்லாதபோது

மிக வருந்தி ‘என் தலையை கொடுத்துத் தம்மிடம் பரிசில் பெற்றுக் கொள்க’ எனத் தன்னுடைய உறைவாளை ஈந்த செயலானது சான்றோர் எந்த சூழலிலும் உயிரக்கம் பேணுபவர் என்பதற்குச் சான்றாகும். வேண்டியவர், வேண்டாதவர் என்று எந்த பாகுபாடும் இல்லாமல் பிறர் துன்பத்தைத் தன்னுடைய துன்பமாகக் கருதி பிறருக்கு உதவி புரிந்து வாழ்ந்து வந்தனர்.

வறுமையுற்ற காலத்தில் பசியென வந்தவர்களுக்கு தம்முடைய கைப்பொருளை இழந்து தன் ஊரையும், பெயரையும் அறிவிக்காமல் தன்னை மறைத்துக் கொண்டு உதவிகள் புரிந்துள்ளனர்.

சங்க காலத்தில் உயிரிரக்கம் ஏழை, எளிய மக்களாலும், வழிப்போக்கரிடையே பேணப்பட்டும் வந்தமையை,

செவ்வீ வேங்கைப் பூவின் அன்ன
வேய்கொள் அரிசி மிதவை சொரிந்த
சுவல்விளை நெல்லின் அவரையம் புளிங்கூழ்
அற்கிடை உழந்தநும் வருத்தம் வீடே
அகலுள் ஆங்கட் கழிமிடைந்து இயற்றிய
புலவேய் குரம்பைக் குடிதொறும் பெறுகுவீர்” (மலைபடு. 430–34)

என்று மலைபடுகடாம் அடிகளின்மூலம் அறியலாம்.

வேண்டாதவரை வதைத்து அதன் வழி பெற்ற பொருளால் வேண்டியவர்க்கு உதவுதலும் உயிரிரக்கம். இதனை,

"பாணர் தாமரை மலையஎவும் புலவர்

பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்

அறனோ மற்றிது விறன் மாண்குடுமி

இன்னாவாகப் பிறர் மண் கொண்டு

இனிய செய்தி நின் ஆர்வலர் முகத்தே" (புறம். 12)

என்று புறநானூறு கூறுகின்றது. எப்படியும் வாழலாம் என்று இல்லாமல் இப்படித்தான் வாழ வேண்டும் என்ற குறிக்கோள் வாழ்க்கையிலே உயிரிரக்கம் முதன்மைப் பெறுகின்றது. இதனை,

"உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்

அமிழ்தம் இயைவது ஆயினும் இனிதெனத்

தமியர் உண்டலும் இலரே மனிவிலர்

துஞ்சலும் இலர் பிறர் அஞ்சுவது அஞ்சிப்

புகழெனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்

உலகுடன் பெரினும் கொள்ளலர் அயர்விலர்

அன்னமாட்சி அனையர் ஆகித்

தமக்கென முயலா நோன்தாள்

பிறர்கென முயலுநர் உண்மையானே" (புறம். 182)

எனும் கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதியின் பாடல் இதனை நன்கு புலப்படுத்தும். இவ்வாறு சங்க இலக்கியத்தில் உயிரிரக்கத்தின் மூலம் அறம் வெளிப்படுவதை காணமுடிகின்றது.

**நட்பும் செய்ந்நன்றியும்**

சங்க இலக்கியத்தில் அகப்பாடல்களில் பொதுவான நட்பு குறித்ததாகவும், புறப்பாடல்களில் அரசாட்சியை மையமாகக் கொண்டும் காணப்படுகின்றது. அகப்பாடல்களில் பெண்கள், ஆண்களுக்குச் சொல்லப்பட்ட நட்பு சார்ந்த அறப்பண்புகளை தங்கள் காதலர்கள் தங்கள் மீது கொண்ட காதலின் நியாயத்தை வலுவூட்டுவதற்கு மேற்கொள்கின்றனர். காதலை நட்பு என்ற அறச்சொல்லால் குறிப்பிடுகிறார்கள். ஆடவர்களுக்கிடையே ஏற்படும் நட்பு எத்தனை மேனமையானது என காதலனுக்கு எடுத்துக்காட்டி, அதன் வாயிலாகத் தங்களுக்கு இடையிலுள்ள காதலை உணர்த்தி, தன்னைவிட்டு அவன் பிரிய கூடாது எனக் காதலி கூறுவதாக நட்பின் பெருமை பேசப்படுகிறது.

> … … … பெரியோர்
>
> நாடி நட்பின் அல்லது
>
> நட்டு நாடார் தம் ஒட்டியோர் திறத்தே (கலித். 32, 7–9)

சான்றோர்கள் நன்கு ஆராய்ந்து அளந்த பிறகே நண்பரைத் தேர்வு செய்வார்கள். நட்பான பிறகு ஆராய்ந்து அளக்கமாட்டார்கள். நட்பு இயல்பாக அமைவது இல்லை. உணர்ச்சிமயமாய் ஏற்படுவதும் இல்லை. நண்பர்களாகப் பழகிய போது ஒருவர் பற்றி மற்றவர் அறிந்த ரகசியம் வெளிப்படுத்த மாட்டார்கள். அவ்வாறு வெளியிடுவது பெருமைக்குரியதல்ல.

என்பதனை,

பொருந்திய கேண்மையின் மறை உணர்ந்து அம்மறை

பிரிந்தக்கால் பிறர்க்கு உரைக்கும் பீடிலார். (கலி.25)

என்ற அகப்பாடல் அடிகளின் மூலம் அறியலாம்.

நட்பினை உயர்ந்ததாக போற்ற வேண்டும். நட்பு உயிர்போன்றது. நண்பன் நஞ்சைக் கொடுத்தாலும் மறுக்காமல் உண்பவர் நனிநாகரிகர் என்று காதலியர் தங்கள் காதலை மனதில் கொண்டு உயர்வாக புகழ்கின்றனர்.

இதனை,

"… … … நன்றும்

விழுமிதின் கொண்ட கேண்மை" (நற். 32)

"உயிர் ஓரன்ன செயிர்தீர் நட்பு…

… … … யாக்கை (நற்.72)

"உயிர் இயைந்தன்ன நட்பின்…" (அகம். 339)

"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்

நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்" (நற். 355)

போன்ற அகப்பாடல் அடிகள் காட்டுகின்றன. இவற்றிலிருந்து காதலில் உள்ள நட்பு உயர்வாக போற்றிய விதம் அறியமுடிகின்றது.

குடிமக்களைக் காத்து ஆட்சி புரிய வேண்டிய முறை குறித்து புலவர் ஒருவர் வேந்தனுக்கு அறிவுறுத்திபோது,

“அருளும் அன்பும் நீக்கி நீங்கா

நிரயம் கொள்பரோடு ஒன்றாது காவல்

குழவி கொள்பவரின் ஓம்புமதி” (புறம். 5)

என்று கூறினார். அருளும், அன்பும் உடையோரை தன் நண்பர்களாகக் கொள்வது அரசனின் ஆட்சிக்கு நல்லது என்ற கருத்தை வலியுறுத்துகிறார்.

தன்மானமும், உள்ளவலிமையும் உடைய மாந்தரொடு நட்பு கொள்ள வேண்டும். இதற்கு மாறாக,

“எலிமுயன் றனைய ராகி உள்ளதம்

வளன் வலியுறுக்கும் உளம் இலாளரொடு

இயைந்த கேண்மை இல்லாகியரோ” (புறம். 190)

என்ற பாடலில் காட்டப்படும் அற்பத்தனமும், களவும், பதுக்கலும், சுய முயற்சியும இல்லாதவரோடு நட்புக் கொள்ளக் கூடாது என அரச நட்பு பற்றி கூறப்படுகின்றது.

மன்னன் நண்பர், உறவினர், பகைவர் என மூவருடனும் நட்பு கொள்ள வேண்டும்.

“நட்டோர் இன்மையும், கேளிர் துன்பமும்

ஒட்டாது வாழ்தல் பெருக்கமும் காணுஉ

ஒருபதி வாழ்தல் ஆற்றுவதில்ல” (அகம்.279)

என்பது அகநானூறு குறிப்பிடுகின்றது. நண்பர்களின் வறுமை, உறவினர் துன்பம், பகைவரின் பெருக்கம் கண்டு மன்னன் செயல்புரிய வேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்படுகின்றது. மன்னனை பொறுத்தவரையில் நண்பர், உறவினர், பகைவர் ஆகியோர் அவனது அரசாட்சி நோக்கில் உளவு கொள்ளத்தக்கவர்கள். நண்பர்களால் ஆதாயம் பெற்ற அரசன் அந்த நன்றியை மறுத்தலாகாது. அது அறமாகாது என்பதனை,

"கெட்ட இடத்து உவந்த உதவி கட்டில்

வீடுபேற்று மறந்த மன்னன் போல

நன்றி மறந்து அமையாய் ஆயின்" (குறு.225)

என்ற அடிகளில் இழந்த அரசு பதவியை மீண்டும் பெறுவதற்கு நண்பர்கள் செய்த உதவியை அரசன் மறப்பது அறமாகாது என உணரலாம். இதனைப் போன்றே.

"செல்வத்துள் சேர்ந்தவர் வளன்உண்டு மற்றுஅவர்

ஒல்கத்து நல்கிலர் உணர்விலார் தொடர்பு" (கலி.25)

ஒற்கத்துள் உதவியார்க்கு உதவாதான் மற்றுஅவன்

எச்சத்துள் ஆயினும்அஃது எறியாது விடாதேகாண் (கலி. 149)

போன்ற கலித்தொகைப் பாடல்களில், நன்றி மறந்த செயல் ஒருவனுக்கு அவனுடைய சந்ததியை விடாமல் தொடர்ந்து தீவினை பயக்கும் என்றும் நன்றி மறந்த செயலானது அறமற்ற நிலையை உருவாக்கும் என்றும் புலவர் வலியுறுத்தியுள்ளதை அறியமுடிகின்றது.

பசுவின் காம்பை அறுப்பது, பார்ப்பனார்க்குத் தீங்கு செய்வது, பெண்ணின் கர்ப்பத்தைக் கலைப்பது போன்ற பெரும் குற்றங்களுக்கு கழுவாய் உண்டு. ஆனால் ஒருவன் செய்த உதவியை மறந்தால் அந்த குற்றத்திற்கு பரிகாரமே கிடையாது என்பதை,

"ஆன்முலை அறுத்த அறனிலோர்க்கும்
மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்
வருவாய் மருங்கில் கழுவாயும்உள என
நிலம்புடை பெயர்வதாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்என
அறம் பாடிறன்றே.................." (புறம். 34)

ஈகையில் ஒன்றைப் பெற்றவன் அந்த உதவியை மறந்தாலும், மறக்காவிட்டாலும் ஒன்றுதான். ஆனால் நட்பின் உதவியை ஒருவன் மறக்கக்கூடாது. நன்றியை மறப்பவருக்கு அவற்றிலிருந்து மீட்சி கிடையாது என்பதனை இவற்றிலிருந்து அறியலாம்.

**தீமை செய்யாமல் இருத்தல்**

ஒருவனால் பிறருக்கு நன்மை செய்ய முடியாவிட்டாலும் தீமை செய்யாமல் இருப்பதே சிறந்த அறமாகும். சங்க இலக்கியத்தில் இவ்வறம் வலியுறுத்தப்படுகிறது.

உலகிலே எல்லோராலும் எல்லாக் காரியங்களையும் செய்ய முடியாது. பொதுவாக, நல்ல செயல்களைச் செய்ய எல்லாராலும் முடியாது. அருஞ்செயல்களை ஆற்றுவோர் சிலர்தான். உயர்ந்த உள்ளமும், நுட்ப அறிவும், சிறந்த ஆற்றலும் உள்ளவர்கள்தாம் உயர்ந்த செயல்களை உறுதியுடன் செய்து முடிப்பார்கள். தீமை செய்வது எளிது. எல்லாராலும் இயலும். ஒரு பண்டத்தை உருவாக்குவது அரிது. உருவான பண்டத்தை உடைத்து எரிவது எளிது. எனவே ஒருவனால் நன்மை செய்ய இயலாவிட்டாலும், தீமை செய்யாமல் இருப்பானாயின் அவனைச் சிறந்தவன் என்று சொல்லிவிடலாம். இவ்வுண்மையை மக்கள் உணர்ந்து தீமை செய்யாமல் இருக்க வேண்டும் என்பதை

"நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்பது அன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே" (புறம். 195)

என்ற புறநானூற்று அடிகள் காட்டுகின்றன.

**சான்றோர் அறம்**

சான்றோர் என்பவர் சமுதாயத்தில் நல்ல நெறிகளை எடுத்துக்கூறி மன்னர்க்கும், மக்களுக்கும் அறிவுறுத்துபவர்களாகவே திகழ்ந்தனர். நல்ல சமுதாயம் சிறந்திட அவர்களின் அறவுரைகள் இருந்ததைச் சங்க இலக்கியம் வலியுறுத்தும்.

இருந்தார்கள். முடியாட்சிக் காலத்தில் வெற்றி பெற்ற ஆண்களே சான்றோர்கள். சான்றோர் எனில் கல்வி, கேள்வி, அனுபவம் ஆகியவற்றில் தேர்ந்தவர் என்பதால் முதுமை அனுபவம் உடையவர் என மனப்பதிவு ஏற்படுதல் இயல்பே அவர்கள் முதியோராக இருக்க வேண்டும் எனக் கட்டாயம் இல்லை"[7]

எனச் சான்றோர் பற்றி விளக்கமளிக்கிறார் ராஜ்கௌதமன்.

சான்றோர்கள் சமுதாயத்தில் மன்னரின் புறவாழ்க்கையில் மட்டுமல்லாது, அகவாழ்க்கையிலும் பின்பற்றுதற்குரிய அறநெறிகளை வலியுறுத்தியுள்ளனர். மேலும் குடிமக்களுக்கும் வாழ்க்கை அநெறிகளை அறிவுறுத்தி நன்னெறிப்படுத்தியுள்ளனர்.

இத்தகைய சான்றோரின் பண்புநலன்களாக, தமக்கென வாழாமல் பிறருக்கென வாழும் இயல்பினை உடையவர் சான்றோர். பிறர் தம்மை புகழ்ந்து கூறுவதற்கு முன்பு அதற்கு நாணும் இயல்பு கொண்டவர். புகழ் வேண்டாமை அறமும், பழியதனை ஏற்காக பண்பும் உடையவர். உண்மையை மறந்து பொய் கூறாது வாய்மையறம் உடையவர். வாழ்தல் வேண்டி பொய் கூறமாட்டார்கள். தம்மைச் சேர்ந்தவரின் துன்பத்திற்காக வருந்துபவர் போன்றவை சான்றோரின் பண்புகளாக சங்க இலக்கியம் எடுத்துரைக்கிறது.

தம்மைச் சார்ந்தவர்களின் துன்பத்தையும் தீர்க்கும் அருள் உள்ளம் கொண்டவர்கள் சான்றோர் என்பதை,

“அளிய பெரிய கேண்மை நும்போல்

சால்பு எதிர் கொண்ட செம்மையோடும்

தேறா நெஞ்சம் கையறுபு வாட

நீடின்று விரும்பார் ஆயின்” (நற். 345, 6–9)

என்று நற்றிணை கூறுகின்றது.

இவ்வாறு சான்றோர் கூறிய அறிவுரைகள் எல்லாம் சமுதாயத்திற்கு கூறும் அறவுரைகளாகவே இருந்ததை சங்க இலக்கியம் வலியுறுத்தும். அந்த அறவுரைகள் உலக மக்களின் வாழ்க்கைக்கு உறுதுணையானவை என்பது இவற்றிலிருந்து அறியலாம்.

**அறமே முதன்மை**

சங்ககால சமுதாயத்தில் அறத்திற்கு முதன்மையளித்தனர். அறமும், பொருளும், இன்பமும் மூன்றும் ஆற்றவல்லது செல்வம் என்று கருதினர். எனவே செல்வமுடையோர் அறம் செய்தல் வேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது. அவ்வாறு பயன்படாத செல்வம், பாவத்தின் விளைவுகளாகக் கருதப்பட்டது. ஊமை, குருடு, அறிவுகுறை, கூன், தசைபிண்டம், செவிடு, விலங்கு, குறள் ஆகிய எண்பேரெச்சங்கள் அடைவர் என்ற நம்பிக்கை நிலவியது. இதனை,

“சிறப்புஇல் சிதடும் உறுப்புஇல் பிண்டமும்

கூனும் குறளும் ஊமும் செவிடும்

மாவும் மருளும் உளம்பட வாம்நாக்கு

எண்பேர் எச்சம் என்று இவை எல்லாம்

பேதமை அல்லது ஊதியம் இல்லன

முன்னும் அறிந்தோர் கூறினர்'' (புறம். 28, 1–6)

இவ்வாறு புறநானூற்றில் வலியுறுத்தப் பெறுகின்றது.

சுற்றத்தாரை மகிழ்ச்சியுறவும், செய்யவும், புகழை நிலைபெறச் செய்யவும் பொருள் பயன்பட வேண்டும். என்ற அறநெறியினைப் புலவர் அறிவுறுத்தியுள்ளனர். மேலும் அறநெறியில் பொருளீட்டுதலும், அறநெறியில் இன்பம் துய்த்தலும் சிறப்பு என்று பண்டையத் தமிழர் கருதினர்.

பண்டைத் தமிழ் மக்கள் தனிமனிதனையும், சமுதாயத்தையும் போற்றி வளர்க்கும் ஒழுக்க நெறியாக அறத்தைக் கருதினர். மறுமையைப் பேற்றே, அளித்தாலும், அளிக்காவிட்டாலும் இவ்வுலக வாழ்க்கையில் தனி மனிதனும், சமுதாயமும் நலமாக வாழ்வதற்கும் முன்னேற்றத்தை அடைவதற்கும் அறவாழ்வு இன்றியமையாதது என்னும் நம்பிக்கை நம் முன்னோர்களிடம் நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது.

**சங்க சமுதாயத்தில் ஒழுக்கநெறி**

ஒழுக்கமுடைய வாழ்வே உயர்ந்த வாழ்வு என்பது பண்டைத் தமிழரின் கொள்கையாக இருந்திருக்கின்றது. வள்ளுவர் தம்முடைய ஒழுக்கமுடைமை என்னும் அதிகாரத்தில் ஒழுக்கத்தை உயிரைவிட மேலானதாகக் கூறுகிறார்.

''ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்

உயிரினும் ஓம்பப் படும்'' (குறள். 244)

ஒழுக்கம் எல்லோர்க்கும் சிறப்பினைக் கொடுப்பதால் அதனை உயிரை விட மேலானதாக கருதி காத்தல் வேண்டும் என்கிறார். சங்க காலச் சமுதாயம் ஒழுக்கமுடைய வாழ்க்கையை மேற்கொண்டனர். மணி, பொன், முத்து இவற்றாலான அணிகலன்கள் பழுதடைந்தால் சரிசெய்து கொள்ளலாம். ஆனால் சால்பு, வியப்பு, பெருமை ஆகிய பண்புகள்குன்றினால் அவற்றை சரிய செய்ய முடியாது என்பதை,

“முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை

நேர்வரும் குரைய கலம் கெடின் புணரும்

சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்

மாசுஅறக் கழீஇய வயங்குபுகழ் நிறுத்தல்

ஆசுஅறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை

எளிய என்னார் தொல் மருங்கு அறிஞர்” (குறிஞ். 13–18)

என்ற குறிஞ்சி பாட்டின் மூலம் காணப்படுகின்றது.

நன்னெறி போற்றி நல்வாழ்க்கை வாழ்ந்தவர் பண்டைத் தமிழர். ஊரில் ஒழுங்கை நிலைநாட்டுவதைத் தம் பொறுப்பு என்று ஊர்ச்சான்றோர் கருதினர். காதலித்தவளைக் கைவிட்டவனை மரத்தின் கட்டிச் சுண்ணாம்பு நீரினை, அவன் தலையில் கொட்டி, ஊரார் தண்டித்தனர். இதனை,

“திருநுதற் குறுமகளணி நலம் வவ்விய

அறனி லாள னறியே னென்ற

திறனில் வெஞ்சூ ளறிகரி கடாஅய்

முறியார் பெருங்கிளை செறியப் பற்றி

நீறுதலைப் பெய்த ஞான்றை

வீசு சாலவையத் தார்பீனும் பெரிதே'' (அகம். 256: 15–20)

என்று அகநானூறு கூறுகின்றது. சங்க காலத்தில் ஒழுக்கத்திற்கு தமிழர் அளித்த உயர்வினை இதன்வழி அறிய முடிகின்றது.

இல்லத்தில் மனைவியுடன் சேர்ந்து இன்பம் பெறுதலைச் சிறப்பாகவும், பொதுப் பெண்களைச் சேர்தலை இழிவாகவும் சங்ககால மக்கள் கருதினர்.

"... ... ... பொருந்திய

தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாய்

பல்லிருங் கூந்தன் மகளிர்

ஒல்லா முயங்கிடைக் குழைக வென்னாரே'' (புறம். 73, 10–13)

என்ற வஞ்சினக் கூற்று இதனைப் புலப்படுத்தும். எனவே சங்க சமுதாயத்தில் ஒழுக்கநெறி போற்றியதை அறிய முடிகிறது.

**சமய உணர்வில் அறம்**

சங்க காலத்தில் மக்களிடையே சமய உணர்வு இருந்ததைச் சங்க இலக்கியம் உணர்த்தும். மக்களைத் தீய வழியில் செல்லாமல் நல்வழிபடுத்த இந்தச் சமய உணர்வு ஒரு வழிகாட்டியாக அமைந்துள்ளது. இறைவன் செய்யும் நன்மைகளை அருளாகவே எண்ணி வழிபட்டனர். சமுதாயத்தை நல்வழிப்படுத்த இவ்வறமானது பயன்பட்டதைச் சங்க இலக்கியம் உணர்த்தும்.

**அன்பே இறை**

இறைவனை அறத்தின் திருவுருவாகவும், குணமென்னும் குன்றேறி நின்றவனாகவும் எண்ணி அன்பர்கள் இறைஞ்சினர். அறத்திற்கெல்லாம் அடிப்படையானது, தலையாயது அன்பு ஆதலின் இறை அன்பாகவே கண்டனர். சங்கப் புலவர் கடுவளினவெயினார் திருமாலை, அறத்தினுன் அன்புநீ எனச் சுட்டிக் கூறியுள்ளார்.

எல்லாச் சமயங்களுக்கும் அன்பே அடிப்படையாகும். மக்களையும், பிற உயிர்களையும் சமமாகக் கருதிப் போற்றுதலே உண்மையான இறைவழிபாடு என்று எல்லாச் சமயத்தினரும் எண்ணினர். இறைவனை இறைஞ்சி வரம் வேண்டும் போது அவர்கள் இவ்வுலக இன்பத்திற்கு ஏதுவாகிய பொருளும், பொன்னும், போகமும் வேண்டிலர். நிலைத்த இன்பம் தரத்தக்க அன்பு, அருள், அறம் என்னும் மூன்றையும் வேண்டினார்.

தெய்வத்தையும், அன்பையும் பிரித்துக் காண முடியாது. இரண்டும், ஒன்றாகவே கலந்துள்ளன என்பதை அழுத்தந்திருத்தமாகத் திருமூலர் கூறுவர். இதனை,

“அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தரே” (திருமந். 270)

என்று திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

உயிரினங்களுக்கு நேரும் துன்பங்களுக்காக கருதி விரைந்து துயர்துடைத்தலே அறிவுப் பயனாகும். இதனையே வள்ளுவர்,

"அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்றோய்

தந்நோய் போற் போற்றாக் கடை" (குறள். 163)

என்பதாகும். அறவழிநின்று பிறர்துயர் துடைக்கவே இறைவன் அமைந்ததாகக் கருதப்படுகின்றான். திருமால் எல்லாப் பொருள்களிலும் உட்பொருளாய்த் திகழ்கின்றார். அவர்தம் இறைமைப் பண்புகள் இயற்கைபால் ஒளிர்கின்றன. இயற்கையும், இறைவனும் ஒன்றே. இதனை பரிபாடலானது,

"தீயினுள் தெறல்நீ, பூவினுள் நாற்றம் நீ

கல்லினுள் மணியும்நீ சொல்லினுள் வாய்மைநீ

அறத்தினுள் அன்புநீ மறத்தினுள் மைந்துநீ

வேதத்து மறைநீ பூதத்து முதலும்நீ

வெஞ்சுடர் ஒளியும்நீ திங்களுள் அளியும்நீ

அனைத்துநீ அனைத்துனுள பொருளும்நீ" (பரி.3. 63–68)

என்று இயம்பும். சுடும்தீயில் வெப்பமாகவும், மலரினுள் மணமாகவும் மணிகளுள் மணியாகவும், சொல்லில் வாய்மையாகவும், அறத்தினுள் அன்பாகவும், மறச்செயல்களில் வலிமையாகவும் வேகங்களின் உட்பொருளாகவும், ஐம்பூங்களின் முதற் பொருளாய், கதிரவனின் ஒளியாக, திங்களின் குளிர் பண்பாகவும் எல்லாப் பொருள்களாலும் திருமால்

விளங்குபவன் அறநெறியின் வளர்ச்சி இறைவனை அறவடிவாகக் காணுமளவு வளர்ந்துள்ள பாங்கினைப் பரிபாடல் சுட்டுகின்றது.

இவ்வாறு அன்பானது அறவடியாக விளங்கியதைச் சங்க இலக்கியம் காட்டுகிறது.

**அறமும் புண்ணியமும்**

மனிதன் செய்கின்ற செயல்கள் பல திறத்தன. அவற்றில் நல்ல செயல்கள் என்றும், தீய செயல்கள் என்றும் இரண்டாகக் கூறி அச்செயல்களில் உண்டாகும் பயனைக் கருத்தில் கொண்டு இருவகையாகப் பாகுபாடு செய்யலாம். ஒரு மனிதன் செய்கின்ற செயலின் விளைவாக அவனுக்கும் பிறருக்கும் நன்மை உண்டாகுமானால் அதை நல்ல செயல் என்று கூறுவர். ஆனால் ஒரு மனிதன் செய்கின்ற குறிப்பிட்ட ஒரு செயலால் அவனுக்கு நன்மையும், பிறருக்கு எவ்வழியிலேயே தீமையும் உண்டாகுமானால், அதை அறச்செயல் என்று உலகம் கொள்ளுவதில்லை. எனவே எப்பொழுதும், யார்யார்க்கும் நன்மை பயக்கத்தக்க செயல்களையே அறமென்று சான்றோர்கள் கருதினர். அத்தகைய நற்செயல்கள் செய்வதினால் ஒருவனுக்கு புகழ் உண்டாகிறது. மறுமைக்கு ஒரு பயனும் விளைகின்றது. அப்பயனைப் புண்ணியம் என்று கூறுவர்.

“சமயத் துறையில் அறத்தின் பயன் புண்ணியம் என்று கூறுவது மரபாகும்” என்கிறார் க.த. திருநாவுகரசு.

நற்செயல்களின் விளைவாகக் கிடைக்கும் புண்ணியத்தை அறம் என்று கூறும் வழக்கம் தொன்மையானது என்பதை,

"அறனும் அன்றே ஆக்கமும் தேய்ம்" (நற். 68)

"அருளுறச் செய்யின் நுமக்கு அறனு மாரதுவே" (கலி.140)

"அறம் பெரிதாற்றி அதன் பியன் கொண்மார்" (பரி. 19)

போன்ற பாடல்வரிகளால் அறியலாம்.

"சங்க கால மக்களுக்கு சமயக் காழ்ப்பில்லை. முருகன், சிவன் எனப் பல கடவுள்களை அன்பர்கள் வழிபட்டாலும் எல்லாம் ஒன்றே எனத் துணிந்தனர். சங்க காலத்தில் பல சமயங்களைத் தழுவிய புலவர் வாழ்ந்தமையால் சங்கப் பாடல்களில் பல சமயக் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன."[11]

இவற்றிலிருந்து சங்ககால சமுதாயத்தில் பல வகையாக சமயம் இருந்தாலும் "அறத்தை" அறக்கடவுளாக நினைத்து நாட்டில் தீமை செய்வதற்கு அஞ்சி நன்மைகள் செய்ய வேண்டும் என்ற உணர்வு மக்களிடம் இருந்திருப்பதை அறியமுடிகிறது. தீமை செய்தால் அறக்கடவுள் தண்டிக்கும் என்ற நம்பிக்கை சமுதாயத்தில் இருந்திருக்கிறது. சங்க கால சமுதாயம் அறவழியில் வாழ்ந்தமைக்கு அறக்கடவுளே துணைநின்றது என்ற நம்பிக்கை மக்களிடம் இருந்ததை அறியமுடிகின்றது.

**உணவு அறம்**

சங்க காலத்தில் மக்களுக்கு உணவிடும் அறச்சாலைகள் இருந்தன. பிறரிடம் பிச்சை யேற்றுண்ணும் வறியவர்களுக்கு, செல்வர்கள் அன்னமளித்து வாழந்து வந்தனர். மதுரையில் ஏழைகளுக்கு உணவளிக்கும் அன்னச் சாலைகள் இருந்தன. அந்த அன்னச்சாலையில்

பழச்சுளைகள், பலவகைப்பட்ட மாம்பழங்கள் பலவகையான காய்கறிகள், வாழைப்பழம், இளங்கீரை, பட்டை சாதம், புலவுச்சோறு, கிழங்கு ஆகியவற்றை அன்னசாலைக்கு கொண்டு வந்து வறியவர்களுக்கு அளிப்பார்கள்.

இதே போன்று காவிரிப்பூம்பட்டிணத்தில் அறம் நிலைபெற்ற அகன்ற அன்னசாலைகள் இருந்தன. அவை இம்மையில் புகழ்நிலை பெற்ற சொல் வளரவும், மறுமையில் அறப்பயனைத் தர வல்லனவாகவும் விளங்கின. இதனை,

"புகழ்நிலை இய மொழிவளர

அறநிலைஇய வகனட்டில்" (பட்டி. 42– 43)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

சோற்றை வடித்துக் கஞ்சி ஆறுபோல பரந்தொழுகியது. இடையறாமல் அவ்வறச் சாலைகளில் மக்களுக்கு உணவளிக்கப்பட்டது என்பது இதனால் அறியப்படும்.

மக்களுக்கு மட்டுமின்றி மாடுகளுக்கும் நீரும், வைக்கோலும் இடும் பல சாலைகள் இருந்தன. இச்சாலைகள் மக்களின் பசியையும், மாக்களின் பசியையும் போக்கும் அறப்பணி புரிந்தனர் என்பதை பட்டிணப் பாலை தெளிவுபடுத்துகிறது.

உணவளிப்பது ஓர் அறமாதலால் உணவளிக்கும் இடங்கள் அறச்சாலைகளாக விளங்கியத் தன்மையைச் சங்க இலக்கியம் எடுத்துரைக்கின்றது.

இவ்வாறு வயிற்றுக்கு உணவளிப்பது மட்டுமல்லாது பாலை நிலங்களிலே செல்வோர் தண்ணீர் பெறாது துன்புறும் போது அதனை நீங்கும் பொருட்டு பாலை நிலங்களிலே நெல்லி மரங்களை வைத்து வளர்த்தனர் பண்டைத் தமிழர் என்பதை அறியலாம்.

சங்க இலக்கியத்தில் உணவு அளிப்பதும், தாகத்திற்கு நீர் அமைத்துக் கொடுப்பதுமான அறத்தை மேற்கொண்டனர்.

**தொகுப்புரை**

சங்ககால சமுதாயத்தில், மக்கள் செய்யும் தொழிலின் அடிப்படையில் பாகுபடுத்தப்பட்டிருந்தனர். அவர்கள் தத்தமக்கு என்று சில குறிப்பிட்ட செயல்களை, பண்புகளை அறநெறிகளாகக் கொண்டு வாழ்ந்தமையைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ள தன்மை இவ்வியலில் எடுத்துக்காட்டப்பட்டது. குறிப்பாக மக்களின் பசிப்பிணியைப் போக்கும் உணவு வழங்கும் அறம் நெட்டோட்டமாக மிகுதியாக நிகழ்ந்தமையைச் சங்க இலக்கியங்கள் நெட்டோட்டமாகப் பதிவு செய்துள்ளமையையும், ஒழுக்கம் அன்பு ஆகியன அறநெறிகளாகச் சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படுவதையும் இவ்வியல் எடுத்துக்காட்டியுள்ளது.

## மேற்கோள் விளக்கம்

1. வாழ்வியற்களஞ்சியம் தொகுதி – 8, ப. 618
2. ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு, கருத்தரங்கு ஆய்வு கட்டுரைகள் ப. 464
3. சு. வித்யானந்தன், தமிழர் சால்பு. ப. 203
4. சாமி. சிதம்பரனார், பத்துப்பாட்டு, பண்டைத் தமிழரும் ப. 123
5. மேலது. ப.174
6. வே. முத்துலட்சுமி, பண்டைத் தமிழிலக்கியங்களில் அறநெறிகள் ப. 180
7. ராஜ்கௌதமன், தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும் ப. 256
8. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப. 46
9. ஐந்தாம் உலகத்தமிழ் மாநாடு, கருத்தரங்க ஆய்வுக் கட்டுரைகள், ப. 309
10. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப. 38
11. இரா. சங்கரபரணி, சங்கத்தமிழ் வளம் , ப. 34–35

# இயல் – 5

## அறம் பாடியுள்ள புலவர்கள்

### முன்னுரை

ஒரு சமுதாயம் நல்லமுறையில் இயங்க வேண்டுமானால் அச்சமுதாயத்தில் வாழ்வோர் அறநெறியோடு வாழவேண்டும். சமுதாயத்தில் உள்ளவர்கள் அறநெறிகளைக் கடைபிடித்து வந்தால்தான் அது சிறப்புறும். சங்ககாலச் சமுதாயம் நல்லமுறையில் வாழப் பல அறநெறிகளை எடுத்துரைத்து மன்னரையும், மக்களையும் நெறிப்படுத்திய புலவர்கள் பலர், அறவோராகத் திகழ்ந்து அறநெறிகளை வலியுறுத்தி பாடியுள்ளனர். இவ்வியலானது சங்ககால மக்களாலும், மன்னர்களாலும் அறநெறியாகக் கருதப்பட்ட கருத்தியல்களை ஆராய்கிறது.

### புலவர் பெருமை

பண்டையத் தமிழ் புலவர்கள் பெரும்பாலும் மன்னர்களின் ஆதரவால் வாழ்ந்தவர்கள். பெருநிலக்கிழார்களாகிய வள்ளல்களைப் பாடி அவர்கள் வழங்கிய பொருள்களைக் கொண்டு வறுமை தீர்ந்து வாழ்ந்தார்கள். இருப்பினும் தன் பெருமையையும் தன்மான உணர்வினையும் விட்டுவிடவில்லை. தங்களுக்கு உண்மை என்று நினைப்பதை உரைப்பதற்கும் அவர்கள் அஞ்சியதில்லை. தன்மானத்துடன் தங்கள் வாழ்வை நடத்தி அறநெறியோடு வாழ்ந்தனர்.

“அறவோர் என்போர் அறத்தின் வழி நடப்பவர்கள் அறத்தைப்பற்றி சிந்திப்பவர்கள் அறத்தின் வழி இயங்கச் சமுதாயத்தை நல்லாற்றுப்படுத்துபவர்கள் மனித நல மேம்பாட்டையே முதன்மைப்படுத்திச்

செயல்படுபவர்கள்"[1] என்கிறார் கு. மோகனராசு. இத்தகைய அறவோர்களாக வாழ்ந்து காட்டியவர்கள் பண்டையத் தமிழ் புலவர்கள் என்பதை இதன்மூலம் அறியலாம்.

"உலகியல் விளக்கம் அரசியல் அறிவு, இறையியல் சிறப்பு, அறிவியல் ஒருமை பலவற்றை உருவாக்கி வளர்த்த சிந்தனையாளர்களையும் காண்கிறோம். தொழிற்படுத்தி, கலைவன்மை, இவற்றை உருவாக்கி அவர்கள் தமிழகத்தைச் செல்வமும், இன்பமும் கொழிக்கும் நாடாக வளர்க்கத் தூண்டுகோலாக விளங்கினார்கள்"[2] எனப் புலவர்கள் பற்றிச் கூறுகிறார் இராம. பெரிய கருப்பன்.

**அம்மூவனார் கூறியுள்ள அறம்**

சங்க காலத்தில் தலைவன் அறநெறியோடு விளங்கவேண்டும். இதுவே சங்ககால நெறியாகும். அம்மூவனார் தன்னுடைய பாடலில் அறநெறியோடு வாழ்க்கை நடத்தும் தலைவனை 'அறவன்' என்ற சொல்லில் குறிக்கின்றார்.

மேலும் தலைவன் தான் காதலிக்கும், தலைவிக்கு அறம் தவறாமல் நடக்க வேண்டும் என்ற எண்ணம் சிதறிவிடும்போது அத்தலைவனை 'அறனிலாளன்' என்று தம்முடைய பாடலில் அம்மூவனார் குறிப்பிடுகின்றார்.

**ஆலந்தூர் கிழார்**

செந்நன்றி மறாவாமையைச் சிறந்த அறமென வலியுறுத்தியவர் ஆலந்தூர் கிழார். இதனை,

"ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கும்
மாண்இழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர் தப்பிய கொடுமை யோர்க்கும்
வழுவாய் மருங்கின் கழுவாயும் உளஎன
நிலம்புடை பெயர்வது ஆயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க்கு உய்திஇல்" (புறம். 34: 1–7)

ஆன்முலையறுத்தோர், கருச்சிதைத்தோர், குரவர்த்தப்பியோர் ஆகிய கொடுமைகளைச் செய்தவர்க்குக் கழுவாய் உண்டு. ஆனால் ஒருவர் செய்த நன்றியைக் கொன்றவர்க்கு உய்தி இல்லை என்ற அறத்தை வலியுறுத்தியுள்ளார்.

"எங்கோன் வளவன் வாழ்க வென்றுநின்
பீடுகெழு நோன்றாள் பாடே னாயிற்
படுபறி யலளே பல்கதிர்ச் செல்வன்" (புறம். 34: 16–18)

எனத் தன் செய்நன்றி மறவாப் பண்பினை உணர்த்தியவராவார்.

### ஆவூர் மூலங்கிழார்

செங்கோல் மன்னர் ஆளும் நாடு துறக்கத்திலும் சிறந்தது என்ற செங்கோலாட்சியைப் போற்றியவர். மக்கள் குறைக்கேட்டு முறை செய்தற்குரிய மன்னன் காண்பதற்கு எளியவனாகவும், இன்சொல்லுடையவனாகவும் இருத்தல் வேண்டும் என்ற அரசியல் அறத்தை வலியுறுத்தி பாடியுள்ளார்.

புகழை விரும்பும் மன்னன் தன்னை நாடி வருவோரிடம் செய்ய இயல்வதை முடியும் என்றும், இயலாதவற்றை முடியாது என்றும் கூறுவது நட்பை வளர்க்கும் தன்மையாகும். அவ்வாறு இல்லை என்றால் அதுவே மன்னனின் புகழைக் குறைத்துவிடும் வாயிலாக அமையும் என்பதை,

"ஒல்லுவ தொல்லும் என்றாலும் யாவர்க்கும்

ஒல்லூ தில்லென மறுத்தலும் இரண்டும்

ஆள்வினை மருங்கின் கேண்மை பாலே" (புறம். 196: 4–6)

மன்னன் தன்னுடைய கொடைப் பண்பிலிருந்து மாறாதவனாக இருக்க வேண்டும் என்ற இலக்கணத்தை அறிவுறுத்தியவர் என்பதை இதன்மூலம் அறியமுடிகிறது.

**உறையூர் ஏணிச்சேரி முடமோசியர்**

இவர் சிறந்த புலமை வாய்ந்தவராவார். சிறப்பில்லாத மன்னரைப் பாடுதல் புலவருக்கு இயல்பன்று என்ற அறநெறியினை வலியுறுத்திப் பாடியுள்ளார். இப்பிறவியில் செய்யும் அறமானது மறுபிறவிக்குப் பயனாக முடியும் என்று எண்ணிச் செய்வது சிறந்த அறமாகாது. அது அறத்தினையே விலை கூறி விற்கும் வாணிகம் என்று அறத்திற்கு விளக்கம் கூறியுள்ளார்.

ஆய் அண்டிரனின் கொடைச் சிறப்பை ஏணிச்சேரி முடமோசியார் பாராட்டும்போது கூறும் அறக்கருத்துக்கள் பல.

"சுவைக்கு இனிது ஆகிய குய்யுடை அடிசில்

பிறர்க்கு ஈவு இன்றித் தம் வயிறு அருத்தி

உரைசால் ஓங்கு புகழ் ஓரிஇய

முரைசு கெழு செல்வர் நகர்போ லாதே'' (புறம். 127: 7–10)

செல்வத்தினால் வரும் பயனை ஈதலாகிய அறத்தினைச் செய்து, பகுத்துண்டு பலருடன் வாழ்வதே அறம் என்றும், அவ்வாறு வாழாதவர் தன்னுடைய பெருஞ்செல்வத்தை இழந்துவிடுவர் என்று அறத்தை வலியுறுத்தி பாடியுள்ளார் என்பதை அறியலாம். மேலும்,

நெருங்கிச் சென்று புலவர்கள் பல சொற்களைக் கூறினாலும் சிறிதளவு இரக்க உணர்வு இல்லாது சிறப்பின்றி வாழும் மன்னரைப் பாடுதல் புலவர் இயல்பன்று என்ற அறத்தினையும் வலியுறுத்தியுள்ளார்.

**உறையூர் முதுகண்ணன் சாத்தனார்**

உறையூரைச் சேர்ந்தவராகிய முதுகண்ணன் சாத்தனார் அரசர்க்கு நீதி நெறிகளை அறிவுறுத்தியவர். சோழன் நலங்கிள்ளிக்கு அறக்கருத்துக்களை எடுத்துரைக்கும் விதமாகப் பாடல்களைப் பாடியுள்ளார். அறம், பொருள், இன்பம் மூன்றும் ஆற்றுவதற்குப் பயன்பட வேண்டும் என்றும், அறம் செய்யாமல் போனால் போற்றுவதற்குத் தகுதியானவனாகமாட்டாய் என்ற அறக்கருத்தை வலியுறுத்தியுள்ளார். இதனை,

''அறனும் பொருளும் இன்பமும் மூன்றும்

ஆற்றும் பெரும நின் செல்வமும்

ஆற்றாமை நிற்போற்றாமையே'' (புறம். 28: 15–17)

என்ற அறத்தை வலியுறுத்தியுள்ளார். இவர் மன்னன் சிற்றினம் சேரக் கூடாது என்ற அறநெறியினை வலியுறுத்துவார்.

"நகைப்புறனாக நின் சுற்றம்

இசைப் புறனாக நீ ஓம்பிய பொருளே" (புறம். 29: 25–26)

என்று கூறியுள்ளார். சோழன் நலங்கிள்ளியிடம் நல்லதன் நன்மையையும், தீயதன் தீமையையும் கூறி சிற்றினத்தோடு சேரக்கூடாது என்ற அறத்தை வலியுறுத்தியுள்ளார். மேலும் இல்லையென்று வருந்தி வந்தவர்க்கு ஈதல் வேண்டும் என்ற அறநெறியையும் வலியுறுத்தியுள்ளதை,

"தேய்தல் உண்மையும், பெருகல் உண்மையும்

மாய்தல் உண்மையும், பிறத்தல் உண்மையும்

அறியாதோரையும் அறியக் காட்டிக்" (புறம். 29: 1–3)

என்ற ஈகையறத்தினைப் புலவர் வலியுறுத்தியுள்ளார்.

உறையூர் முதுகண்ணன் சாத்தனார், வானில் திரிதரும் திங்கள், தேய்தல், பெருகல், மாய்தல், பிறத்தல் ஆகிய உண்மைகளை உலகுக்கு உணர்த்துவதாக, இயற்கை வாயிலாக அறம் உரைத்துள்ளார்.

**ஓதலாந்தையார்**

ஓதலாந்தையார் ஐங்குறுநூற்றில் பாலைத்திணை பாடல்களைப் பாடியவர். தலைவனுடன் உடன்போக்கினை மேற்கொள்ளுதல் கற்புக்கடம் பூண்ட மகளிர்க்கு அறநெறியாகும் என்பதை,

“அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்

பறைநுதற் குறுமகள் போகிய சுரனே” (ஐங். 371: 4–5)

கற்பு என்பது பெண்ணுக்குரிய தலையாய பண்பு என்ற அறநெறியை ஐங்குறுநூற்றின் பாடல்வழி அறியலாம். தலைவியை அவள் விரும்பும் தலைவனுக்கு மணமுடித்துக் கொடுக்க விரும்பாத தாயை ‘அறனில்யாய்’ என்றும் தீவினையை ‘அறனில்பால்’ என்றும் இகழ்ந்துரைப்பர். அந்தணர்க்குரிய கொள்கையாக,

“அறம்புரி யருமறை நவின்ற நாவின்

திறம்புரி கொள்கை” (ஐங். 387: 1–2)

என்ற பாடல்வரியானது அறத்தைச் சொல்லும் பல வேதங்களை ஓதுகின்ற நாவினை உடையவர்கள் அந்தணர் என்ற உண்மையை வலியுறுத்தியுள்ளார்.

**கணியன் பூங்குன்றனார்**

ஊழின் வழியே ஒருவர்க்கு வாழ்க்கை அமையும் என்ற அறத்தை வலியுறுத்துகிறார். ஒருவருக்குச் செல்வமும், கல்வியும் யாவுமே ஊழினால் அமைவன என்பதை,

“யாதும் ஊரே யாவரும் கேளிர்

தீதும் நன்றும் பிறர்தர வாரா

நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன

சாதலும் புதுவது அன்றே வாழ்தல்

இனிது என மகிழ்ந்தன்றும் இலமே முனிவின்

இன்னாது என்றலும் இலமே'' (புறம். 192)

என்று புறநானூற்றில் கணியன் பூங்குன்றனார் தீமையும் நன்மையும் பிறரால் வருவனல்ல. இன்பமும், துன்பமும் கூட இவை போலத்தான். நம்முடைய அறிவுத்திறமை, நடத்தை காரணமாகத்தான் இவைகள் நம்மையடைகின்றன என்ற நிலையாமைக் கருத்தை உலகுக்கு உணர்த்தி அறத்தை வலியுறுத்தியவர் கணியன் பூங்குன்றனார் ஆவார்.

**கபிலர்**

கபிலர் அகத்திணையிலும், புறத்திணையிலும் மிகுதியான பாடல்களைப் பாடியுள்ளார். கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டு அறத்தொடு நிற்றல் துறையைச் சார்ந்தது. இதனை,

''முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை

நேர்வரும் குரைய கலம்கெடின் புணரும்

சால்பும் வியம்பும் இயல்பும் குன்றின்

மாசு அறக் கழீஇ வயங்கு புகழ் நிற்றல்

ஆசு அறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை

எளிய என்னார் தொல் மருங்கு அறிஞர்'' (குறிஞ்சி. 13–18)

முத்து, இரத்தினம், பொன் இவைகளால் இழைக்கப்பட்ட அணிகலன் எவ்வளவு கெட்டுப்போனாலும் மீண்டும் அதனைச் சீர் செய்து கொள்ளலாம். ஆனால் நல்ல தன்மையும், பெருமையும், நல்லொழுக்கமும்

நாசமடைந்துவிட்டால் அந்த நாசத்தைத் திருத்தி மீண்டும் புகழ்பெற முடியாது. குற்றமற்ற அறிவுள்ள பெரியார்களாலும் இந்நிலையை அடைய முடியாது என்ற அறநெறியினைக் கபிலர் வலியுறுத்துகிறார். ஒவ்வொரு மனிதருடைய வாழ்விலும் ஒழுக்கம் மிக முக்கியமானது என்பதைக் கபிலர் தன்னுடைய பாடல் மூலம் உலகுக்கு வலியுறுத்தியுள்ளார்.

**காரி கிழார்**

காரி கிழார் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதிக்கு அரசியலறத்தை அறிவுறுத்தியவர். செங்கோல் தவறாது நாட்டை ஆளுவதலும், இரவலர்க்கு வரிசையறிந்து பரிசில் கொடுத்தலும் மன்னர்குரிய அறநெறிகளாலும் என்பதைக் காரிகிழார் பாடல் தெளிவுறுத்துகின்றது.

**காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார்.**

காரிக் கண்ணனார் ஒற்றுமையை மன்னரிடையே வலியுறுத்தியவர். சோழன் குராப் பலத்துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கருப்பக் கண்ட காரிக் கண்ணனார் நீவிருவரும் ஒன்றுபட்டுச் செயல்பட்டால் இந்நிலவுலகமும் உம் கையகப்படும் என்று அறிவுரை நல்கியவர்.

இவருடைய அறிவுரைகள் ஒற்றுமையின் வலிமையினை உணர்த்துவனவாகும். நாடாளும் மன்னர்கள் தமக்குள் ஒற்றுமையுடன் வாழ வேண்டியதன் இன்றியமையாமையினை எடுத்துக்கூறிய இவருடைய பாடல் மக்களின் நல்வாழ்விற்கும் போர் முதலிய நடைபெறாமல் அமைதி நிலவும் சமுதாயம் உருவாவதற்கும் அடிப்படையாகின்றது என்பதை அறியலாம்.

**குடபுலவியனார்**

அரசர்குரிய அரசியலறங்களை மனங்கொள்ளுமாறு கூறும் இயல்பினை உடையவர். இவர் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு அரசியலறம் அறிவுறுத்தியவர். இதனை,

“நீர் இன்று அமையா யாக்கை எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவெனப்படுவத நிலத்தொடு நீரே” (புறம். 18: 13–16)

என்ற பாடல்வரியானது பாண்டியநாடு நீர்வளம் குறைந்த நாடு. நாட்டில் நீர் நிலைகளைப் பெருக்குதல் மன்னர் கடமையாகும். நீரின்றி உலகம் அமையாது. மக்களது யாக்கை உணவினால் ஆனது. அந்த யாக்கைக்கு உண்டி கொடுத்தோரே உயிர் கொடுத்தவர் ஆவார். உணவெனப்படுவது நிலத்தோடு நீராகும். நாட்டில் நீர்நிலைகளைப் பெருக்கியவரே உலகில் புகழைப் பெறமுடியும். அறம் முதலிய மூன்று உறுதிப் பொருள்களைப் பெறுவதற்கு நாட்டில் நீர்நிலைகளைப் பெருக்குதல் இன்றியமையாததாகும் என்று குடபுலவியனார் மன்னர்க்கு அறிவுறுத்தியுள்ளார்.

**குமட்டூர்கண்ணனார்**

இவர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பாடியவர்.

அறே அவ் அனைத்து அன்றியும் ஞாலத்துக்
கூலம் பகர்நர் குடி புறந்தரா அ

குடிப்புறந்தருள் பாரம் ஓம்பி

அழல் சென்ற மருங்கின் வெற்றி ஓடாது

மழைவேண்டு புலத்து மாரி நிற்ப

நோயோடு பசி இகந்து ஒரிஇ

பூத்தன்று பெரும நீ காத்த நாடே'' (பதிற். 13: 22–28)

நெடுஞ்சேரலாதனின் செங்கோன்மைத் திறத்தால் கோள்கள் நிலைதிரியாது மாரி பெய்யாது பெய்தலால் வளம்மிக்க மக்கள் பசியும் நோயுமின்றி வாழ்வதை இவர் தம் பாடலில் வலியுறுத்தியுள்ளார்.

**குறுங்கோரியூர் கிழார்**

இவர் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையின் ஆட்சிச் சிறப்பினையும், செங்கோன்மைத் திறத்தையும் பாடியவர். இவர் தம் பாடலில்,

''அம்புதுஞ்சுங் கடியரணால்

அறந்துஞ்சுஞ் செங்கோலையே'' (புறம். 20: 16–17)

என்ற பாடல் வரியானது செங்கோல் மன்னரின் நாடு காக்கும் அறநெறி பற்றி விளக்கியுள்ளார்.

**கோவூர்கிழார்**

புலமை நலம் வாய்ந்த சான்றோர் இவர். மன்னரிடையே மாறுபாடு தோன்றிய வேளையில் அஞ்சாது சென்று அறிவு கொளுத்திய அறவோர் ஒரு குடியில் பிறந்த வேந்தர்களுக்குள் பகை நிலவுதல் கூடாது என்று அப்பகையுணர்வு நீக்கப் பாடுபட்டவர். பொருளும், இன்பமும் அறத்து

வழிப்படும் என்ற கருத்தினை உவமை வாயிலாக எடுத்துக்கூறியவர். அரசன் எவ்வழி அவ்வழிக் குடிமக்களும் என்ற கருத்தின்படி நாடாண்ட நலங்கிள்ளியின் ஆட்சித் திறத்தினைப் பாராட்டியவர்.

சோழன் குளமுற்றுத்துஞ்சிய கிள்ளிவளவன் மலைமான மக்களைப் பகைமை காரணமாக யானைக்காலில் இட்டுக்கொல்ல முற்பட்டான். அதைக் கண்ட கோவூர்கிழார், சிபி தோன்றிய குடியில் பிறந்த அவன் மரபின் மாட்சியையும், மலைமானின் பகுத்துண்டு வாழும் தண்ணருளையும் எடுத்துரைத்தார். இதனை,

"தண்பகை கடிதல் அன்றியும் சேர்ந்தோர்
பசிப்பகை கடிதலும் வல்லன் மாதே" (புறம். 46)

என்ற பாடல்வரி உணர்த்துகின்றது.

சண்டையைக் காட்டிலும் சமாதானமே நாட்டுக்கு நன்மை தரும். மக்களுக்கு மகிழ்ச்சியான வாழ்வையளிக்கும் என்ற கருத்தைப் புலர்வகள் வலியுறுத்தியுள்ளதை இதன் மூலம் அறியலாம்.

**நரிவெரூஉத்தலையார்**

சேரமான் ஒள்வாள் கோப்பெருஞ்சேரலிரும்பொறைக்கு அரசியலறத்தை செவியறிவுறுத்தியவர் இவர். அன்பும், அருளும் உடையோரைச் சுற்றமாகக் கொள்ளற்க. நாட்டினைக் குழந்தையைக் காப்பதுபோல காத்தல் வேண்டும் என்ற அரசியல் நெறியினை அறிவுறுத்தினார். சான்றோரை நன்னெறிபடுத்துவதாக ஒரு பாடலைப் பாடியுள்ளார். அப்பாடலில்,

"நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்

அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்

எல்லாரும் உவப்பது அன்றியும்

நல்லாற்றுப் படுஉம் நெறியுமார் அதுவே" (புறம். 195)

பயனில்லாத மூப்பு வெறுக்கத்தக்கது. வாழ்வில் இறப்பு நிகழ்வது உண்மை. அது நிகழுமுன் நல்லது செய்தல் வேண்டும். நன்மை செய்ய இயலாது போனாலும் தீமை செய்யகூடாது என்ற அறநெறியை வலியுறுத்துகிறார். இவர் கூறிய அறநெறி எளியதும், இனியதும் அனைவரும் வாழ்வில் பின்பற்றக்கூடிய அறநெறியாக உள்ளதை அறியலாம்.

**நல்லந்துவனார்**

நல்லந்துவனார் நெய்தற்கலியை இயற்றியவர். தம் புகழ் கேட்டு நாணும் தன்மையுடைய சான்றோர் பிறர் துயரையும் தன்னுடைய துயர் போல போற்றி அவற்றை நீக்கி அறவழியில் ஒழுகுதல் சான்றோருக்குக் கடன் என்று சான்றாண்மை போற்றுகிறார். தன்னுயிர் போலத் தழுவி உலகத்து மன்னுயிர் காப்பவனே மன்னன் என்ற அறக் கருத்தையும் கூறியுள்ளார். கல்லாது முதிர்ந்தவன் நெஞ்சம் அருளற்றதாக இருக்கும். அருளில்லாதான் நெஞ்சம் இருண்டு நிற்கும் போன்ற அறநெறிகளை இவரது பாடல்களில் காண முடிகின்றது.[6]

நல்லந்துவனார் உவமை நலம்படப் பாடும் ஆற்றல் கொண்டவர். அறவுரைக்கு அறவுரையே உவமையாகப் பாடியுள்ளதை இதற்குச் சான்று காட்டலாம். சுற்றத்தார் வருந்துமாறு சேர்த்துவைத்த செல்வம், தாளில்லா

மன்னவன் குடிப்போல் அழியும் என்று அறவுரைக்கு அறவுரையினையே உவமை கூறியுள்ளார். ஆசிரியரை வருத்திக் கற்றவனின் கல்விச் செல்வமானது அழிந்து போகும் என்றும், செய்நன்றி மறத்தலாகிய அறக்கேடும் சூள் பொய்தலாகிய அறக்கேடும் அழிவினுள் செலுத்திவிடும் என்பது போன்ற அறநெறிகளையும் வலியுறுத்தியுள்ளார்.

**நெட்டிமையார்**

நெட்டிமையார் பாடியுள்ள பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் பேராற்றலையும் வேள்வித்திறத்தையும் ஒப்பிட்டுப் புகழ்ந்துள்ளார். பகைவர்க்கு அறிவித்து அவன் ஆற்றிய அறப்போர் குறித்துப் பாடியுள்ளார். பகைவர்க்கு இன்னா செய்தலும், தன்பால் வரும் ஆர்வலருக்கு இனிய செய்தலும் மன்னர்க்கும் அறமாகும் என்று அரசியலறம் உரைத்தவர். ஆ, அந்தணர், பெண்டிர், பிணியாளர், மக்களைப் பெறாதோர் ஆகியோரைப் பாதுகாப்புத் தேடிக்கொள்ளுமாறு அறிவித்தல் போர் அறமாகும் என்பதை இவரது பாடலானது புலப்படுத்துகிறது.

“ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்
தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
பொன்போல் புதல்வர் பெறா தீரும்
அம் அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் என
அறத்தாறு நுவலும் வேட்கை” (புறம். 12)

எனப் போரறம் வலியுறுத்துகிறார்.

அக்காலத்தில் போரால் பொதுமக்களின் உயிருக்கு ஆபத்து ஏற்படுவதில்லை. படைகளும், பண்டங்களும் தாம் போர்க்காலத்தில் பாழாகின. பொதுமக்களுக்கு அறிவித்த பின்னரே போர் தொடங்கினர். இவற்றிலிருந்து போர் செய்வதிலும் அறத்தோடு செயல்பட வேண்டும் என்ற அறநெறியினை நெட்டிமையார் பாடல் வலியுறுத்துவதை அறியலாம்.

**பரணர்**

பரணர் வரலாற்றுச் செய்திகளை மிகுதியாகப் பாடல்களில் அமைத்துப் பாடியுள்ளார். வறுமையைப் போக்குவதே கொடையறமாகும் என்று பேகனின் கொடைத் தன்மையைப் பரணர் பாராட்டியுள்ளார். இதனை,

"எத்துணை ஆயினும் ஈத்தல் நன்று என

மறுமை நோக்கிற்றோ அன்றோ

பிறர் வறுமை நோக்கின்று அவன்கை வன்மையே" (புறம். 141: 13–15)

மறுமைப் பயனை நோக்கிச் செய்யப்படுவது அறமாகாது. பிறருடைய வறுமையை போக்குவதே சிறந்த கொடையறமாகும் என்று பேகனின் கொடைத்தன்மையைப் பரணர் பாராட்டுகிறார். பேகனின் பிரிவினால் அவன் மனைவி அருந்துயராகும் நிலையினை எடுத்துக்கூறிய பரணர், தன் பாடல்களுக்குப் பரிசாக அவன் தன்னுடைய மனைவிக்கு அறஞ்செய்தல் வேண்டும் என்பதையும் அறிவுறுத்துகிறார்.

**பிசிராந்தையார்**

பாண்டிய நாட்டைச் சேர்ந்த பிசிர் என்னும் ஊரினர் கோப்பெருஞ்சோழனின் இனிய நண்பர். கோப்பெருஞ்சோழனைக் காணாத

நிலையிலும், அவனைக் கோள்வியுற்ற நிலையில் அவனுடன் உணர்வொத்த நட்புப் பூண்டவர். கோப்பொருஞ்சோழன் வடக்கிருந்ததைக் கேள்வியுற்றுத் தானும் வடக்கிருந்து உயிர் நீத்தவர்.

பாண்டியன் அறிவுடைய நம்பி குடிமக்களிடமிருந்து வரிவாங்கும் முறையில் தவறு செய்தான். அப்போது பிசிராந்தையார் அவனுக்கு வரி வாங்கும் நெறிமுறையை அறிவுறுத்தி அவனை நெறிப்படுத்தும் முகமாக ஒரு பாடலைப் பாடினார். இதனை,

“அறிவுடை வேந்த னெறியறிந்து கொளினே

கோடியாத்து நாடு பெரிது நந்தும்” (புறம் 184: 5–6)

என்பதே இவர் கூறும் இறைபெறும் அறநெறியாகும்.

**பெருஞ்சித்திரனார்**

பெருஞ்சித்திரனார் வறுமையின் கொடுமையைப் புலப்படுத்திப் பாடியுள்ளார். குமணன், வெளிமான் போன்ற வள்ளல்களால் ஆதரிக்கப் பெற்றவர். இவர் குமணனிடம் தாம் பெற்ற பெருவளத்தினை ஓம்பாது பகுத்துண்டு வாழும் பண்பினை உடையவர் தம் மனைவியிடம்,

“இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது

வல்லாங்கு வாழ்ந்து மென்னாது நீயும்

எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே” (புறம். 163: 5–7)

இன்னார் என்று கருதாது, தன்னைக் கேட்க வேண்டும் என்று கருதாமல் பிற்காலத்திற்குச் சேர்த்து வைக்காமல் எல்லோருக்கும் கொடுக்கும்

பண்பினன் என்பதைப் பெருஞ்சித்திரனார் பாடல் உணர்த்துகின்றது. இப்புலவர் பரிசில் யானையாயினும் பெறாமல் மறுக்கும் இயல்பினை உடையவர். மனமகிழ்ந்து கொடுக்கும் பரிசில் சிறிய குன்றுகளாக இருப்பினும் ஏற்கும் உள்ளத்தை உடையவர். இதனை,

''உயர்ந்து ஏந்து மருப்பின் கொல் களிறு பெறினும்

தவிர்ந்து விடுபரிசின் கொள்ளலென் உவந்துநீ

இன்புற விடுதி யாயின் சிறிது

குன்றியும் கொள்வல் கூர்வேல் குமண' (புறம். 159)

என்ற பாடல் வரி இதனை உணர்த்தும். இவற்றிலிருந்து பெருஞ்சித்திரனார் ஈதலறத்தை வலியுறுத்தியதை அறியமுடிகின்றது.

**மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர்**

மதுரையில் வாழ்ந்த கணக்காயனார்க்கு நக்கீரர் மகனாவார். இவர் ஈதலே சிறந்த அறம் என்று தம்முடைய பாடல்களில் வலியுறுத்தியுள்ளார்.

''செல்வத்துப் பயனே யீதல்

துய்ப்பே மெனினே தப்புந பலவே'' (புறம். 189: 7–8)

என்று அறநெறி வலியுறுத்தியுள்ளார். இல்லதார் மேற்கொள்ளும் அறநெறிகளாகச் சுற்றத்தாரின் துன்பத்தைத் தீர்த்தல், அவர்களுடன் மகிழ்தல், பகைவரை நட்பாக்குதல் போன்றவற்றை எடுத்துரைத்து பாடல்களில் வலியுறுத்தியுள்ளார். மேலும் புகழை விரும்பின் கட்டுப்பாடுடையவரின் செல்வமானது பலருக்கும் பயன்படும் என்ற அறக்கருத்தினை நக்கீரர்

மொழிந்துள்ளார். இவற்றிலிருந்து நக்கீரர் ஈதலால் உண்டாகும் அறத்தினை வலியுறுத்திய பாங்கினை அறியமுடிகின்றது.

**மதுரை மருதனிள நாகனார்**

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனுக்கு அரசியலறத்தை அறிவுறுத்தியுள்ளார். யானை, குதிரை, தேர், காலாள் போன்ற நான்கு வகையான படைகளை உடையதானாலும் அறநெறி முதற்றே அரசின் கொற்றம் என்று அறத்தின் சிறப்பினை வலியுறுத்தியவர். நமரெனக் கோல் கோடாதும், பிறரெனக் குணங்கொல்லாதும் செயல்படுதல் இவர் கூறும் அரசியலறங்களாகும். மருதனிளநாகனார் வாய்மை போற்றும் பண்பினை,

“வாழ்தல் வேண்டிப்

பொய்கூறேன் மெய்கூறுவல்” (புறம். 139: 5–6)

என்ற வரிகளில் எடுத்துரைக்கிறார். தலைவியைக் காட்டிலும் ஈதலறமே சிறந்தது என எண்ணிப் பொருள்வயிற் பிரிய எண்ணும் தலைவனை அகநானூற்றுப் பாடலில் காட்டியுள்ளார். வினைவயிற் பிரிய எண்ணும் ஆண்களில் அறம் இவற்றால் புலனாகிறது.

**மாங்குடி மருதனார்**

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் அவைப்புலவராக விளங்கியவர். போரின்பால் ஈடுபாடு கொண்ட பாண்டியனுக்கு,

'கரைபொரு திரங்குங் கனையிரு முந்நீர்த்

திரையிடு மணிலினும் பலரே யுரைசெல

மலர்தலை யுலக மாண்டு கழிநீ தோரே'' (மதுரைக். 235–237)

என்று உலகநிலையாமையை உணர்த்துகிறார். இவற்றிலிருந்து போரில் ஈடுபட்டு உழலும் பாண்டியனிடம் உலக நிலையாமையை உணர்த்தி அறம், பொருள், இன்பத்தினைக் கைக்கொள்ளுமாறு வலியுறுத்தியிதை அறியமுடிகின்றது.

**மாமூலனார்**

அரும்பொருள் வேட்கையின் காரணமாகத் தலைவன் தன்னைப் பிரிந்து சென்றாலும், தன்னிடம் பேரன்புடையவன் என்ற கருத்துடையவள் தலைவி. எனவே தான் துன்புற்றாலும் தலைவன் வினை தடைபடுதல் கூடாது என்று எண்ணும் தலைவியின் கடைமை உணர்வினை இவரது பாடல் விளக்கிக் காட்டுகின்றது. மேலும் கூற்றுவனால் இறப்பது சிறப்பில்லை என்று கருதும் பண்புடையவர் பண்டையத் தமிழர் என்பதில் இம்மையில் நன்மை செய்தாலும் தீமை விளையாது என்ற அறநெறியினை வலியுறுத்தியுள்ளார்.

**மோசிகீரனார்**

மோசிகீரனார் அரசனின் இன்றியமையாமையினைப் பாடியுள்ளார். இதனை,

"நெல்லுமுயிரன்றே நீரு முயிரன்றே

மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்'' (புறம். 186: 1–2)

என்ற பாடலடிகள் புலப்படுத்தும். மக்களுக்குத்தான் உயிர் என்பதை உணர்ந்து செயல்படுதல் மன்னரின் கடமை என்பதை எடுத்துரைத்தவர். பெருஞ்செல்வமுடைய மன்னரை நாடாமல் வள்ளல்களையே புலவர் நாடுவர். பெரும் பொருள் சிறியதாக இருந்தாலும் அளிப்பவரை இகழ மாட்டார்கள். வறுமையால் வாடியபோதும் தகுதியறிந்து அளிப்பதால் அவரைப் புகழ்ந்து பாடுவதை மரமாகக் கொளவர் என்று புலவர் இயல்பு குறித்து கொண்கானங் கிழானுக்கு எடுத்துரைத்தவர். இப்பாடல் மூலம் பிறர்க்குத் தீமையறியாப் புலவர் வாழ்க்கையின் பண்பும், வள்ளல்களின் கொடைத்தன்மையும் வெளிப்படுகின்றன.

**வெள்ளைக்குடி நாகனார்**

வெள்ளைக்குடி நாகனார் புலமை நலம் வாய்ந்த சான்றோர். இவர் சோழன் குளமுற்றுத்துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடிப் பழஞ் செய்கடன் வீடு கொண்டவர். அம்மன்னனுக்கு அரசியலறம் உரைத்தவர். செங்கோல் தவறாமல் முறை வேண்டியோர்க்கு மன்னர் முறை வழங்கல் வேண்டும். வெயிலினின்றும் அருள்செய்து பாதுகாத்தல் வேண்டும். நாட்டில் விளைவு குன்றினாலும், மழை பெய்தாலும் இயற்கைக்கு மாறான நிகழ்ச்சிகள் நடைபெற்றாலும் மன்னனைக் காரணமாக்குவர். எனவே மன்னன் உழவர் குடிகளைப பாதுகாக்க வேண்டும். பகைவரிடமிருந்து நாட்டைக் காப்பது படை பலம். அப்படைகளுக்கு உணவளித்துக் காப்பவர் உழவர். ஆகவே அவ்வுணவினை விளைவித்துக் கொடுக்கும் உழவரின் குடியைப் பாதுகாத்தல் வேண்டும் என்பதை,

"பகடுபுறந் தருநர் பாமோம்பிக்

குடியுறந் தருகுவை" (புறம். 35: 32–34)

என்று அரசியலறம் பற்றி செவியறிவுறுத்துகிறார். மன்னர்க்குரிய அறநெறிகளான நாடுகாப்பது முறைசெய்தல், குடிமக்களைக் காப்பாற்றுதல் போன்ற அறநெறிகளை வெள்ளைக்குடி நாகனாரின் பாடல் வலியுறுத்துகின்றதை அறியலாம்.

**பெண்பாற் புலவர்கள்**

சங்ககாலப் பெண்புலவர்கள் தங்களுடைய பாடல்களில் அரசியல் நிலைகளையும் அருள் நிலைகளையும், தனிமனிதன் அவலத்தையும் தனிமனிதனின் தன்மான உணர்ச்சியையும் பாடுபொருளாக அமைத்துப் பாடியுள்ளனர். சமுதாயத்தை நல்லாற்றுப்படுத்திய அறிவு சான்ற பெண்பாற் புலவர்களும் அவர்கள் கூறிய அறநெறிக் கருத்துக்களும் சங்க காலத்தில் ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவே அமைந்தது.

**குறமகள் இளவெயினி**

சங்ககால மறக்குடியில் வந்த தமிழ்ப்பெண் முறத்தால் புலியை விரட்டிய செய்தி நாடறியும். அத்தகைய வீரத்தாயின் திருமகள்,

"தமர்தன் தப்பின் அது நோன்றல்லும்

பிறர்க்கை யறவு தான் நானுதலும்

படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்

வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்" (புறம். 157)

ஆகிய உயரிய குணங்களுக்கு உரியவள். உறவினருடைய குற்றத்தைப் பொறுத்தலும் பிறருடைய வறுமைக்கு நாணம் கொள்ளுதலும் படையில் பழிக்கப்படாத வன்மை உடையவனாகத் திகழ்தலும் மன்னர் கூறிய அவைக்களத்தில் மேம்பட நடத்தலாகிய குணங்களுடன் வீரர் திகழ வேண்டுமெனக் குறமகள் இளவெயினி குறிப்பிடுகின்றார்.

**வெண்ணிக்குத்தியார்**

பெண்மைக்கு மென்மை இருப்பிடம். ஆனால் தன்மான உணர்வை முதன்மைப்படுத்தும் உயரிய நோக்கமும் பண்பாட்டு உச்சமும் பெண்ணிடத்தே இரண்டறக் கலந்துள்ளது. தன்மான உணர்வென்பது அரசியல் வாழ்க்கை. போரில் வெல்வதும் வெற்றிப் பெறுவதும் வீரனுக்கு அழகு. களத்திலே புறங்கெடாத ஒரு வீரனின் முதுகில் புறப்புண் ஏற்படுகிறது. அப்புறப் புண்ணானது தன் ஆண்மைக்கு இழுக்கென்று எண்ணி வடக்கிருந்து ஒரு மன்னன் உயிர்விடத் துணிகின்றான் என்றால் அவனுடைய மான உணர்வு எத்தகையது என்பதை,

"..................... நின்னினு நல்ல னன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புக ழுலக மெய்தி
புறப்புண் ணாணி வடக்கிருந்தோனே" (புறம். 66)

என்ற பாடல் மூலம் உணர முடிகின்றது. மானம் பெரிதென எண்ணி உலகம் புகழுமாறு வடக்கிருந்து உயிர்நீத்தான். உன்னிலும் அவனே நல்லவன் என்று வடக்கிருந்து உயிர்நீத்த மன்னனின் புகழை வெண்ணிக்குயத்தியார் பாடுகிறார்.

**ஔவையார்**

சங்க இலக்கியத்தில் அகத்திணையிலும் புறத்திணையிலும் ஔவையார் பாடல்களைப் பாடியுள்ளார். இவர் அதியமானிடம் நட்பு பூண்டு பழகியவர். அதியமானின் நற்பண்புகளைப் பாடல்களாகப் பாடியவர். அவன் பகுத்துண்டு ஓம்பும் குணமுடையவன் என்றும், இல்லோர் ஒக்கல் தலைவன் என்றும் அவனுடைய அறப்பண்பினை வியந்து பாராட்டியவர். எளிமையும் பெருமிதமும் நிறைந்த புலவர் வாழ்க்கைச் சிறப்பினை,

"எத்திசைச் செலினு மத்திசைச் சோறே" (புறம். 206: 13)

எனப் போற்றி உரைத்தவர். போரில் இறக்காமல் நோயினால் மூப்பினால் இறப்போரை வாளாற் கீறி அடக்கம் செய்யும் மரபு பற்றி இவரது பாடல் விளக்குகின்றது.

ஔவை தொண்டைமானின் படைகலத்தை அதியமானின் படைகலத்தோடு ஒப்பிட்டு போரைத் தடுத்தார். மன்னர்களிடையே பூசல் ஏற்பட்டபோது அவ்வேந்தர்கள் ஒற்றுமை பண்பு ஓங்க வேண்டும் என்று வலியுறுத்தியவர். அரசியலை அறநெறியில் செலுத்தி பொருளீட்டி இரவலர்க்குக் கொடுத்து உலகில் இன்பமாக வாழ்தல் வேண்டும் என்று வேர்ந்தர்க்கு அரசியலறம் அறிவுறுத்தியவர். நானிலங்களை உடையது இவ்வுலகம். நிலத்திற்கும் பெருமை ஏற்படுவது அங்கு வாழும் மக்களால்தான். எனவே மக்கள் அனைவரும் பண்புடையவர்களாக விளங்க வேண்டும் என்பது ஔவையார் கூறும் அறநெறிகளாகும்.

**காக்கைப்பாடினியார்**

நச்செள்ளையார் இவரது இயற்பெயராகும். காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கையைப் பாடலில் அமைத்துப் பாடியதால் காக்கைப் பாடினியார் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றவர். போர்க்களத்தில் தன் மகன் மார்பில் புண்பட்டு மடிந்துகிடப்பதைக் கண்ட தாயின் நிலையினை,

“படுமகன் கிடக்கை காணுஉ

ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே” (புறம். 278: 8–9)

எனப் போற்றியுரைத்துள்ளார். பெண்களும் வீரம், மானம், நாட்டுப்பற்று ஆகிய உணர்வுகளைப் பெற்றுச் சிறந்திருந்தனர் என்பதை இவருடைய புறநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதனுக்கு அமைச்சர் நிலையிலே நின்று அரசியலறம் உரைத்தவர் காக்கைப் பாடினியார். விறலியரின் ஆடல் பாடல்களிலே மனஞ் செலுத்தியிருந்த சேரலாதனிடம் அறிவிலே மெல்லியன் போலும் இவ்வேந்தன் என்று பிறர் எண்ணுதற்கு இடங்கொடுத்தல் கூடாது என்று அறிவுறுத்தியவர்.

இரவலர்க்குக் கொடுத்து இன்பம் பெற விழைபவன் சேரலாதன் என்பதை,

“வாரா ராயினு மிரவலர் வேண்டித்

தேரிற் றந்தவர்க் கார்பத னல்கும்” (பதிற்று. 55: 10–11)

என்று புகழ்ந்துரைக்கின்றார். எனவே காக்கைப் பாடினியார் அரசியலில் ஈடுபட்டு அரசரை நெறிபடுத்தும் அறவோராக விளங்கியதை அவரது பாடல்கள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

## பொன்முடியார்

சமுதாய நிலையில் ஒவ்வொருவரும் ஆற்றவேண்டிய அறங்களைப் பொன்முடியார் பாடல் தெளிவாகக் காட்டுகின்றது.

“ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே

சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே

வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே

நன்னடை நல்கல் வேந்தற் கடனே

ஒளிறு வாள் அருஞ்சமம் முடுக்கிக்

களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே” (புறம். 312)

மகனைப்பெற்றுக் காப்பாற்றுதல் தாயின் கடமை. சான்றோனாக வளர்ப்பது தந்தையின் கடமை. வீரனுக்கு வேல் வடித்துத் தருதல் கொல்லனின் கடமை. நல்லொழுக்கத்திற்கு வழிகாட்டுதல் வேந்தனின் கடமை என்று அவரவர்குரிய கடமைகளை வரையறுத்துள்ளார். மற்றொரு பாடலில் மார்பில் தைத்த வேலைக் கண்டிருப்பின் மேலும் ஒரு யானையைச் சாய்த்திருப்பேன என்று கூறும் வீரமகனைப் பெற்ற தாயின் உணர்ச்சியைப் பொன்முடியார் பாடல் சித்தரிக்கின்றது.

இவற்றிலிருந்து பொன்முடியார் பாடல்களில் சங்க கால மகளிர் வீர உணர்வும், நாட்டுப்பற்றும் கொண்டிருந்ததையும், அவரவர் தமது கடமையைச் செய்து மக்கள் அறவாழ்வு வாழ்ந்ததையும் அறியமுடிகின்றது.

**பெருங்கோப்பெண்டு**

இவர் பூதப்பாண்டியனின் மனைவியாவாள். இவள் அரசியலறிவு நிரம்ப பெற்றவள். பூதப்பாண்டியன் இறந்தபோது அரசாட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுமாறு சான்றோர் வேண்டியும் அதனை ஏற்காது மறுத்து கணவனுடன் உடன்கட்டை ஏறி உயிர் நீத்தவள். அவள் பாடியுள்ள பல்சான்றீரே என்று தொடங்கும் பாடல் பத்தினி பெண்டிரின் இயல்பை விளக்கும். கைம்மை நோன்பின் கொடுமையை எடுத்துரைப்பது கணவன் இறந்தபின் பெண்ணுக்கு வாழ்வில்லை என்ற அக்காலச் சூழலை உணர்த்துகிறது.

"உயவற் பெண்டிரே மல்லே மாதொ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட்டீமம்
நுமக்காரி தாருக தில்ல வெமக்கெம்
பெருந்தோட கணவன் மாய்ந்தென வரும்படி
வள்ளித ழவிழ்த தாமரை
நள்ளிரும் பொய்க்கையுந் தீயுமோ ரற்றே" (புறம். 246)

பத்தினிப் பெண்கள் கணவன் இறந்தபின் உயிர்வாழமாட்டார். நள்ளிரும் பொய்கையும் ஈமத்தீயும் அவர்க்கு ஒன்றே என்று கருதும் பண்புடையவர் எனப் பத்தினிப் பெண்டிர் நெறியினைப் பெருங்கோப்பெண்டின் பாடல் விளக்குகிறது.

**வெண்பூதியார்**

வெண்பூதியார் தனது பாடலில் தலைவன் அருளைக் காட்டிலும் பொருளையே பெரிதாக எண்ணும் திறத்தினை,

“பொருள்வயிற் பிரிவா ராயனிவ் வுலகத்துப்

பொருளே மன்ற பொருளே

அருளே மன்ற வாருமில் லதுவே” (கு. 174)

மேற்கணட வரிகளில் புலப்படுத்துகிறார். தலைவியின்பால் அன்புடனும் அருளுடனும் ஒழுக வேண்டியவன் தலைவன் என்பதும், அருளையும் அன்பையும் நீக்கித் துணையைத் துறத்தல் இல்லற நெறியன்று என்பது வெண்பூதியாரின் பாடல் உணர்த்தும் அறநெறிகளாகும்.

இவ்வாறு தமிழ்புலவர் பெருமக்கள் மன்னர்க்கு அரசியற் சூழ்ச்சிக்குரிய அமைச்சராகவும், அறிவுரை கூறி நன்று, தீது உணர்த்தி நல்லாற்றின் நிறுத்தும் ஆசிரியராகவும் உடன்தோன்றினாரிடையே மாறுபாடு நிகழுங்காலை நடுநின்று அக்குல முதியோராகவும் விளங்கினர். உடல், இளமை, பொருள் முதலியவற்றின் நிலையாமைகளை நெஞ்சத்தில் பதியுமாறு எடுத்துரைத்த அறவோராகவும், காதலிகந்து கைவிடப்பட்ட கற்பரசியரை அவர் தங்கணவரோடியைந்து நீதி பல கூறி நெறி பிறழாவண்ணம் வாழ்க்கையில் நிலைப்படுத்தும் நல்லுறவினராகவும் விளங்கினர்”[3] என்பதை அறியமுடிகின்றது. மேலும்,

“புலவர்கள் வீரநிலைக் காலமாகிய சங்க காலத்தில் அரசர்களை மகிழ்விப்பதோடு அவர்தம் புகழ் பரப்பும் வாயிலாகவும் பணிபுரிந்தனர்”[4] என்கிறார் வே. முத்துலட்சுமி. இவற்றிலிருந்து சங்க காலத்தில் நல்ல சமுதாயம் வாழ அறநெறிகளை எடுத்துரைத்து மன்னரையும் மக்களையும் நெறிப்படுத்தி அறவோராகப் புலவர்கள் திகழ்ந்தனர்.

## தொகுப்புரை

சங்க இலக்கியங்கள் தமிழ்ப்பண்பாட்டின் கருவூலங்கள் என்ற சிறப்பிக்கப்படுமளவிற்குப் பண்பாட்டுக் கூறுகளையும், வாழ்வியல் நெறிகளையும், மக்களும், மன்னர்களும் கடைப்பிடித்தொழுக வேண்டிய அறநெறிச் சிந்தனைகளையும் சங்க இலக்கியங்களில் நெட்டோட்டமாகக் காணப்படுகின்றதனை இவ்வியல் எடுத்துக்காட்டியுள்ளது. அம்மூவனார், ஆலந்தூர் கிழார், ஆவூர் மூலங்கிழார், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், ஒதலாந்தையார், கணியன் பூங்குன்றனார், கபிலர், காரி கிழார், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், குடபுலவியனார், குமட்டூர்கண்ணனார், குறுங்கோரியூர் கிழார், கோவூர்கிழார், நரிவெரூஉத்தலையார், நல்லந்துவனார், நெட்டிமையார், பரணர், பிசிராந்தையார், பெருஞ்சித்திரனார், மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரர், மதுரை மருதனிள நாகனார், மாங்குடி மருதனார், மாமூலனார், மோசிகீரனார், வெள்ளைக்குடி நாகனார், குறமகள் இளவெயினி, வெண்ணிக்குத்தியார், ஔவையார், காக்கைப்பாடினியார், பொன்முடியார், பெருங்கோப்பெண்டு, வெண்பூதியார் முதலிய புலவர்கள் அறநெறிச் சிந்தனைகளைப் பாடியுள்ள திறன் இவ்வியலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

## மேற்கோள் விளக்கம்

1. கு. மோகனராசு, தொல்காப்பியர் ஓர் அறவாணர், ப. 15

2. இராம பெரியகருப்பன், பரிசில் வாழ்க்கை, ப. 10

3. மு. கதிரேச செட்டியார், உரைநடைக் கோவை, ப. 52

4. வே. முத்துலட்சுமி, பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள், ப.220

# முடிவுரை

தமிழ்மொழியின் தொன்மையான இலக்கியங்களாக விளங்குகின்ற சங்க இலக்கியங்கள் பழந்தமிழர்களின் வாழ்வியல் நெறிகளைக் காட்டுவனவாகவும் பழந்தமிழகத்தின் சமூக, அரசியல், பொருளியல் நிலைகளைச் சுட்டிக்காட்டும் ஆவணங்களாகவும் விளங்குவனவாகும். அத்தகைய சங்க இலக்கியங்களை அறவியல் நோக்கில் ஆராய்ந்த இந்த ஆய்வின் விளைவாகக் கண்டறியப்பட்ட முடிவுகள் இங்குத் தொகுத்துத் தரப்படுகின்றன.

அறம் மனிதவரலாற்றுடன் தொடர்புடையதாகும். மனித வளர்ச்சியை போன்றே அறவளர்ச்சியும் தொடர்கின்றது. பண்டைத் தமிழர் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றையும் உறுதிப் பொருள்களாகக் கொண்டனர். தொல்காப்பியம் பண்டைத்தமிழரின் வாழ்க்கை அறத்தை வகுத்துக் கூறும் வாழ்விலக்கண அகப்பொருள் அறத்தையும், புறப்பொருள் அறத்தையும், தெளிவுபடுத்துகிறது. தொல்காப்பியம் சுட்டும் இலக்கியக் கொள்கைகளின் அடிப்படையில் சங்க இலக்கியங்கள் அமைந்துள்ளன. நீதி இலக்கியங்கள் அறம் உணர்த்துவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ளன. ஐம்பெருங்காப்பியங்கள் நீதி, இல்லறம், முக்தியறம் போன்ற அறங்களைக் கூறுகின்றன. பக்தி இலக்கியங்கள் சமய அடிப்படையில் அறங்களை வலியுறுத்துகின்றன. சிற்றிலக்கியங்களும் இக்கால இலக்கியங்களும் வெவ்வேறுபாடுபொருள்களைக் கொண்டிருந்தாலும் சமூகச் சூழலுக்கேற்ப அறக்கருத்துகளை அவை முன்வைத்துள்ளன.

ஒத்த உடல்வளமும் உள்ள வளமும் பெற்ற ஓர் ஆடவனும் பெண்ணும் அன்பினால் இணைகின்ற தமிழர் மரபாகிய காதல் வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் ஊரார் அறிய மணம்புரிந்து இல்லறம் என்ற கற்புநெறியில் வாழவேண்டும் என்பது அக இலக்கியம் உணர்த்தும் அறமாகும்.

களவியல் ஒழுக்கத்தில் ஈடுபட்டுள்ள காதலர்களின் செயல் அவர்தம் பெற்றோர்களிடம் நேரிடையாக கூற இயலாத நிகழ்வுவாகும். அது களவில் ஈடுபட்டுள்ள தலைவியின் தோழி வாயிலாகச் செவிலித் தாய்க்கும், செவிலித்தாய் வாயிலாக நற்றாய்க்கும், தாய்வாயிலாகத் தனயன், தந்தை ஆகியோர்க்கும் படிப்படியாக எடுத்துரைக்கப்படும் பாங்கை அகஇலக்கியங்கள் சுட்டும் களவியல் அறநெறியாகக் கொள்ளலாம்.

களவெழுக்கம் திருமணத்திற்குப் பின் கற்பியல் ஒழுக்கமாக மாறுகின்ற சூழலில் நல்ல வழியில் பொருள் ஈட்டுதல், ஈட்டிய பொருளைத் தேவைப்படுவோர்க்குக் கொடுத்தல், விருந்தோம்பல் முதலிய பண்புகள் இல்லற அறநெறிகளாக அகஇலக்கியங்களில் குறிப்பிடப்படுகின்றன.

பண்டைத் தமிழகத்தில் முடியாட்சி நிலவியது. இருப்பினும் மக்களுடைய நலம்பேணும் குடியாட்சி பண்பு மேலோங்கி இருந்ததைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. அரசர்கள், நாட்டு மக்களைத் துன்பமின்றிக் காப்பதையும், செங்கோல் அரசாட்சி செய்வதையும் தம்முடைய கடமையாக, அறமாகக் கொண்டனர் என்பதைப் புற இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன. மன்னர் அரசியற்பண்பு பல பெற்று கொடையறம் மேற்கொண்டு வாழ்ந்தனர் என்பதையும் புற இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. மன்னர் மக்களை வருத்தி வரிவாங்குதல் தவறு என்பதைப்

புலவர்கள் மன்னர்களுக்குத் துணிவுடன் அறிவுறுத்தியதைப் புறஇலக்கியங்களில் காணமுடிகின்றது. சங்கப் புறஇலக்கியங்கள் பண்டைத் தமிழரின் போர்களையும், போர் முறைகளையும் அவர்கள் பின்பற்றிய போரறங்களையும் விரிவாகக் கூறுகின்றன. பண்டைத் தமிழர் போரில் ஈடுபட்டாலும் தகுந்த காரணங்களுக்காகவே போரிட்டனர். தேவருலகமே தமக்குப் பரிசாகக் கிடைத்தாலும் சொன்ன சொல் காக்கும் வாய்மையறத்தை பின்பற்றுதல் வேண்டும் என்பதைச் சங்கப்புற இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகின்றது.

தனிமனிதர்கள் செய்யும் அறங்கள் சமுதாய மேம்பாட்டை உருவாக்குகின்றன. சமுதாயத்தில் மக்களால் கடைப்பிடிக்கப்படும் அறங்கள் சமுதாய அறங்களாகும். சங்க காலத்தில் அரசர், அந்தணர், வணிகர் வேளாண் மாந்தர்கள் அவரவர் செய்யும் தொழில் அடிப்படையில் அறம்புரிந்து வாழ்ந்தனர். அறமல்லாத செயல்கள் புரிந்தால் பழிவரும் என்று அஞ்சி அறம்புரிந்து வாழ்ந்தனர் பண்டைத் தமிழர். சங்கச் சமுதாயத்தில் ஒழுக்க நெறி போற்றப்பட்டது. சான்றோரின் அறவுரைகள் எல்லாம் சமுதாயத்திற்குப் பயனுள்ளதாகவே அமைந்தன. சங்ககால சமுதாயத்தில் மக்கள் பின்பற்றிய சமயங்கள் குறித்து குறிப்பிடத்தக்கப் பதிவுகள் இல்லையெனினும் அறத்தையே அறக்கடவுளாக நினைத்து மக்கள் வாழ்ந்தனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகின்றது. மக்களுக்கு இடையறாமல் இன்சுவை அளிக்கும் அறச்சாலைகள் இருந்தமையையும் சங்க இலக்கியங்கள் விளக்கிக் காட்டுகின்றன.

சங்ககாலப் புலவர்கள் குடிமக்களை வருத்தி வரி வாங்குதல் கூடாது என்ற அறநெறியினை மன்னருக்கு எடுத்துக்கூறினர். தம்மை அடைந்தவரைக் காக்கும் வாழ்வியலறங்களையும், உயர்ந்தோரின் நட்பு உயர்ந்தது முதலிய தனிமனித அறங்களையும் அறிவுறுத்தியுள்ளனர். பரிசாகப் பெற்ற பொருளைப் பாதுகாத்து வைக்காமல் பலருக்கும் பகுத்துக்கொடுத்து மகிழ வேண்டும் என்ற மனித நேயத்தினையும் எடுத்துரைத்துள்ளனர். புலவர் நெறியும் புலவரின் பெருமித வாழ்க்கையும் எடுத்துரைக்கும் புலமைச் சான்றோரின் பாடல்களில் பல்வகை அறங்களையும் காணமுடிகின்றது. பெண்பாற் புலவர்களின் பாடல்களில் பெண்களின் மறமாண்பு வாழ்வியல் நெறிகள் போன்றவை வலியுறுத்தப்பட்டுள்ளன. இத்தகைய அறநெறிகளைப் பாடியுள்ள புலவர்களுள் அம்மூவனார், ஆவூர் மூலங்கிழார், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், ஓதலாந்தையார், கணியன் பூங்குன்றனார், குமட்டூர்க்கண்ணனார், கோவூர்க்கிழார், நல்லந்துவனார், கபிலர், பரணர், பிசிராந்தையார், நரிவெரூஉத்தலையார், பெருஞ்சித்திரனார், மாங்குடி மருதனார், ஔவையார் போன்றோர் குறிப்பிடத்தக்கவராவர்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


1. ஆலிஸ்.ஆ. (உ.ஆ.) – பதிற்றுப்பத்து மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

2. ஜெயபால்.இரா. (உ.ஆ.) – அகநானூறு மூலமூம் உரையும்
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

3. தட்சினாமூர்த்தி.அ. (உ.ஆ.) – ஐங்குறுநூறு மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

4. நாகராசன்.வி. (உ.ஆ.) – குறுந்தொகை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

5. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.) – புறநானூறு மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

6. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.) – நற்றிணை மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

7. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.) – பரிபாடல் மூலமும் உரையும்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

8. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.) – கலித்தொகை
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

9. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.) – பத்துப்பாட்டு – தொகுதி–1
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

10. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ.) – பத்துப்பாட்டு – தொகுதி–2
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
சென்னை
முதற்பதிப்பு–2004.

## துணை ஆதாரங்கள்

1. அறவாணன்.க.ப. – அற்றைநாட் காதலும் வீரமும்
பாரி நிலையம்
சென்னை
முதற்பதிப்பு–1978.

2. இளம்பூரணர் (உ..ஆ.) – தொல்காப்பியம்
பொருளதிகாரம்
கழக வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு–1969.

3. இலக்குவனார்.சி. – தொல்காப்பிய ஆராய்ச்சி
வள்ளவர் பதிப்பகம்
புதுக்கோட்டை
இரண்டாம் பதிப்பு–1961.

4. இறையரசன். – நாலடியார் உரைவளம்
மணிமேகலை
சின்னதாராபுரம்
முதற்பதிப்பு–1992.

5. கதிரேசச்செட்டியார். மு. – உரைநடைக்கோவை
பழனியப்பா பிரதர்ஸ்
சென்னை
ஏழாம் பதிப்பு–1963.

6. கலியாணசுந்தரம். வி. – பெண்ணின் பெருமை
திருநெல்வேலி சைவ
சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம், சென்னை
முதற்பதிப்பு–1982.

7. கோவிந்தன். வை. (பதி.) – பாரதியார் கவிதைகள்
தென்றல் நிலையம்
சிதம்பரம்
முதற்பதிப்பு–2003.

8. சாமிசிதம்பரனார். – எட்டுத்தொகையும்
பண்டைத் தமிழரும்
இலக்கிய நிலையம்,
சென்னை
முதற்பதிப்பு–2003.

9. சரளாராசகோபாலன் – சங்க இலக்கியம்
ஔிப் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு–1998.

10. சிங்காரவடிவேலன். அர. – சங்க இலக்கிய உவமைகள்
பழநியப்பன் பதிப்பகம்
தேவகோட்டை
முதற்பதிப்பு–1986.

11. தட்சிணாமூர்த்தி.அ. – தமிழர் நாகரிகமும்
பண்பாடும்
வெற்றிச் செல்வன் பதிப்பகம்
தஞ்சாவூர்
இரண்டாம் பதிப்பு–1980.

12. தனிநாயகஅடிகளார் – தமிழ்த்தூது
பாரி நிலையம்
சென்னை
பதிப்பு–1962.

13. திருநாவுக்கரசு, க.த. – திருக்குறள் நீதி இலக்கியம்
சென்னைப்
பல்கலைக்கழகம்
சென்னை
மறுபதிப்பு–1977.

14. தேவநேயன்.ஞா. – பழந்தமிழாட்சி
திருநெல்வேலி சைவசித்தாந்த
நூற்பதிப்புக் கழகம்
சென்னை
முதற்பதிப்பு–1961.

15. நாயுடு அ.கி. – தொல்காப்பியர் கண்ட
தமிழர் சமுதாயம்
முப்பால் நிலையம்
கோவை–4
பதிப்பு–1962.

16. பாஸ்கரதாஸ்.ஈ.கோ. – அகப்பொருள் பாடல்களில் தோழி
சோலை நூலகம்,
மதுரை–20
முதற்பதிப்பு–1977.

17. பாண்டுரங்கன்.கி. – பண்டையத் தமிழர் போரியல் வாழ்க்கையும் தற்காலப் போர் நடவடிக்கையும்
வெற்றிவேல் வெளியீடு
சென்னை–17
பதிப்பு–1986.

18. பெரியகருப்பன். இராம – பரிசில்வாழ்க்கை
சோலை நூலகம்,
மதுரை
மூன்றாம் பதிப்பு–1977.

19. மாணிக்கம்.வ.சுப. – தமிழ்க்காதல்
பாரி நிலையம்
சென்னை
முதற்பதிப்பு–1962.

20. முத்துலட்சுமி.வே. – பண்டைத்தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்
கவிக்குயில் பிரிண்டர்ஸ்
சென்னை–5.

21. மோகனராசு.கு. – தொல்காப்பியர் ஓர் அறவாணர்
ஸ்டார் பிரசுரம்
சென்னை–5,
முதற்பதிப்பு–1987.

22. ராஜ்கௌதமன் – தமிழ்ச் சமூகத்தில் அறமும் ஆற்றலும்
விடியல் பதிப்பகம்
கோயமுத்தூர்
முதற்பதிப்பு–2008.

23. வெள்ளைவாரணன்.க. – தொல்காப்பியம் களவியல் உரைவளம்
பதிப்புத்துறை
முதற்பதிப்பு–1999.

## அகராதிகள்

24. பாலுசாமி.ந. (முதன்மைப் பதிப்பாசிரியர்) – வாழ்வியற் களஞ்சியம்
தொகுதி–2
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
1986.

25. பாலுசாமி.ந. (முதன்மைப் பதிப்பாசிரியர்) – வாழ்வியற் களஞ்சியம்
தொகுதி–8
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்
1958.